# DIFFERENCE OF MEANING AMONG THE PHONETICALLY IDENTICAL WORDS IN TAMIL MALAYALAM SPOKEN LANGUAGE - A SEMANTIC STUDY

*Thesis Submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil.*

**PAULRAJ R.**

**DEPARTMENT OF TAMIL**

( RESEARCH CENTRE)

UNIVERSITY OF KERALA, KARIAVATTOM CAMPUS

THIRUVANANTHAPURAM- 695 581

JULY- 2021

# தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை பொருள் வேற்றுமையுடைய சொற்களில்- சொற்பொருள் ஆய்வு

முனைவர் பட்டத்திற்காகக் கேரளப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்படும் ஆய்வேடு

பால்ராஜ் ரா.

முனைவர் ஹெப்ஸி ரோஸ் மேரி அ.
(நெறியாளர்)

**தமிழ்த்துறை & ஆய்வு மையம்**

கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்ட வளாகம்,
திருவனந்தபுரம் - 695 581

ஜூலை -2021

PAULRAJ.R
Research Scholar,
Department of Tamil
University of Kerala,
Kariavattom Campus – 695 581,
Thiruvananthapuram.

# DECLARATION

I hereby declare that the thesis entitled **“ DIFFERENCE OF MEANING AMONG THE PHONETICALLY IDENTICAL WORDS IN TAMIL MALAYALAM SPOKEN LANGUAGE - A SEMANTIC STUDY”** being submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil is a record of bonafide research work done by me. No part of thesis has previously been submitted for the award of my Degree or Diploma of any University.

Place : Kariavattom

Date : PAULRAJ R.

**Dr. HEPSY ROSE MARY A. MA., Ph.D.,**

Assistant Professor,
Department of Tamil,
University of Kerala,
Kariavattom- 695 581,
Thiruvananthapuram.

# CERTIFICATE

This is to certify that the thesis entitled **"DIFFERENCE OF MEANING AMONG THE PHONETICALLY IDENTICAL WORDS IN TAMIL AND MALAYALAM LANGUAGE A SEMANTIC STUDY"** here with submitted by Mr. PAULRAJ R. for his Ph.D. Degree is an authentic record of research carried out by under my supervision and guidance in the Department of Tamil, University of Kerala, Kariavattom, Thiruvananthapuram and that the thesis has not previously formed the basic for the award of any Degree, Diploma, Associate ship, fellowship or other similar title. The thesis represents entirely an independent work on the part of the candidate but for the general guidance offered by me.

Place : Kariavattom — Dr. Hepsy Rose Mary A.

Date : — (Supervising Teacher)

# நன்றியுரை

ஆய்வின் தொடக்ககாலம் முதல் முடிவுற்ற காலம் வரையில் ஏற்பட்டுள்ள பல தடைகளையும் நீக்கி இதுவரை என்னை வழிநடத்திய இறைவனுக்கு முதற்கண் நன்றி கலந்த வணக்கத்தைச் சமர்ப்பிக்கின்றேன்.

**“தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு”** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்த கேரளப் பல்கலைக் கழகத்திற்கும், தமிழ் துறைக்கும் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

ஆய்வேட்டினை முறையாகவும் செம்மையாகவும் செய்து முடிக்க தகுந்த ஆலோசனைகள் வழங்கியதுடன், ஆய்வைச் சிற்பம் போல் செறிவாக வடிவமைத்துத் தந்த நெறியாளரும், சிறந்த குருவுமாக விளங்கும் முனைவர், ஹெப்ஸி ரோஸ் மேரி அ. அவர்களுக்கு உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வினை மேற்கொண்டிருந்த காலத்தில் ஆய்வு தொடர்பான கலந்துரையாடல் நிகழும்போதெல்லாம் தக்க ஆலோசனைகளை வழங்கி என்னை ஊக்கப்படுத்திய தமிழ்த் துறைப் பேராசிரியர்களான முனைவர் ப.ஜெயகிருஷ்ணன் அவர்களுக்கும் முனைவர் த. விஜயலட்சுமி அவர்களுக்கும், முனைவர் அ.பிரசில்லா அவர்களுக்கும், முனைவர் லீமா மெட்டில்டா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின் போது பல அறிவுரைகளை வழங்கியதோடு மட்டுமின்றிப் பல்வேறு வகையிலும் எனக்கு உதவிய விரிவுரையாளரான முனைவர் முத்துலட்சுமி மற்றும் முது முனைவர் பட்ட ஆய்வாளரான முனைவர் சிவா வெங்கடேஷ் அவர்களுக்கும் நன்றி கூறிக்கொள்கிறேன்.

ஆய்வின் தொடக்கத்தில் மொழியியல் குறித்த ஐயங்களைத் தெளிவுபடுத்தித் தந்த முனைவர் டார்வின் அவர்களுக்கும், உற்ற நேரங்களில் தேவைப்பட்ட கருத்துக்களைக் கூறிய பேராசிரியரான முனைவர் மனோகரன் அவர்களுக்கும் மலையாளத்துறைப் பேராசிரியர் முனைவர் ஷிஜீ அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வின் தொடக்கத்தில் இருந்து கள ஆய்விற்கு என்னுடன் வந்த சந்தோஷ், அஜிதா, சிவா, கார்த்திக் அவர்களுக்கும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக்குத் தேவையான நூற்களைத் தந்து உதவிய தமிழ்த்துறை நூலகர் எல்தோ ஜாய் அவர்களுக்கும் ஆய்வுக்காலத்தில் பல நிலைகளில் உதவிய முனைவர் செல்வக்குமார் .ரா அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு மேற்கொள்ளும்போது எனக்குப் பக்கபலமாக இருந்து பலவகையிலும் உதவிபுரிந்த ஆய்வு நண்பர்கள், விடுதி மாணவர்கள், தோழிகள், அனைவருக்கும் நன்றியைத் தெரிவிக்கின்றேன். மேலும் இவ்வாய்வைத் தடையின்றி முடிக்க உறுதுணையாக இருந்த என் மனைவி கலைச்செல்வி கோ. அவர்களுக்கும் அவரது குடும்பத்தாருக்கும் என் அன்பார்ந்த நன்றிகள்.

என் உயிரினும் மேலாகச் சிறந்து விளங்கக்கூடிய எனது பெற்றோர் மற்றும் சகோதரர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இவ்வாய்வேட்டைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த எ.ஜலஜா அம்மா (சாப்டெக் கம்பியூட்டர்ஸ்) அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

| | | |
|---|---|---|
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| மலை. | - | மலைபடுகடாம் |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| மு.ப. | - | முல்லைப்பாட்டு |
| ப.பா. | - | பட்டினப்பாலை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ம.கா. | - | மதுரைக்காஞ்சி |
| அ.சொ. | - | அரபுச் சொற்கள் |
| ச.இ. | - | சங்க இலக்கியம் |
| த.பொ. | - | தற்கால பொருள் |
| தொ. | - | தொல்காப்பியம் |
| திரு. | - | திருவனந்தபுரம் |
| தொ.சொ.சூ. | - | தொல்காப்பிய சொல்லதிகார சூத்திரம் |
| கம்பம். | - | கம்பராமாயணம் |

# உள்ளடக்கம்

# ஆய்வுச் சுருக்கம் (Synopsis)

தமிழோடு நெருங்கிய தொடர்புகொண்டு, திராவிட மொழிகளில், உறவு நிலையிலும் உயர்வு நிலையிலும் தமிழுக்கு அடுத்ததாக வைத்து எண்ணப்படும் சிறப்பினைப் பெற்றுத் திகழ்ந்து வரும் மலையாளமொழி தமிழிலிருந்து 10-ம் நூற்றாண்டு அளவில் பிரிந்து சென்ற மொழியாக இருந்தபோதிலும் மொழி அடிப்படையில் தமிழோடு மிகுந்த ஒற்றுமையுடன் காணப்படுகின்றது. இதன் பொருட்டு இவ்விரு மொழிகளில் கலாச்சாரப் பண்பாட்டுச் சூழல்களால் சொல் ஒன்றுபட்டும், பொருள் வேறுபட்டும் இருப்பதை மையமாகக் கொண்டு ‘‘தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை, பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு’’ என்னும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

‘‘கேரளத்தில் இருமொழிச்சூழலும் சமூகப்பின்புலமும்’’ என்னும் முதல் இயல் தமிழ் மலையாள மொழிகள் மற்றும் எல்லையோர மாவட்டங்களைத் பற்றி விளக்கும் முறையில் அமைந்துள்ளது.

இங்கு ‘‘தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் பொதுச் சொற்களும், சொற்பொருளாய்வும்’’ என்னும் இரண்டாம் இயல் காலங்காலமாகத் தமிழ் மலையாள மொழிகளில் வழங்கப்படும் பொதுச்சொற்கள் ஒன்றுபட்டு இருப்பதையும் அவற்றில் சில சொற்கள் ஒலிப்பு முறையில் சில வேறுபாட்டுடன் காணப்படுகின்றன என்பதையும் விளக்குகிறது.

‘‘தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்களும் அதன் தன்மைகளும்’’ என்னும் மூன்றாம் இயல் தமிழ் மலையாள மொழிகளில் சொல் ஒன்றுபட்டும், பொருள் வேறுபட்டும் காணப்படுவதைத் தொல்காப்பியம், சங்க இலக்கியம் மற்றும் தமிழ் மலையாள அகராதிகளோடு

ஒப்பிட்டு விளக்கிக்கூறுவதாக அமைந்துள்ளது. மேலும் மலையாள மொழியில் ஒவ்வொரு மாவட்டத்திலும் காணப்படும் சொற்களின் தனித்தன்மைகளை விளக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது.

‘‘தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை பொருள்வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு’’ என்னும் இறுதி இயலில், தொல்காப்பியர் வழி சொல்பொருள் விவரிப்பு முறைகளை விளக்கி, சூழற்பொருட் கொள்கையின் அடிப்படையில் பொருள் மாற்றம் ஏற்படுகிறது என்பதைச் சொற்களின் அடிப்படையில் விளக்குகிறது. இறுதியாக முடிவுரையில் ஆய்வுமுடிவுகள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன. இதைத்தொடர்ந்து துணைநூற்பட்டியல் மற்றும் பின்னிணைப்பு போன்றன கொடுக்கப்பட்டுள்ளன.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| நற். | - | நற்றிணை |
| குறு. | - | குறுந்தொகை |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ப.ப. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| கலி. | - | கலித்தொகை |
| அகம். | - | அகநானூறு |
| புறம். | - | புறநானூறு |
| இ.சொ. | - | இடைச்சொல் |
| எ.டு. | - | எடுத்துக்காட்டு |
| சப். | - | சப்ததாராவலி |
| க்ரியா. | - | க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி |
| தொ.கா. | - | தொல்காப்பியம் |
| பெ. | - | பெயர் |
| வி. | - | வினை |
| ப. | - | பதிப்பு |
| பக். | - | பக்கம் |
| பே.வ. | - | பேச்சுவழக்கு |
| அ.வ. | - | அருகிய வழக்கு |
| இ.வ. | - | இலங்கை வழக்கு |
| ச.வ. | - | சமூக வழக்கு |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| வட. | - | வடமொழி |

# ஆய்வு முன்னுரை

**முன்னுரை:-**

படைப்பாற்றல் மிக்க மனிதன் படைத்த அருங்கலைகளுள் தலைமை சான்ற கலை மொழிக்கலையே. எண்ணத்தின் வடிவாகவும், நாகரிகத்தின் சின்னமாகவும், பண்பாட்டின் பிரதிபலிப்பாகவும் திகழும் இக்கருத்துப் பரிமாற்றக் கலை, மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் சமுதாய இணைப்புக்கும் துணைசெய்து நிற்கின்றது. தனிமனிதனைச் சமுதாயத்தோடு இணைத்து அவனை அச்சமுதாயத்தின் உறுப்பினனாக மாற்றி, அச்சமுதாயப் பிணைப்பில் இன்ப வாழ்வு வாழச் செய்யும் இணைப்புக் கருவியாகத் திகழ்வதோடு மட்டுமின்றிக் கருத்துப் பரிமாற்றக் கருவியாகவும் மொழி செயலாற்றுகின்றது. சீரிய பண்பாட்டுக் கருவூலமாகவும் மொழி அமைகின்றது. மக்களை நாகரிக வாழ்விற்கு உயர்த்துவது மொழி. மொழி என்ற இக்கருவி இல்லை எனில், மக்கள்-மக்களாகத்தான் வாழ்ந்திருப்பர். மக்கள் தம் உணர்ச்சிகளை மொழியால்தான் வெளிப்படுத்த முடியும். மொழி அல்லாத முகக்குறிப்புகள், சைகைகள் போன்றவை கருத்துப் பரிமாற்றத்திற்கு ஓரளவு உதவினாலும் மொழிதான் முற்றிலும் முழுமையான எண்ணங்களை வளர்க்கவும் சிந்தனையைப் பெருக்கவும் உற்றதுணையாய் விளங்குகிறது.

ஒரு சமுதாயத்தை உருவாக்குவதில் மொழி இன்றியமையா பங்கு வகிக்கிறது. சுருங்கச் சொல்வதென்றால் ஒரு சமுதாயம் அல்லது இனத்தை இனங்காண உகந்த காரணியாகத் திகழ்வது மொழியே எனலாம். இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட மொழி பேச்சுமொழி, எழுத்துமொழி என்ற இரு வகைகளாகப் பகுக்கப்பட்டாலும் பேச்சுமொழியிலிருந்துதான் எழுத்துமொழி உருவாகியது என்பதை நாம் அறிவோம். ஒரு சமுதாயத்தின் உண்மையான மொழிநிலையை அறிய அவர்களுடைய பேச்சுமொழிதான் அடிப்படையாக விளங்குகிறது. இப் பேச்சுமொழியினை அடிப்படையாகக் கொண்டுதான் மொழியாய்வுகள் இன்று நடைபெற்று வருகின்றன.

காலப் போக்கில் மொழியில் மாற்றம் ஏற்படுவது தவிர்க்கமுடியாதது. மொழிகள் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கின்றன. மொழியின் வளர்ச்சிக்கேற்ப புதியசொற்கள் சேர்க்கப்படுகின்றன. பழைய சொற்கள் சில மறைந்து விடுகின்றன. சில சொற்களின் பொருள் மாறுபடுகின்றன. உச்சரிப்புகள் இலக்கண வடிவங்கள், வாக்கிய அமைப்புகள் ஆகிய யாவும் மாறுகின்றன. ஒரு மொழி புழக்கத்தில் இருக்கும் வரை அது மாற்றம் அடைவதைத் தவிர்க்க இயலாது. அந்த வகையில் தமிழ் மலையாள

மொழிகள் பழங்காலந்தொட்டே கொண்டும், கொடுத்தும் வளர்ந்து வரக்கூடிய நெருங்கிய உறவுடைய மொழியாக இருக்கிறது. மலையாள மொழி கி.பி. 11-ஆம் நூற்றாண்டு வரை தமிழைப் பின்பற்றினது என்பதை ராமசரிதத்தின் சொற்களை வைத்து அறியமுடியும். மலையாளச் சொற்கள் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களை மையமிட்டதாக அமைகின்றன. இதனடிப்படையில் இருமொழிகளிலும் காணப்படக்கூடிய சொல் ஒற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்கள் எவ்வாறெல்லாம் பயன்படுத்தப்படுகிறது என்றும், ஒவ்வொரு சூழலிலும் எவ்வாறு பொருள் மாற்றம் கொள்கிறது என்றும் தெரிந்து கொள்வதற்கு இந்த ஆய்வு தேவையான ஒன்றாக அமைகின்றது.

**ஆய்வுத் தலைப்பு:**

தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்துள்ளது.

**ஆய்வின் நோக்கம்:-**

- தமிழ் மலையாளப் பேச்சுமொழிகளில் ஒற்றுமையுடைய சொற்களைத் தேர்வு செய்தல், அவை நாளடைவில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை ஆராய்ந்து வெளிப்படுத்துதல்.
- அடிச்சொற்களின் அடிப்படையில் பொருள் மாற்றத்தை ஆராய்தல்.
- தமிழ் மலையாளச் சொற்கள் சில இடத்திற்கு இடம் மாறுபடுகின்ற முறையைப் பகுத்தாய்தல்.

**கருதுகோள்:-**

சமூகப் பண்பாட்டு மாற்றங்களால் தமிழ், மலையாள ஒலியொற்றுமையுடைய சொற்களில் பொருள்மாற்றம் நிகழ்ந்தனவா? என்பதைக் கண்டறிவதும், பொருள் மாற்றம் அடைந்துள்ள ஒலியொற்றுமையுடைய சொற்களை அடிப்படையாகக் கொண்டு வேர்ச்சொற்களைக் கண்டறியலாம் என்பன இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றன.

**ஆதாரங்கள்:-**

ஆய்வின் அடிப்படையில் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் எனப் பிரிக்கப்படுகின்றன.

**முதன்மை ஆதாரங்கள்:**

கேரளத்தில் தமிழ் பேசக்கூடிய இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மாவட்டங்களில் வாழும் மக்கட் பேசும் பேச்சு மொழியை முதன்மை

ஆதாரமாகக் கொண்டு இவ்வாய்வு அமைந்துள்ளது. தமிழ் மலையாள மொழிகளில் ஒலியொற்றுமை, பொருள் வேற்றுமை தரக்கூடிய சொற்களைக் கள ஆய்வின் வழியாகத் திரட்டி, அதனைத் தொகுத்து வரிசைப்படுத்தி ஆராயும் முறையைப் பின்பற்றி இவ்வாய்வு அமைந்துள்ளது.

**துணைமை ஆதாரங்கள்:-**

இவ்வாய்வின் தொடர்புடைய நூற்கள், ஆய்வேடுகள், இதழ்கள், அகராதிகள் என்பன துணைமை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**ஆய்வு பயன்:-**

இவ்வாய்வு பேச்சுமொழிச் சொற்களை முன்வைத்து அமைவதால் பேச்சுமொழி அகராதி அல்லது வட்டார வழக்ககராதி உருவாக்க இவ்வாய்வு பயன்படும்.

- இரண்டு மொழிகளும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது என்றாலும் அதன் பொருள் வேறுபாட்டைப் பிரித்து அறிய இவ்வாய்வு உதவும்.
- வரும் தலைமுறையினருக்குச் சொற்களின் பயன்பாட்டையும், அச்சொற்கள் பயன்பட்ட காலத்தையும் நிர்ணயிக்க இவ்வாய்வு உதவும்.
- இலக்கிய சொற்கள் மாற்றம் பெற்றுப் பேச்சுவழக்கில் எவ்வாறு பயின்றுவருகிறது என்பதை ஆராய இவ்வாய்வு பயன்படுகிறது.

**ஆய்வு அணுகுமுறை:-**

இருமொழிகளுக்குள்ளும் சொல்லொற்றுமை, பொருள் வேற்றுமையை அறிவதால் ஒப்பியல் அணுகுமுறையும், அடிச்சொல் குறித்த பார்வை இவ்வாய்விற்குத் தேவை என்பதால் மொழியியல் ஆய்வும், சொற்களுக்குப் பொருள் விளக்கும் தன்மையில் அமைவதால் விளக்கமுறைத் திறனாய்வும் மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு எல்லை:-**

கேரள மாநிலத்தின் தமிழக எல்லையோர மாவட்டங்களான திருவனந்தபுரம், பாலக்காடு, இடுக்கி வாழ் மக்களின் பேச்சுமொழிகள் ஆய்வின் எல்லையாக வரையறுக்கப்படுகின்றன.

# ஆய்வு முன்னோடிகள்

## ஆய்வேடுகள்

- சுஜாதா - கன்னியாகுமரி மாவட்ட கிறிஸ்தவ நாடார் வழக்குச் சொல் அகராதி, தமிழ்த்துறை, கேரளப்பல்கலைக் கழகம், காரியவட்ட வளாகம்.

- ஷிஜு.கெ - கன்னியாகுமரி மாவட்ட உபய பாஷா சம்ஸ்காரம் ஒரு மேகலா படனம், மலையாளத்துறை, கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்ட வளாகம். வெளீயீடு. இது பிறகு புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளது. நாஞ்சில் நாடிண்டெ சாம்ஸ்காரிக சரித்திரம், பாஷா இன்ஸ்டிடியூட் வெளியீடு, திருவனந்தபுரம்.

- செல்வக் குமார்.ரா - தமிழ் மலையாளம் ஒத்த சொற்களின் பொருள வேறுபாடு - ஓர் ஆய்வு, தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம் அக்டோபர் -2019

- பிரேமாவதி .சா - நாகப்பட்டின மாவட்ட கிளைமொழிக் கூறுகள் ஓர் ஆய்வு, மொழியியல்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ஜுன் -2011

# நூல் ஆய்வு முன்னோடிகள்

| | | |
|---|---|---|
| கலைவாணி (முனைவர்) | - | பழந்தமிழும் கிளைமொழிகளும், உலக தமிழாராய்ச்சி நிறுவனம், வெளியீடு -2011- முதல்பதிப்பு |
| விக்டர்.ம.சோ | - | சொல்-1 யாத்திசைப் பதிப்பகம் 50, அண்ணாமலை நகர், அரியலூர் 621 713, முதற்பதிப்பு -2011 |
| வெங்கடேசன். இரா(முனை) | - | சொல் பண்பாட்டு அடையாளம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பதிப்பகம் முதல் பதிப்பு –ஜுலை -2018 |

**முன்னாய்வு சுருக்கம்**

- ‘‘கன்னியாகுமரி மாவட்ட கிறிஸ்தவ நாடார் வழக்குச் சொல் அகாராதி’’ என்ற தலைப்பிலான ஆய்வேட்டில் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள கிறிஸ்தவ சமுதாயத்தைச் சேர்ந்த நாடார் மக்களின் பயன்பாட்டில் இருக்கக்கூடிய கலாச்சார, பண்பாட்டுப் பழக்க வழக்கச் சொற்களை ஒன்றுதிரட்டி அவற்றை விளக்கி அகரவரிசைப்படுத்தி இருப்பதைக் காண முடிகிறது.
- ‘‘கன்னியாகுமரி மாவட்ட உபய பாஷா சம்ஸ்காரம் ஒரு மேகலா படனம’’ என்ற மலையாள ஆய்வேட்டில் கன்னியாகுமரி மாவட்ட அரசியல், வரலாறு, புவியியல் மற்றும் மறுமலர்ச்சிக் காரணங்களால் கலாச்சாரமும், மொழியும் எவ்வாறு உருவானது என்றும் தெக்கன் திருவிதாங்கூறின் சில பகுதிகளை மொழி அடிப்படையில் ஒப்பிட்டு ஆய்வதாக இவ்வாய்வேடு அமைந்துள்ளது.
- ‘‘தமிழ் மலையாள ஒத்தசொற்களின் பொருள் வேறுபாடு - ஓர் ஆய்வு’’ என்ற தலைப்பினை ஆய்வேட்டில் அகாராதிகளை முன்வைத்து இரண்டு மொழிகளிலும் சொல் ஒன்றுபட்டும் பொருள் வேறுபட்டும் இருக்கக்கூடிய சொற்களைத் தேர்வு செய்து அவற்றைத் துறைவாரியாக விளக்கி அமைத்துள்ளார் ஆய்வாளர் செல்வக் குமார் .ரா
- ‘‘நாகபப்பட்டின மாவட்டக் கிளைமொழிக் கூறுகள் - ஓர் ஆய்வு’’ என்னும் தலைப்பிலான ஆய்வேட்டில் நாகப்பட்டின மாவட்ட கிளைமொழிகளைப் பற்றியும், அம்மக்களின் சமூகப் பொருளாதார

நிலை, வாழும் பகுதி, மக்கள் தொகை, ஒலிக்கூறுகள், மற்றும் மீனவர்களின் தொழில் வழக்கில் பயன்படும் சொற்களைப் பற்றியும் அவர்களின் சடங்குகளையும் ஆராய்ந்து விளக்குவதாக இவ்வாய்வேடு அமைந்துள்ளது

- ''பழந்தமிழும் கிளைமொழிகளும்'' என்ற நூலில் தமிழக ஆந்திர எல்லையில் புவியியல் அமைப்பு வரலாற்றுப் பின்புலத்தையும் விளக்கி, எல்லையோர சமுதாய பின்புலம், வட்டாரக் கிளைமொழி மற்றும் தமிழ்மொழியில் தெலுங்குமொழியின் தாக்கம் போன்றவற்றை விளக்கித் தமிழ்ச் சொற்களை அகரவரிசைப்படுத்துவதாக இவ்வாய்வேடு அமைந்துள்ளது.
- ''சொல்-1'' என்ற நூலில் ம.சோ.விக்டர் சொல்லினுடைய இலக்கண விளக்கத்தைச் சுட்டிக்காட்டி வேர்ச்சொல் அடிப்படையில் சொற்கள் உருவாகிறது என்பதைப் பட்டியலிட்டு விளக்கியுள்ளார்.
- ''சொல் பண்பாட்டு அடையாளம'' என்னும் நூலில் ஒரு குறிப்பிட்ட சொற்களைத் தேர்வு செய்து அவை சங்க இலக்கியத்தில் எந்தெந்த இடங்களில் பயின்று வந்திருக்கின்றன என்பதையும், அவற்றின் கலாச்சார பண்பாட்டு அடையாளத்தைச் சூழல்களோடுப் பொருத்தி விளக்கப்பட்டுள்ளன.
- முன்னாய்வுகள் ஒவ்வொன்றும் தமிழ், மலையாளச் சார்பாக இருப்பினும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையை மையமிட்டதாக அமைந்துள்ளன. அவற்றினின்று இவ்வாய்வு வேறுபட்டு ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய தமிழ், மலையாளப் பேச்சுமொழிச் சொற்களை மையமிட்டதாக அமைந்துள்ளது.

## ஆய்வின் இயலமைப்பு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது

1. கேரளத்தில் இருமொழிச்சூழலும் சமுகப்பின்புலமும்
2. தமிழ் மலையாளப் பேச்சுவழக்கில் பொதுச்சொற்களும் சொற்பொருளாய்வும்
3. தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்களும் அதன் தன்மைகளும்
4. தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு.

**ஆய்வேட்டின் இயல் விளக்கம்**

**முன்னுரை:**

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வின் எல்லை, ஆய்வின் அணுகுமுறை, ஆய்வின் பயன், ஆய்வின் சான்றாதாரங்கள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

**1. கேரளத்தில் இருமொழிச்சூழலும், சமூகப்பின்புலமும்:-**

“கேரளத்தில் இருமொழிச் சூழலும் சமூகப் பின்புலமும்” என்பது முதல் இயல் ஆகும். இவ்வியலில் மொழியின் தோற்றம், மொழியும் சமூகமும், மூலத் திராவிட மொழிகள் பற்றிய குறிப்பு, மலையாள மொழியின் தோற்றம், தமிழ் மலையாள மொழி வரலாறு மற்றும் பேச்சுமொழி, எழுத்துமொழி போன்றவற்றை இவ்வியல் விளக்குகிறது. மேலும் கேரளத்தில் தமிழ் மக்கள் பற்றியும், எல்லையோர மாவட்டங்களான இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்றவற்றின் புவியியல் அமைப்பு மற்றும் அவர்கள் உற்பத்தி செய்யும் உற்பத்திப் பொருட்கள் போன்றவற்றை இவ்வியல் எடுத்துரைக்கிறது. எல்லையோர மக்களின் இரட்டைக்குடியுரிமை, அவர்களின் இடம்பெயர்வு, இருமொழிச்சூழல், மொழிப்பற்று, எல்லைகள், வரையறை கல்விச்சூழல் மற்றும் அரசியல் பின்புலம் போன்றவற்றையும் இவ்வியல் விரிவாக எடுத்துரைக்கிறது.

**2. இரண்டாவது இயல்:-**

“தமிழ் மலையாள பேச்சுவழக்கில் பொதுச்சொற்களும், சொற்பொருளாய்வும்” என்பது இரண்டாம் இயலாகும். காலங்காலமாகத் தமிழ் மலையாளத்தில் பொதுச்சொற்களாக வரக்கூடிய சொற்களைத் துறைவாரியாக வகைப்படுத்தியும், வட்டார வழக்குகளின் பொதுத்தன்மைக்குரிய காரணத்தையும் இவ்வியல் ஆராய்கிறது. மேலும் மலையாள மொழியில் தமிழ்ச் சொற்களின் பயன்பாடு எவ்வாறெல்லாம் இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுடன் விளக்குகிறது. தமிழ் மலையாள மொழியில் ஐம்பூதங்களின் பொதுச் சொற்களும் உணவுவகைச் சொற்களும் ஒன்றுபட்டு இருப்பதையும் இவ்வியல் எடுத்துரைக்கிறது. தொடர்ந்து விலங்குப் பெயர்களின் பொதுச் சொற்களையும் வகைப்படுத்தி சொற்பொருள் வடிவில் விளக்கும் வகையில் இவ்வியல் அமைந்துள்ளது.

### 3. மூன்றாவது இயல்:-

“தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்களும் அதன் தன்மைகளும்” என்பது மூன்றாவது இயலாக அமைகிறது. இவ்வியல் தமிழ் மலையாளமும் ஒலியொற்றுமையுடைய சொற்கள் என்ற நிலையில் எல்லையோர மாவட்டங்களை எடுத்துரைத்துத் தமிழ் மலையாள மொழிகளில் உள்ள பேச்சுமொழியில், ஒலியொற்றுமையுடைய சொற்களைத் தேர்வு செய்து அவற்றில் ஏற்படும் பொருள் மாற்றத்தைத் தொல்காப்பியம் முதல் தமிழ் மலையாள அகராதிகளோடு ஒப்பிட்டு எடுத்துரைக்கிறது. மேலும் எல்லையோர மாவட்டங்களில் பேசக்கூடிய மலையாள பேச்சுமொழியின் தனித்தன்மையையும், பேச்சுமொழியில் ஏற்படும் மாற்றத்தையும் மொழியியல் அடிப்படையில் விளக்கி எடுத்துரைக்கிறது. இறுதியாகப் பேச்சுத்தமிழின் செல்வாக்கு மற்றும் மலையாள மொழியின் வினைச்சொற்களின் தன்மை போன்றவற்றையும் இவ்வியல் ஆராய்கிறது.

### 4. நான்காவது இயல்:

“தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு” என்பது நான்காவது இயலாக அமைகிறது. இவ்வியல் தொல்காப்பியர் அடிப்படையில் சொல்பொருள் விவரிப்புமுறைகள், சொற்கள் பொருள் உணர்த்தலின் வகைகள், சொல் பொருள் தொடர்பு, பொருள் விளக்க முறைகள் போன்றவற்றை எடுத்துக்கூறுகின்றது. சொற்பொருள் உறவு, சொல் வகைபாடு போன்றவற்றை விளக்கிடச் சூழற் பொருட்கொள்கை அடிப்படையில் பொருள் மாற்றம் மொழிகளில் ஏற்படுகிறது என்பதை இவ்வாய்வு எடுத்துக்காட்டு வழி விளக்குகிறது. காலந்தோறும் சொற்பொருள் மாற்றம் மொழியில் எவ்வாறு நிகழ்ந்திருக்கிறது என்பதைத் தமிழ் மலையாளப் பேரகராதி வழி ஆராய்கிறது. மேலும் சொற்களை வடமொழிச் சொற்கள், தொழிற் சொற்கள், கன்னடச் சொற்கள், உறவுச் சொற்கள் என வகைப்படுத்தி விளக்குகிறது. பெருகிவரும் பேச்சுமொழிச் சொற்களால் அகராதியின் தேவை மற்றும் அகராதி உருவாக்கத்திற்குப் பேச்சுமொழி சொற்களின் பயன்பாடு தவிர்க்க முடியாதது என்பதைக் க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி வழி எடுத்துரைக்கிறது.

இவற்றினைத் தொடர்ந்து முடிவுரையில் ஆய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. இறுதியாகத் துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு ஆகியவை கொடுக்கப்பெற்றுள்ளன.

**பின்னிணைப்பு:**

1. கள ஆய்வில் சேகரிக்கப்பட்டு அகரவரிசைப் படுத்தப்பட்ட சொற்கள்.
2. சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள பேச்சுமொழிச் சொற்களும் அதன் பொருளும்.
3. தகவலாளர் விவரப்பட்டியல்.
4. புகைப்படங்கள்.

# இயல் - 1

## 1. கேரளத்தில் இருமொழிச்சூழலும் சமூகப்பின்புலமும்

தமிழ் மலையாள மொழிகள் திராவிட மொழியின் முக்கிய அங்கமாக இருக்கிறன. படைப்பாற்றல் மிக்க மனிதன் படைத்த அருங்கலைகளுள் தலைமை சான்ற கலை மொழிக்கலையே. எண்ணத்தின் வடிவாகவும், நாகரீகத்தின் சின்னமாகவும், பண்பாட்டின் பிரதிபலிப்பாகவும் திகழும் இக்கருத்துப் பரிமாற்றக் கலை, மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்கும், சமுதாய இணைப்புக்கும் துணைசெய்து நிற்கின்றது. தனிமனிதனைச் சமுதாயத்தோடு இணைத்து; அவனை, அச்சமுதாயத்தின் உறுப்பினனாக மாற்றி, அச்சமுதாயப் பிணைப்பில் இன்ப வாழ்வு வாழச் செய்யும் இணைப்புக் கருவியாகத் திகழ்வதோடு மட்டுமின்றிக் கருத்துப் பரிமாற்றக் கருவியாகவும் மொழி செயலாற்றுகின்றது. அவ்வாய்வின் முதல் பகுதியான இவ்வியலில் தமிழ் மலையாள மொழிகள் பேச்சுநிலையிலிருந்து எவ்வாறு சமூகத்தோடு வளர்ந்து வருகிறது என்றும், இவ்விரு மொழிகளின் தொன்மை, கேரள தமிழக எல்லையோர மக்களின் சமூக வாழ்வில் எவ்வாறெல்லாம் பயின்று வருகிறது என்பதைக் கல்வி மற்றும் அரசியல் பின்புலம் வழியாக விளக்குகிறது.

மொழி என்பது மனிதா்கள் தங்களுக்குள் ஏற்படும் அக உணா்வுகளை வெளிப்படுத்த படைத்துக் கொண்ட கருவியே என்று மொழி அறிஞா்கள் கூறுவாா்கள். மனிதன் தன்னுடைய கருத்தைப் பலவழிகளில் புலப்படுத்துகிறான். அதாவது தன்னுடைய உடல் அசைவுகள் மூலமும் முக பாவனைகள் மூலமும் மனிதன் கருத்தை வெளிப்படுத்துகிறான். மொழி என்பது கருத்துப் பரிமாற்றத்திற்கான கருவியாக இருந்தாலும், மனிதனின் தனித்துவத்தைக் காட்டும் கூறுகளிலும் மொழி முக்கியமான இடத்தை வகிக்கிறது. மொழி மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து பிரித்துக் காட்டுகிறது. பிற உயிரினங்களும் உணா்வுகளை வெளிப்படுத்துகின்றன. அவை சைகைகளாக வெளிப்படுத்துகின்றன. அதையெல்லாம் தாண்டி மனிதனை மனிதனாக்குவது மொழியே. அப்பேற்பட்ட மொழி சூழலுக்குத் தகுந்தவாறு பயன்பட்டு வருகின்றன என்பதைக் காண முடியும்.

## 1.1 மொழி

'மொழி' என்ற பெயர்ச்சொல் 'மொழி' என்ற வினையின் அடியாகப் பிறந்தது. மொழி என்பது மனிதன் பேசும் பேச்சைக் குறிக்கிறது. பேச்சு என்பது ஒலிகளால் கட்டமைக்கப்பட்டது. அது செவிப்புலனால் உணரக்கூடியது. ஆகையால் தான் மொழி என்பதைப் பிளாக்கும், டிரேகரும் (1942)---1 பின்வருமாறு விளக்குகின்றனர்.

"மொழி என்பது இடுகுறித் தன்மை வாய்ந்த வாய்வழி வெளிப்படும் குறியீடுகளின் ஒழுங்குமுறை அதன்மூலம் ஒரு சமூகம் கூட்டாக இயங்குகிறது என்று வரையறுத்தார்கள்."

இதன்மூலம் மொழி பேச்சு என்பதும் அது இடுகுறித் தன்மை வாய்ந்தது என்பதும் ஒரு சமூகத்தின் கூட்டியக்கத்திற்கு அது முக்கியப் பங்கு அளிக்கிறது என்பதும் இவ்வரையறை மூலம் தெளிவுப்படுத்தப்படுகிறது'. எழுத்து இல்லாமல் பல மொழிகள் இன்று உலகில் வழங்குகின்றன. ஆனால் பேச்சு இல்லாமல் ஒரு சமூகம் இருப்பதாக நமக்கு இதுவரை எவ்வித செய்தியும் இல்லை. இப்பேச்சுமொழிச் சொற்கள் உணர்த்தும் பொருள்களுக்கும், அவற்றிற்கும் உள்ள தொடர்பு இடுகுறித்தன்மை வாய்ந்தது. சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ளார்ந்த தொடர்பு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. இதற்கு மூன்று செய்திகள் முக்கியமானவை. அவை, 1. மொழி என்பது பேச்சொலிகளால் ஆனது. 2. மொழியின் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பு இடுகுறித் தன்மை கொண்டது. 3. மொழி ஒரு சமூகத்தின் கூட்டியக்கத்திற்கு முக்கியமானது போன்றனவாகும்

உலகின் ஏறத்தாழவுள்ள எழுநூறுகோடிக்கும் மேற்பட்ட மக்கள் ஐயாயிரம் அளவிலான மொழிகளைப் பேசி வருகின்றனர். முன் பேசி மறைந்த மொழிகள் பல மறைந்து கொண்டிருப்பன. சில பேசிவரும் மொழிகளிலிருந்து கிளை மொழிகளாக இடத்தால், இனத்தால், உருமாறி வந்தன என்பதை அறியமுடியும். பேசி வரும் ஒரு மொழியிடையே காலத்தால், இடத்தால், மொழியின் ஒலியில் இலக்கணத்தில் சொல்லில், தொடரில், பொருளில் அமைந்து வரும் மாற்றங்கள் அளவிடற்கரியன. உலகில் ஏற்படும் மாற்றம் மொழியிலும் காணப்படுவது இயல்பு, மொழிகளிடையே கடன் பெறுதலும், கலப்படைதலும் அவற்றின் நடைமுறையாகும் எல்லாப் பேச்சு மொழியும் ஒலியனால் அமைவன. ஒலி, மூச்சு அல்லது உயிர்ப்புக் காற்றால் உருவாகுவது இத்தகைய ஒலி உலகப் பொருளைக் குறிப்பது ஒலி பொருளைக் குறிக்க மொழியாகின்றது எனவே

மொழியில் ஒலிக்கும், பொருளுக்கும் உள்ள தொடர்பு குறிப்பிடத்தக்க ஒன்று. இது காலப்பழக்கத்தால் அமைவது. மொழி என்பது குறிகளின் கூட்டமைப்பு. இத்தகைய ஒவ்வொரு குறியும் ஒலி, வடிவு, பொருள் ஆகிய கூறுகளுடன் அமைவது.

### 1.1.1 மொழியின் அடிப்படை மூலங்களும் நிலைகளும்:

மொழி என்பது ஒலிகளின் தொடர்ச்சங்கிலி. ஆனால், மொழி தெரியாதவர்களுக்கு அது கடலின் அலைகள் போல் தொடர்ச்சியான ஓசை போல் உள்ளது. முதல் நிலையில் மொழி தெரிந்தவர்கள்தான் அலைகள் போல் உள்ள தொடர் சங்கிலியைக் கூறுபோட்டு ஒலிகளாக உணர்கிறார்கள். பௌதீக நிலையில் மொழி ஒரு அலையைப் போன்ற தொடர்ச்சங்கிலி ஆனால் பேசுபவர்களின் மனநிலையில் அவை தனித்தனி ஒலிகள் ஒரு சொல் என்பது அதனைப் பொறுத்தவரைத் தனி ஒலிகளின் தொடர்ச்சியால் உருவானது. நாம் மொழி பேசுவோனை மையப்படுத்தி இங்குப் பார்க்கிறோம். ஆகையால் மொழியின் கட்டமைப்பில் ஒலிகள் அத்தனை ஒலிகளும் அடிப்படையானவை அல்ல. அடி, ஆடி, விடு, வீடு இச்சொற்களில் ஒரு ஒலி மட்டும் பொருளை வேறுப்படுத்துகிறது. உயிரொலிகள் அனைத்தும் தமிழில் பொருள் வேறுபாட்டை உண்டாக்குகின்றன. மெய்யொலிகளும் அவ்வாறு பொருள் வேறுபாட்டைச் செய்கின்றன. கல், கள், ஆகிய இரு சொற்களும் பொருள் வேறுபாடு உடையன. மரம் என்ற சொல்லில் ம,ர,ம் ஆகிய தனி ஒலிகளுக்கு எந்தவித பொருளும் இல்லை. இவ்வாறு பொருளை வேறுப்படுத்தும் அடிப்படை ஒலிகளை மொழியியலார் ஒலியன்கள் (phonemes) என்று கூறுகிறார்கள்.

அடுத்த நிலையில் பொருளைக் குறிக்கும் அடிப்படை மூலங்கள் உருபன்கள் (Morphemes) ஆண், ஆண்கள், தூண், தூண்கள், பாம்பு, பாம்புகள், பையன், பையனை, பையனுக்கு, பையனா ஆகிய சொற்களை எடுத்துக் கொண்டால் ஆண் என்ற சொல்லையும், ஆண்கள் என்ற சொல்லையும் ஒப்பிடும்போது ‘கள்’ என்பது ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிப்பதை அறியமுடியும். மேலும் இங்குக் காண்கின்ற மூலங்கள் பொருளைத் தாங்கி நிற்கின்றன. இருவித அடிப்படை மூலங்கள் மொழிகளில் உள்ளன. அவை பொருளை வேறுபடுத்தும் ஒலியன்களும் உருபன்களும் இக்கூற்று எல்லா மொழிகளுக்கும் பொருந்தும்.

ஒலியன்களுக்கு ஒரு அமைப்பு உள்ளது. அதை ஒலியனியல் (Phonology) என்றும் உருபன்கள் அமைந்துள்ள அமைப்பை உருபனியல் (Morphology) என்றும் மொழியியலார் பிரிக்கிறார்கள். இவ்விரு வகை மூலங்களைக் கொண்டு சொற்கள் கூட்டமைக்கப்படுகின்றன. இவ்விரு அமைப்புகளும் மொழி அமைப்பிற்கு அடிப்படையானவை. இத்தன்மையை இரட்டை அமைப்பு (Dual structural) என்று மொழியியலார் கூறுகிறார்கள். இவ்விரட்டை அமைப்புதான் மொழியின் தனித்தன்மை. இதுபோன்ற அமைப்பை மற்ற விலங்குகளின் கருத்துப் பரிமாற்றத்தில் நாம் காண இயலாது.

### 1.1.2 மொழி, அடித்தளம்

மனிதனின் கருத்துப்பரிமாற்றக் கலையில் அளவிட முடியாத அகற்சி, உயர்ச்சி அமைந்துள்ளன.

மனிதன் மண்ணில் மகவாகத் தோன்றியதும் கை, கால், அசைத்து செயல்பட்டுத் தொடர்ந்து அழுகைக்குரல் எழுப்புகின்றான். இத்தகைய குரலே காலஞ்செல்லச் செல்ல ஒலியியல் வேறுபடப் பழக்கத்தால் வேறுபட்ட பொருளோடு தொடர்புற்று எண்ணிறந்த ஒலியியல் வேறுபாடும், அவை குறிக்கும் பொருள் வேறுபாடுமாக வளர்ந்து வந்துள்ளது.

### 1.1.3 மனிதனும் மொழியும்

மனிதன் உறவாடிக் கொள்ள பயன்படும் ஒன்றை மொழி என்று எளிமையாக் கூறுவர். விலங்குகளை மனிதனிடம் இருந்து பிரித்து அறியக் கூடிய இந்த அற்புதத்தைப் பல நபர்களும் பல தரத்தில் விவரிக்கின்றனர். முதலாவதாகக் கிரீக் தத்துவஞானியான அரிஸ்டாட்டில் மொழி என்பது அர்த்தத்தோடுகூடிய சப்தம்! என்று மொழியை வடிவமைத்திருக்கிறார். அதாவது நன்மை தீமை, நீதி, உண்மை பற்றிய அறிவு மனிதனால் மட்டுமே எளிதில் புரிந்து கொள்ள முடியும். அதனால்தான் மனித மொழியை அர்த்தத்தோடும், ஆத்மாவோடும் அரிஸ்டாட்டில் தொடர்புபடுத்தி இருக்கிறார்.

### 1.1.4 மொழியும் சமூகமும்

ஒரு சமூகத்தின் கூட்டியக்கத்திற்கு அடிப்படையாக இருப்பது மொழி. ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் மொழி இயங்குகிறது.

சசூர் என்ற அறிஞர் மொழியின் பொதுமைகள் அந்தச் சமூகத்தின் பொதுமைகள் என்றார். சமூகத்தை வரையறுக்கும் பல அளவுகோல்களில் மொழி முக்கியமானது. அமைப்பு மொழியியல் கோட்பாட்டிற்கு அடித்தளம்

கண்டவர் சசூர் அதைப் பேச்சு (Parde) என்று குறிப்பிடுகிறார். அதே சமயம் ஒட்டு மொத்த சமூகமும் ஒரு மொழியின் பொதுமைகளைக் கொண்டிருக்கிறது. அவர் அதை மொழிக்கிடங்கு (Langue) என்று கூறுகிறார். பேச்சு என்பது தனி மனிதன் மூலம் வெளிப்பட்டாலும் அது மொழியின் பொதுமைகளை வெளிப்படுத்துகிறது. அந்தப் பொதுமைகளைத்தான் மொழியியலார் தேடுகிறார்கள்.

### 1.1.5 மொழியும் வட்டாரமும்

மொழியின் அசைவியக்கம் அதன் வட்டார வழக்குகளின் செழுமையில் தான் உணரப்படுகிறது. வழக்குச் சொற்களின் எண்ணிக்கை பெருகப் பெருக ஒரு மொழியின் உயிர்ப்பு தீவிரமடைகிறது. பேச்சும், எழுத்தும் மொழியின் வெளிப்பாட்டு வடிவங்கள் என்றாலும் 'பேச்சு' எழுத்தைக் காட்டிலும் தீவிரமான இயங்குதளங்களை உடையது. எழுத்து, மொழியை வரையறைகளுக்குள்ளும், சட்டகங்களுக்குள்ளும் சிறைப்பிடித்து விட முயற்சிக்கும் வேளையில் பேச்சு, மொழியை மென்மேலும் வளர்த்தெடுப்பதிலும் சிக்கலுடையதாக மாற்றுவதிலும் ஈடுப்பட்டுக் கொண்டிருக்கிறது.

ஒரு மொழியின் செழுமையை அதன் வரலாற்றுடன் தொடர்புபடுத்தி யோசிக்கும் போக்கே இன்றளவும் தமிழில் மேலோங்கியுள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளாக ஒரு மொழி பயன்பாட்டில் உள்ளது என்ற உண்மை மட்டுமே ஒரு மொழியின் தகுதியைச் சுட்டுவதாக அமைந்து விட முடியாது. அந்த மொழி தனக்குள் எத்தனை எத்தனை வழக்குகளைக் கொண்டிருக்கிறது என்பதே அதன் விசாலத்தையும் வீரியத்தையும் காட்டுவதாக அமையும். மொழியின் தளப்பார்வைக்குத்தான் பண்பாட்டுப் பன்மைகளை அடையாளப்படுத்தும் குணம் இருக்கிறது. அந்த வகையில் தமிழின் வட்டார வழக்குகளின் மீது நாம் தீவிரமான கவனத்தைச் செலுத்த வேண்டியது அவசியமாகிறது. அவ்வாறு செய்வதன் மூலமே தமிழ் மொழியின் பண்பாட்டுப் பாத்திரத்தை நம்மால் முழுமையாகவும் அறிந்து கொள்ள முடியும்.

### 1.1.6 பேச்சும் எழுத்தும்

மொழியைப் பேச்சுமொழி, எழுத்துமொழி என்று இரண்டாகப் பிரித்து மொழியியலார் பேசுவார்கள். இந்த வேறுபாடு நமது இலக்கணங்களில் காணப்பட்டாலும் அவை தனித்தனியே விளக்கப்படவில்லை. எழுத்து மொழியின் இலக்கணம் மிகக் குறைவாகவே எழுத்ததிகாரத்தில் பேசப்படுகிறது. சில எழுத்துக்களின் வரிவடிவம் பற்றிய குறிப்புகள் எல்லா இலக்கணத்திலும் உண்டு. ஆயினும் சரியாக வேறுப்படுத்தாததால் உயிர்

மெய்யைச் சார்பு எழுத்தாகப் பவணந்தி (நன்.60) கருதிவிட்டார். பேச்சுமொழியையும் எழுத்துமொழியையும் வேறுப்படுத்தும் குறிப்புகள் உரைகளிலும் பின்னால் நூல்களிலும் கீழ்க்கண்டவாறே உள்ளன.

'எழுத்து என்றது யாதெனின் கட்புலனாகா உருவும், கட்புலனாகிய வடிவம் உடைத்து, என்பார் நச்சினார்கினியர் (எழுத்து பக்.8) இங்குக் கட்புலனாகா உருவு என்றது ஒலி வடிவு' கட்புலனாகிய வடிவு என்றது வரிவடிவு.

**(எழுத்து ஒலி வடிவு வரிவடிவையும் ஏற்கும்) - (முத்துவீரியம். எழு. 2)**

### 1.1.7 பேச்சுமொழியும், எழுத்துமொழியும்

பேசல், கேட்டல், புரிதல் போல எழுதல், படித்தல், புரிதலும் ஒரு நிலை. இந்நிலை உலகின் பெரும் பகுதிகளுக்கு இன்றில்லை. உலகின் முன் பேசி மறைந்த பல மொழிகளின் எழுத்து வடிவங்கள் மறைந்தும், மாறாக இன்று பேசப்பட்டு வருவனவற்றில் ஆயிரக்கணக்கான மொழிகள் எழுத்துருவம் பெறாத நிலையில் உள்ளன. ஆகவே, எல்லா மொழிகளிலும் பேசப்பட்டு வருவன, எழுதப்பட்டு வருவன என்றில்லை. உலகில் பேச்சு மொழி முந்தியது எழுத்து மொழி பிந்தியது. ஓவியத்தில் தொடங்கி வளர்ந்த எழுத்து மொழி வேறு பேச்சு மொழி வேறு என்ற நிலை ஒரு காலத்து பேச்சை எழுத முடியாத நிலைமாறி இன்று பேச்சை அவ்வாறே எழுதும் கலை வளர்ந்துள்ளது. இது குறிப்பிடத்தக்க ஓர் இணைவாகும்.

பொருளை ஓவியமாக வரைந்து காட்டினர். சீனாவில் எழுத்தின் தொடக்கம் இது. அமெரிக்கா முதலிய நாட்டுப் பழங்குடி மக்களிடமும் இம்முறை காணப்படுகின்றது. இதனை ஓவிய எழுத்து என்றனர். பொருளைக் குறித்து வந்த இவ்வோவியம் சிறிது திரிந்து, உருபன் அல்லது மிகக் குறைந்த அளவுள்ள பொருள் நிலையால் மேலும் பகுக்க முடியாத ஒரு பொருள் ஒரு சொல்லுக்காகியது. இது உருபனெழுத்து எனப்பட்டது. இதுவே ஒரு வகையில் அசையெழுத்து என்றும் ஆகியது. இம்முறை மூன்றும் சீன மொழியில் உள்ளன.

### 1.1.8 பேச்சுமொழியின் பழமை

மனிதன் இந்த உலகத்தில் சுமார் ஐந்துலட்சம் ஆண்டுகளாக வாழ்ந்து வருகிறார் என்று தொல் வரலாற்று ஆசிரியர்கள் கூறுவார்கள். ஆனால்

எப்பொழுதிலிருந்து பேச ஆரம்பித்தான் என்பதை அறிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும், காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் வெளி உலகத்தொடர்பு இல்லாமல் வாழும் பழங்குடி மக்கள் உலகில் பல பகுதிகளில் காணப்படுகிறார்கள். எனவே, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே மனிதன் பேச்சு மொழியைக் கையாண்டு வந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க வேண்டியுள்ளது.

எழுத்து மொழியை இன்றுவரை கிடைக்கின்ற சான்று அடிப்படையில் கணக்கிட்டால், அது சுமார் ஐயாயிரம் ஆண்டு பழைமையே உடையது. மேலும், எழுத்து மொழி இல்லாத சமூகத்தினர் பலர் இன்று இருப்பினும், எழுத்து மொழி உடைய சமூகத்திலும் அதைத் தெரிந்து கொள்ளாத மக்கள் இருப்பதும் மொழி போல இயல்பானது இல்லை என்பதையும் புலப்படுத்தும். மிகவும் பிற்பட்டது எழுத்துமொழி என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது. தமிழகத்தில் இரண்டுலட்சம் ஆண்டுகளாக மக்கள் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது தொல்பொருள் ஆராய்ச்சியாளர் முடிவு (Sankaliya-1966). ஆனால், தமிழ் மொழிக்கு இதுவரை கிடைத்த பழைய எழுத்துச் சான்று கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்தே, அதாவது இரண்டாயிரத்தி முந்நூறு ஆண்டுகளுக்கு முந்தியது.

### 1.1.9 பேச்சுமொழியின் சிறப்பு

பேச்சுமொழி காலத்தால் பழமையானது என்றாலும் இன்றும் பல சிறப்புகளைக் கொண்டுள்ளது. அவைகளுள் ஒன்று, பேசுவோரின் உணர்ச்சியையும், உள்ளக்கிடக்கையையும் குரலின் ஏற்ற இறக்கத்தால் எளிதில் காட்டமுடிவது ஆகும். ‘‘ராமன் வந்தான்’’ என்ற வாக்கியத்தை ஒலி ஏற்ற இறக்கத்தால் வினாப் பொருளையும் முருகனா வந்தான். முருகன் வந்தானா! என வியப்புப் பொருளையும் குறிக்கக் கையாளலாம்.

பேச்சு மொழியை நேருக்கு நேர் நின்றே பயன்படுத்த முடியும். எளிதில் பாதுகாக்க முடியாது. ஆனாலும் விஞ்ஞான வளர்ச்சியால் தொலைபேசி, பதிவு நாடகக்கருவி முதலிய சாதனங்கள் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு இவற்றில் மாற்றம் ஏற்பட்டாலும், அவை எல்லோரும் எளிதாகப் பயன்படுத்தும்படி அமையவில்லை. பேச்சுமொழியை ஒருமுறை பயன்படுத்தியதும் திரும்பப்பெறவோ திருத்தவோ முடியாது. எனவே, அதுதான் இயற்கையானதும் இயல்பானதுமாகும்.

### 1.1.10 பேச்சுமொழியும் இலக்கியமும்

இலக்கிய வளர்ச்சி பரந்துப்பட்டுக் காணப்படும் சூழலில் பேச்சுமொழி இலக்கிய வகைகளும் மிகுந்த வளர்ச்சியை அடைந்து வருகிறது எனலாம். காரணம் கிராமப்புற வட்டாரங்களில் அதிகமான எழுத்தாளர்கள் அவரவர்கள் சமூகம் சார்ந்த விழிப்புணர்வுகளையும், அடிமைத்தனத்தையும் பேச்சுமொழியில் எழுத முன்வந்துள்ளனர். இந்த வளர்ச்சி என்பது நாளுக்கு நாள் மேலோங்கி வருகிறது. அவ்வாறு உருவான இலக்கியங்களும், அதிகாரங்களும் ஏராளமானவை. பேச்சுமொழிக்கென்றே சில சொற்கள் கிராமங்களில் உருவாகின்றன. அவற்றையெல்லாம் இலக்கியத்தில் அழைப்பது பேச்சுமொழிக்கும், கிராமத்துக்கும் கிடைத்த வெற்றி என்றே சொல்ல முடியும்.

### 1.1.11 பேச்சுமொழி எழுத்து மொழியின் உறவு

பேச்சுமொழி காலத்தால் பழமையானதால் அதன் அடிப்படையில்தான் எழுத்துமொழி அமைந்திருக்க முடியும். எனினும் எழுத்து மொழி திருத்தமாக அமையக்கூடியது. முன்னோர்களின் கருத்துக்களையும், கலாச்சாரத்தையும் அறிந்து கொள்ள உதவியாக இருப்பது போன்ற காரணங்களால் எழுத்து மொழியே அடிப்படையானது, பழமையானது என்றும், பேச்சுமொழி கொச்சையானது என்றும் இக்கருத்து வரலாற்று மொழியியல் வளரும் வரையில் அதாவது 19-ஆம் நூற்றாண்டு வரை பல அறிஞர்களிடையே நிலவி வந்தது. ஆனால் வரலாற்று ஆராய்ச்சியால் பேச்சுமொழியிலும் பல பழமைக்கூறுகள் இருக்கின்றன என்று கண்டு கொண்டார்கள். எனவே, எழுத்து மொழியை அடிப்படையாகக் கொண்டதுதான் பேச்சுமொழி என்ற கருத்து இன்று வலுவிழந்துவிட்டது.

பேச்சுமொழியும், எழுத்துமொழியும் சிற்சில சிறப்புப் பண்புகள் உடையதாக இருப்பதால், அவற்றைத் தனித்தனியே ஆராய வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். மொழியியலாரிடையே காணப்படுகிறார்கள். அவர்களுள் பிராக் (Prague) மொழியியல் அறிஞர்கள் எழுத்து மொழிக்குத் தனியிடம் கொடுத்து ஆராய்வார்கள்.

எழுத்துமொழி எவ்வளவுதான் பேச்சுமொழியிலிருந்து வேறுப்பட்டிருந்தாலும் காலந்தோறும் எழுத்துமொழியும் மாறுப்பட்டு வருகிறது. சில சமயங்களில் பேச்சுமொழியை ஒட்டி எழுத்து மொழியும், எழுத்து

மொழியை ஒட்டிப் பேச்சுமொழியும் திருத்திக் கொள்ளப்படுகின்றன. ஆகவே, இரண்டும் மொழியிலாளர்களுக்கு இன்றியமையாத ஒன்று எனலாம்.

### 1.1.12 எழுத்துமொழியின் சிறப்பு

எழுத்துமொழி என்பது காலம், இடம், ஆகிய இரண்டையும் கடந்து நிலைத்து நிற்கவல்லது. எழுத்து மொழியை மீண்டும் திருத்தம் செய்து கொள்ளலாம். பேச்சுமொழியில் வேறுபடுத்தாத சொற்களைக்கூட எழுத்து மொழியில் வேறுபடுத்த முடியும். எளிதாகப் பாதுகாக்கவும் முடியும். எழுத்துமொழி இருப்பதால் தான் நம்முடைய முன்னோர்களுடைய சிந்தனைகளையும், பண்பாடுகளையும் அறிந்துகொள்ள முடிகிறது. எனவேதான் எழுத்து மொழியும் தனிச்சிறப்பு உடையதாகக் கருதப்படுகிறது.

### 1.1.13 மொழியின் செயல்கள்

பேச்சு மொழி அல்லது பேச்சு ஆறு கூறுகளையும் ஆறு செயல்களையும் கொண்டது. பேசுவோர், கேட்போர், சூழ்நிலை, செய்தி, தொடர்புச்செய்தி குறித்தல் என்பன ஆறு கூறுகள் ஆகும் பொருளைக் குறித்தல், பேசுவோர் உணர்ச்சியைக் குறித்தல், இன்னோசையைக் குறித்தல், பேச்சினால் உணர்வுத் தொடர்பு குறித்தல், பேச்சு(மொழி) தன்னைக் குறித்தல் என்பன ஆறும் பேச்சின் செயல்கள் ஆகும். இவற்றுள் செய்திக்குறித் தொடர் செய்தியைக் குறிக்கும் செயல் பேச்சு மொழியில் முதன்மை பெறுகின்றது.

### 1.1.14 ஒலியியல்புகள்

மொழியொலிகள், பேசுவோரது உயிர்ப்பு அல்லது மூச்சுக்காற்றில் பிறப்பன. ஒலியலைகளாகச் செவியில் சென்று மூளைக்குச் செல்லப் பொருள் விளக்கம் பெறும். ஒலிக் கூறுகளின் தொடரில் ஒலிக்கூறுகள் வேறுபடப் பொருள் வேறுபடும். ஒலிக்கூறுகள் பெரிதும் உயிர் மெய் போன்று முரண்பட்ட இரு கூறுகளை உடையன. ஒலிக் கூறுகள் இணைவில் ஒலி மாற்றங்கள் ஏற்படுவதியல்பு. ஒவ்வொரு மொழிக்கும் ஒலிக்கூறுகள் வேறுபடும். மொழியில் முதல், இடை, கடையில் ஒலிநிலைகள் வேறுபடும்.

### 1.1.15 ஒலியும், காலமும்

ஒலியன்களின் தொடர் நிலையில் ஏற்படும் புணர்நிலை ஒலிப்பு மாற்றங்களிலிருந்து வேறுபட்டன. இடத்தால் காலத்தால் ஏற்படும் ஒலிப்பு

மாற்றங்கள் ஒன்றன் இனமொழிகள் கிளை மொழிகள் சமுதாய மொழிகள் முதலியன இடத்தால் (காலத்தாலும்) பல நிலையில் வேறுபட்டு ஒலிப்பாலும் ஒலியின் அமைவாலும் முதன் மொழியிலிருந்து வேறுபடலாகும். இவ்வாறான இடக்காலயும் ஒலிமாற்றம் வேறு. இத்தகைய ஒலிமாற்றத்தை அம் மொழியின் ஒலிப்பு, ஒலியின் முறைக்கு தக்கவாறு, அவற்றுக்குட்படுத்திக் காண்பதே முறை.

ஒலி நிலையில் காலப்போக்கில் ஒன்று இரண்டாகலாம், இரண்டு ஒன்றாகலாம், ஒன்று மற்றொன்றாகத் திரியலாம். கூட்டொலி ஒன்று தனியொலியாக ஒன்றுபடலாம். அதிர்வு ‘ஹ’ ஒலியியல்பு, மூக்கியல்பு, தெளிவு, செறிவு, இறுக்கம், நீட்சி, இதழ் குவிவு, வன்மை, உரசியல்பு, இன்னொலியியல்பு முதலானவற்றை இழக்கலாம் அல்லது பெறலாம்.

### 1.1.16 படைப்பாற்றல்:

மொழியின் இன்னொரு தனித்தன்மை அதனுடைய படைப்பாற்றல் (Creative Power) நாம் மொழியில் புதிய புதிய வாக்கியங்களைப் படைக்கின்றோம். அதேபோல் புதிய புதிய வாக்கியங்களைக் கேட்கும்போது அவற்றைப் புரிந்து கொள்ளவும் செய்கிறோம். நம்முடைய அறத் துறைகளில் புதிய புதிய கண்டுபிடிப்புகள் ஒவ்வொரு நாளும் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றை எல்லாம் மொழி மூலம் வெளியிட்டுக் கொண்டிருக்கிறோம். நாம் புதிய புதிய இலக்கியங்களைப் படைக்கிறோம். அவற்றை மொழி மூலம்தான் வெளிப்படுத்துகிறோம். புதிய உருவகங்கள் புதிய தொடர்கள் ஆகியவை மொழியில் உருவாக்கப்படுகின்றன. இத்தகைய கூறு மனித மொழிக்கு மட்டும்தான் உண்டு.

### 1.1.17 இருமொழியும், பன்மொழியும்:

இரு வேறு மொழிகளைப் பேசும் சமூகங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொள்ளும்போது சிலர் அல்லது பலர் இருமொழியர்களாக (Bilinguals) பன்-மொழியர்களாக (Multilinguals) ஆகிறார்கள். சமூகங்களின் தொடர்பு இன்றி மொழிகளின் தொடர்பு இல்லை. இரண்டு, அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சமூகங்கள் தொடர்புகொள்ளும்போது சமூகங்கள் சமநிலையில் பங்கு கொள்வதில்லை. ஏற்றத்தாழ்வு மனப்பாங்கு மொழிகளின் மீது சுமத்தப்பட்டுச் சில மொழிகள் உயர்வானதாகவும் வேறு சில மொழிகள் தாழ்ந்ததாகவும் பார்க்கின்ற பார்வையை நம்மிடையே ஏற்படுத்துகிறது. மொழிகளின்

அமைப்பை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது எல்லா மொழிகளும் சமம். உயர்வு தாழ்வு என்பது சமூகத்தின் மனப்பாங்கு. அது சமூக மக்கள் பேசும் மொழியின் மீது ஏற்றப்படுகிறது.

### 1.1.18 மொழியும், செய்திப்பரிமாற்றமும்

மக்களிடையே செய்திகள் பலவகையில் பல வழியில் பரிமாற்றம் செய்யப்படுகின்றன. மக்கள் கூடி வாழ்வோராதலினால் எப்பொழுதும் ஒருவர் ஒருவரோடு கருத்து அல்லது செய்திப் பரிமாற்றம் செய்து கொள்ளும் இயல்பினர். பேசுவதும் பேசிவோர் கேட்பதும் புரிந்து கொள்வதும் மீண்டும் கேட்போர் பேசுவதும், பேசிவோர் கேட்பதும், புரிந்து கொள்வதும் நடைமுறை வாழ்வியல் இவற்றிடையே சொல்லும் செய்தியைப் புரிந்து கொள்ளுதல் மட்டுமன்றிச் செய்திப் பரிமாற்றம் செய்வானையும் அல்லது அவன் உள்ளத்தை (உணர்வை)யும் புரிந்து கொள்கின்றனர். எனவே மொழி, மக்களிடையே அறிவு, உணர்வுப் பரிமாற்றத்திற்கு வழியாகின்றது. இரு நிலையில் பின்புல அடித்தளமாக இருந்து பணியாற்றுவது, தலை அல்லது மூளை பேச்சன்றிப் பிற பலவும் செய்தியைத் தெரிவிக்கின்றன. எழுத்து அல்லது வரி, ஓவியம், அல்லது ஒளி, புகை ஊத்தொலி சைகை, மணியொலி, கம்புகளில் வெட்டுக்கள், கயிறுகளில் முடிச்சுக்கள், தோற் கருவிகளில் ஒலி எழுப்புதல், முகபாவனைகள், வரைபடங்கள் அல்லது வரை கோடுகள் முதலியன செய்தியைத் தெரிவிக்கப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. தலை வணங்குதல், கைகுவித்தல், கை கொடுத்தல் கை கொட்டுதல், விளையாட்டில் ஊர்திகளில் ஊத்தொலி கண் காட்டுதல், கை காட்டுதல், தலையசைத்தல், பெருவழிக்குறிகள், கோயில் மணி, மதிவண்டி மணி முதலிய பல நம் நடைமுறைச் செய்தித் தெரிவிப்புக்கள். மெக்சிகோ மெசடெக்கோ இந்தியர் ஊத்தொலிப் பேச்சைப் பயன்படுத்துகின்றனர். கானரித் தீவுக் கூட்டங்களில் ஒன்றான கொமேராக்கீவில் ஊத்தொலியே பேச்சு மொழி போல் பயன்படுத்தப்படுகின்றது. ஆயிரக்கணக்கில் சைகைக் குறிகளும் பொருட் குறிப்புகளும் வரையறை செய்யப்பட்டுள்ளன. நம்மிடையே பேச இயலாதோர் செய்கை அல்லது சைகையாலேயே கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்கின்றனர். இத்தகைய சைகை நாம் பேசும்போது பேச்சுக்குத் துணை நின்று பொருளைப் புலப்படுத்துவது தவிர்க்க முடியாத துணைச் செயலாகும்.

### 1.1.19 பிறமொழிக் கலப்பு

தமிழ்மொழியின் சரிதத்தை எடுத்துக்கொண்டால் பிறமொழிக் கலப்பு பண்டைக் காலந்தொட்டு இன்றுவரை நிகழ்ந்து வந்துள்ளது என்பது நன்றாகப் புலப்படும்.

**ஆசிரியர் தொல்காப்பியர்**

**இயற்சொல் திரிசொல், திசைச்சொல் வடசொல்லென்று**

**அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே. - சொல் - 397.**

அவர் காலத்துக்கு முன்புதானே இந்நூல்வகைச் சொற்களும் செய்யுளில் கலந்துவிட்டமையால் இவ்வாறு சூத்திரம் செய்து இவை எக்காலத்தும் செய்யுட்கு உரியன என்றும் கருத்துக்கொண்டனர். அவரது பேரிலக்கணத்திலே பல வடசொற்களையும் எடுத்தாண்டனர். உதாரணமாக அந்தம், மாத்திரை, காயம், கருமம், ஏது, அம்போதரங்கம், குஞ்சரம், வைசியன், வாணிகம் என்பவற்றைப் பிரயோக விவேக நூலார் காட்டினார்.

இவ்வாறு சங்க நூல்களிலும் வடசொற்களும் பிராகிருதச் சொற்களும் தமிழோடு கலந்துள்ளன. ஆனால் கலித்தொகையிலும், பரிபாடலிலும் வடசொற்கள் மிகுதியாகவுள்ளன. இதற்குப் பின்தோன்றிய கீழ்க்கணக்கு நூல்களிலும், தேவாரம் முதலிய அருளிச் செயல்களிலும் வடசொற்கள் பரிபாடலின் அளவிலேனும் வழங்கியுள்ளன.

### 1.1.20 உலகமொழிகள்

உலக மொழிகளிடையே, ஒப்புமைக் கூறுகளோடு வேற்றுமை கூறுகளும் பலவாகும். உலக மொழிகள் அனைத்திலும் உயிர்மெய் ஒலிவகைகளும், உயிரில் அகரமும், மெய்யில் ககரமும் சொல்லில் பெயர் வினைகளும் பிறபலவும் மொழி உலகத்துவமாகக் காணப்படுகின்றன.

தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலாகிய தமிழ் அல்லது திராவிடக் குடும்ப மொழிகள் பெரிதும் தென்னிந்தியாவில் பேசப்பட்டு வருகின்றன.

### 1.1.21 மொழிக்கிளைகள்

ஒரு மொழி, இடம் குறித்த நிலையில் அல்லது வெவ்வேறு வட்டார அளவில் ஒலி, சொல், இலக்கணம் முதலானவற்றில் ஒரு வகையில் திரிந்து திசை மொழிகள் அல்லது வட்டாரக்கிளை மொழிகள் எனும் நிலையில் வேறுபடுதலுமாம்.

மக்கள் இன அடிப்படையில், ஒவ்வொரு கூட்டத்தார் பேசும் வகை மொழியாகக் குறிப்பிடப்பட்டவற்றில் வேறுபட்டுச் சமூகக்கிளை மொழிகள் என வேறுபட்டு வழங்குவதுமாகும்.

தனி மனிதன் பேசும் மொழியே ஒரு தனிக் கூறுடையது அவன் ஒவ்வொரு மனநிலையில் பயன்படுத்தும் மொழியில் வேறுபாடு பல. மொழி என்பது ஒருவன் அல்லது ஒருத்தி மட்டும் பயன்படுத்துவதன்று, பலர் பயன்படுத்துவது, பலருடையது. அவரவர் இயல்புக்குத்தக்கவாறு வேறுபடும் இவ்வாறிருப்பினும் இவையாவும் அமைய அதுவொரு மொழி.

### 1.1.22 இலக்கிய உறவு

பண்டையத் தமிழ் இலக்கியங்களில் சேரநாட்டு மன்னர் மற்றும் மக்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. எட்டுத்தொகை நூற்களுள் ஒன்றான பதிற்றுப்பத்து சேர அரசர்களை மட்டும் பாடும் நூல்களாகும்.

தமிழின் முதல் நூலான தொல்காப்பியம் அதங்கோட்டு ஆசான் அவையில் அரங்கேற்றம் செய்யப்பட்டதாகக் கூறுவார்கள். இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து நூற்களில் சேரநாட்டுப் புலவர்களும், வேந்தர்களும் பாடிய பாடல்கள் உள்ளன. திருவாய்மொழி பாடிய நம்மாழ்வார் திருவனந்தபுரம் பத்மநாபசாமி கோயிலைப் புகழ்ந்து பாடும் பாடல்…

**“பசுமின் கூச்சமின்றிப் பெரியநீர் வேலை சூழ்ந்து**
**வாசமே கமழும் சோலை வயலணி அனந்தபுரம்**
**நேசம் செய்து உறைகின்ற நெறிமையால் மலர்கள் தூவிப்**
**பூசனை செய்கிறார்கள் புண்ணியம் செய்தவாறே”**

இவ்வாறு பலவிதமான இலக்கியங்கள் சேரநாட்டில் தோன்றியதாயினும் தமிழுக்குப் பெருமை சேர்க்கக் கூடியவைகள்.

### 1.1.23 இலக்கணக்கூறுகள்

பேச்சுமொழியில் பெயர்ச்சொற்கள் வேற்றுமை ஏற்கும்போது இன் சாரியைப் பெறுவதில்லை. ஆனால், எழுத்து மொழியில் பெற்றும் பெறாமலும் வரும்.

மரத்தினால் - மரத்தால் - மரத்தலெ
மரத்தினை - மரத்தை - மரத்தெ

மரத்திற்கு - மரத்துக்கு

மரத்தின் - மர

நாட்டின் - நாட்டு

ஆறாம் வேற்றுமை உருபுகள் அறு, உடைய ஆகியனவும் இடம் என்னும் ஏழாம் வேற்றுமை உருபும் (உயர்திணைப்பெயர்களிலும் மூவிடப் பெயர்களிலும்) எழுத்து மொழிகளில் மட்டுமே வருகின்றன. பேச்சுமொழியில் ஒட என்பது ஆறாம் வேற்றுமையும் கிட்ட என்பது ஏழாம் வேற்றுமையும் உணர்த்தும் நிலை பெற்றுப் பொருள் இல்லாமல் வரும்.

கையால் - கையாலெ

கையில் - கையிலெ

### 1.1.24 மொழி தோன்றும் வகை

மொழி திடீர் எனத் தோன்றுவதில்லை. விதையிலிருந்து முளை கிளம்பி, முளை மரமாக வளர்வதுபோல மொழியும் சிறிது சிறிதாகவே வளரும். விலங்குகளும் பறவைகளும், மற்றும் உயிர்களும் தத்தம் கருத்துக்களை வெளியிடச் சிற்சில ஒலிக்குறிகளையும் சைகைகளையும் பயன்படுத்துகின்றன. நாய் தனது மகிழ்ச்சியை வாலையாட்டியும், ஒருவகையாகக் குரைத்தும் தெரிவிக்கின்றது. பேட்டுக்கோழி ஆபத்து, ஆபத்தின்மையை வெவ்வேறு ஒலிக்குறிகளால் தன் குஞ்சுகளுக்கு அறிவிக்கின்றது. நாம் கூர்ந்து கவனித்தால் ஒவ்வொரு உயிரும் சில ஒலிக்குறிகளாலோ சைகைகளாலோ பேசுவதை நாம் அறியலாம். ஒருவர் மொழியை, ஒருவர் அறியாத இருவர் தனிவழியிடத்தே சந்தித்தால் அவர்கள் எவ்வாறு பேசுவார்கள்? நாம் ஊமையரோடும் செவிடரோடும் எவ்வாறு பேசுகின்றோம்? இவ்வாறே ஆதிகால மனிதன் பேச்சுமிருந்தது. அவன் தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கைப் பொருள்கள், பறவைகள், விலங்குகளிடமிருந்து எழும் ஓசைகளை உற்றுக் கேட்டான். அவ்வப்பொருள்களிடத்திலிருந்து எழுந்த ஒலிக்குறிகளையே அவ்வப் பொருள்களுக்குப் பெயராக இட்டு வழங்கினான். கா கா எனக் கரையும் பறவைக்குப் காகம் எனப் பெயரிட்டான். கூ கூ எனக் கூவும் பட்சியைக் குயிலென அழைத்தான். மா மா என அழும் விலங்கை மாடு என்றான். இவ்வகையில் தோன்றிய பெயர்களைப் பல மொழிகளில் இன்றும் காணலாம். இவ்வகையிலல்லாது வேறு சில வகைகளிலும் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களுக்கு அவன் பெயர்களை இட்டான். அப்பெயர்களின் காரணங்கள் எல்லாவற்றையும் இன்று அறிந்து கொள்ளுதல் கடினமாகும். பின்பு

செயல்கள், பண்புகளைக் குறிக்கவும் சொற்கள் வழங்கப்பட்டன. இவ்வாறு தோன்றிய சில ஒலிக்குறிகளும் சைகைகளும் ஆதிகால மக்களின் பேச்சாக இருந்து வந்தன. காலந்தோறும் தோன்றிய சொற்கள் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்தன. புதிதாக மக்கள் கண்டறியும் பொருள்களையும் செயல்களையும் குறிக்கும் சொற்களும் தோன்றின. இவ்வாறு மொழி சிறிது சிறிதாக நீண்டகாலம் வளர்ச்சியடைவதாயிற்று. இவ்வாறு மொழி தோன்றி வளர்ச்சியடைவதற்குப் பல்லாயிர ஆண்டுகளாயின.

### 1.1.25 மொழிகளில் புதிய புதிய ஒலிகள் காணப்படுவதற்குக் காரணம்

மக்களின் ஓசை அவர்கள் வாழும் இடங்களின் வெப்ப நிலைக்கேற்ப மாறுபடுகின்றது. வெப்ப நாடுகளில் வாழும் மக்களின் ஓசைக்கும் தட்ப நாடுகளில் வாழும் மக்களின் ஓசைக்கும் வேறுபாடு காணலாம். மக்களின் ஓசை மாத்திரமின்றிப் பறவை விலங்குகளின் ஓசையும் மாறுபடுகின்றது. இப்பூமியின் நடுக் கோட்டினின்று கீழ்நோக்கி அல்லது மேல்நோக்கிச் சென்றால் செல்லுந்தோறும் படிப்படியே வெப்பம் குறைகின்றது. அவ்விடங்களில் வாழும் மக்களின் ஓசைகளும் சிறிது சிறிதாக மாறுபடுகின்றன. இக்காரணத்தினாலேயே சிற்சில மொழிகளில் சிறப்பாகச் சிற்சில ஒலிகள் காணப்படுகின்றன. ஒருமொழியில் காணப்படும் சிறப்பொலிகள் இன்னொரு மொழியிற் காணப்படாவிடின் அது அம்மொழியின் குறைபாடு எனக் கருதுதல் ஆகாது. வெவ்வேறு மொழிகளை உச்சரிக்க மாட்டாதவராகின்றனர். அப்புதிய உச்சரிப்புள்ள சொற்களை ஒரு மொழியில் சேர்த்து வழங்குதல் அம்மொழியின் இயல்புக்கு ஏற்றதாகவும் இனிமையில்லாததாகவும் தோன்றுகின்றன.

### 1.1.26 தமிழும் திராவிடமும்

தமிழ் என்னும் சொல்லை ஆராய்கின்ற டாக்டர் கால்டுவெல் ‘திராவிடம்’ என்னும் சொல்லைத் ‘தமிழ்’ என்பதற்கு இணையான வடசொல் என்று கொண்டு இவ்விரு சொற்களுக்குமிடையில் ஒலியளவில் மிகுந்த வேறுபாடு இருப்பினும் அடிப்படை ஒன்றே என்று குறிப்பிட்டு, ‘திராவிடம்’ என்ற சொல்லே படிப்படியாக மாறி இறுதியில் ‘தமிழ்’ என்று புத்துருப் பெற்றது என்கிறார். இச்சொல்லாய்வைப் பல்வேறு அறிஞர்களும் மறுத்துரைக்கின்றனர். தொல்காப்பியர் காலத்திலிருந்தே இம்மொழியைக் குறிக்கத் ‘தமிழ்’ என்னும் சொல் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு வருவதைக் காண்கின்றோம்.

‘தமிழென் கிளவி’ - தொல்

‘தமிழ் கூறு நல்லுலகம்’ - தொல்-பாயிரம்

‘தமிழ் தலை மயங்கிய’ - புறம்

‘தமிழ் கெழு கூடல்’ - புறம்

என்பன போன்ற தொடர்களே இதற்குச் சான்றாகும். மேலும் தமிழ் மக்கள் தம் மொழிக்குத் தம் மொழியிலேயே பெயரமைக்காமல் பிறமொழிச் சொல்லொன்றைப் பெயராக அமைத்துக் கொண்டனர் என்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. டாக்டர் கால்டுவெல்லும் தன் கூற்றை ஏனையோர் மறுத்துரைப்பதைச் சுட்டிச்செல்கின்றனர்.

மேல்நாட்டார்கள் இம்மொழியைத் ‘தமுலிக்’ என்றும் ‘மலபார்’ என்றும் அழைத்து வந்தனர். கி.பி.1766-ல் 14-ஆம் லூயி மன்னன் தமிழன் ஒருவனுக்கு (ஆனந்தரங்கம் பிள்ளையாரின் உறவினர்) தமிழர் தலைவன் என்னும் பொருள்படும் ‘மலபார் தலைவன்’ என்ற பட்டத்தை வழங்கியுள்ளதைக் காண்கின்றோம். கோல்புருக் என்னும் அறிஞரும் தமிழை மலபார் என்று மேல்நாட்டார் அழைத்ததைக் குறிப்பிட்டுச் செல்கின்றார்.

தெலுங்கர்களும், கன்னடர்களும் தமிழ் மொழியை ‘அரவம்’ என்று அழைப்பதைக் குறித்துப் பல்வேறு கருத்துக்களைக் கால்டுவெல் விரிவாகக் கூறிச் செல்கின்றார். டாக்டர் குண்டர்ட்(Herman Gundert)’அரவம் என்பதை ‘அறவம்’ என்று கொண்டு, தமிழ் மொழியில் ஏனைய மொழிகளைவிட அறநெறி இலக்கியங்கள் மலிந்துள்ளதால் ‘அறம் நிறைந்த மொழி’ என்னும் கருத்துப்பட ‘அரவம்’ என்பர். வடமொழியில் ‘அரவம்’ (a-rava) என்றால் ஒலியற்றது என்பது பொருள். தமிழில் ‘ஹ’ போன்ற மூச்சொலிகள் இன்மையால் இம்மொழி ‘அரவம்’ என்று அழைக்கப்பட்டிருக்கலாம் என்ற கருத்தையும் டாக்டர் கால்டுவெல் தெரிவிக்கின்றார். எனினும் கன்னடர்களும், தெலுங்கர்களும் தமிழை ‘அரவம்’ என்று அழைத்ததன் காரணம் சிறப்பாகப் புலப்படவில்லை.

### 1.1.27 தமிழ் மக்கள்

திராவிட மொழிகளில் தொன்மை வாய்ந்த, பண்பட்ட, உயர்தனிச் செம்மொழியாய் இலக்கண, இலக்கிய வளம் பெற்றுத் திகழும் தமிழ் மொழியினைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழ் மக்களின் ஆற்றலினையும்,

சிறப்பினையும் வியந்து பாராட்டும் டாக்டர் கால்டுவெல் இம்மக்களை நாகரிக மேம்பாட்டின் உச்ச நிலையில், உலகிற்கு அறிவூட்டும் பேரொளியாக விளங்கிய கிரேக்க நாட்டு மக்களோடு ஒப்பிட்டுப் பேசுகின்றார். இந்துக்களுள் மூடநம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் குறைந்தவர்கள் தமிழ் மக்களே என்பது டாக்டர் கால்டுவெல்லின் மதிப்பீடு. பல்வேறு நாட்டு மக்களோடு தோன்றுதொட்டே கலாச்சார, பண்பாட்டு, வாணிகத் தொடர்புகள் கொண்டு, வாழ்வின் முறையிலும், மொழியிலும், கொள்வன கொண்டு, கொடுப்பன கொடுத்து மொழியையும் வாழ்வையும் வளஞ்செய்து வாழுமியல்பு தமிழ் மக்களின் பரந்த மனப்பான்மைக்கும், அறிவு வேட்கைக்கும் சான்றாகக் காட்சி தருகின்றது.

### 1.2 மலையாள மொழியின் தோற்றம்

கேரள நாட்டின் மொழிக்கு மலையாளம் என்று பெயர் உண்டானதே சமீப காலத்தில் தான். மலையாளம் என்பது முதலில் நாட்டின் பெயராக மட்டும் வழங்கிற்று. மலையைச் சார்ந்த ‘அளம்’ அதாவது நாடு என்ற பொருள் தோன்ற அமைந்த ‘மலையாளம்’ என்ற சொல் சற்றே மருவி மலையாளம் என்றாகியிருத்தல் கூடும். பிறகு ‘மலையண்ம’ ‘மலயாய்ம’ என்ற பெயர்கள் பேச்சு வழக்கில் பயின்று வந்திருக்கின்றன. இப்பால் நாட்டின் பெயரான மலையாளம் என்ற சொல்லே மொழியின் பெயராகவும் வழங்கி வருகிறது.

மலையாளத்தின் இயல்புகளைப் பார்க்கும்போது, அது திராவிட மொழியினத்தைச் சேர்ந்தது என்பது புலனாகிறது. மலையாளத்துக்கும் ஏனைய திராவிட மொழிகளுக்கும், உறவு எத்தகையது என்பதைப் பற்றி நிறைய கருத்து வேற்றுமை உண்டு. பண்டிதர்கள் பலர் மலையாளம் தமிழின் கிளை மொழிதான் என்று கருதுகின்றார்கள். (கால்டுவெல் பாதிரியார் தோற்றுவித்த இக்கருத்தைத்தான் பிற்காலத்தில் ஏ.ஆர்.ராஜராஜ வர்மா தம் கேரள பாணினீயத்தில் விரித்துரைத்து வலியுறுத்தியிருக்கிறார்). மூன்று வகையில் இக்கருத்துக்குப் பெருவாரியான ஆதரவு கிடைக்கிறது. ஒன்று, தமிழும் மலையாளமும் கொண்டுள்ள நீண்ட நாளைய தொடர்பு, இரண்டாவது, இவ்விரு மொழிகளின் இலக்கண விதிகளும் சொற்களும் புலப்படுத்தும் ஒற்றுமை, மூன்றாவது மலையாளத்தையே தமிழ் என்று பெயரிட்டு அழைத்து வந்தமை. ஆயினும் மொழிகளின் தொடர்பை அறுதியிடும் அறிவியல் ஆராய்ச்சிகளும், வரலாற்றைக் கண்கொண்டு ஆய்ந்து

ஒப்புமை பார்க்கும் முறையும் பெருகப் பெருக, மேற்குறிப்பிட்ட கருத்து வலுக்குறைந்து வருகிறது.

மலையாளத்திற்கும் தமிழுக்கும் இடையில் இவ்வளவு ஒப்புமை உண்டாகக் காரணமாயிருந்த இரு அம்சங்கள் உள்ளன. ஒன்று மொழியின் பரிணாம நெறியை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது மலையாளமும் தமிழும் ஒரே குலத்தைச் சேர்ந்த சகோதர மொழிகள் என்பது தெளிவாகும். இக்கருத்து தமிழுக்கும் மலையாளத்துக்கும் மட்டும் பொருந்துவது என்பதன்று. தமிழ், மலையாளம்,கன்னடம், தெலுங்கு ஆகிய திராவிட மொழிகளுக்கிடையில் இலக்கண விதிகளிலும், சொல்லியலிலும் நெருங்கிய தொடர்புகள் உண்டு. திரு.ராமகிருஷ்ணய்யா என்பவரால் தொகுக்கப் பெற்றுச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டிருக்கும் திராவிட மொழிக் குடும்பச் சொல் திரட்டில் (Dravidian Cognates) தமிழ், மலையாளம்,கன்னடம், தெலுங்கு, துளுவம், ஆகிய மொழிகளுக்குப் பொதுவானவையும் வழக்கிலுள்ளவையுமான சொற்கள் ஏறக்குறைய ஐயாயிரம் உண்டென்று சொல்லப்படுகின்றன. (2014:13) தொன்மையான மூல மொழி ஒன்றிலிருந்து அம்மொழிகளுள் ஒவ்வொன்றும் தோன்றியிருக்கிறது என்று காட்டுவதன்றி, இவற்றில் ஏதாவது ஒன்றிலிருந்து ஏனையவை தோன்றி இவ்வொப்புமைகள் மெய்ப்பிக்கவில்லை. இவ்வொப்புமை மலையாளத்தையும் தமிழையும் பொறுத்தவரையில் மேலும் நெருக்கமாக இருப்பதோடு, தெளிவாகவும் தெரிகிறது. இதற்குக் காரணம் இவ்விரு மொழிகளும் வழங்கி வந்த நாட்டுப் பகுதிகளின் நெருக்கமும் வரலாற்றுத் தொடர்புமேயன்றி இம்மொழிகளின் தாய்-சேய் உறவு என்று அறிய முடியும்.

பண்டையக் காலத்தில் தென் இந்திய முழுவதிலும் நிலவி வந்த மூலத்திராவிடமொழி பல்வேறிடங்களில் பலவாறாகப் பேசப்பட்டு வந்திருக்கிறது. அம்மொழியைப் பேசிய மக்களின் வாழ்க்கையில் ஏற்றத்தாழ்வுகள் பல நிகழ்ந்திருக்கின்றன. இக்காரணங்களால் விளைந்த பரிணாமத்தில்தான் இன்று நாம் முக்கியமானவையெனக் கருதும் தெலுங்கு, தமிழ், மலையாளம், கன்னடம், ஆகியவையும் அந்த அளவு முக்கியத்துவமில்லாத துளுவமும், குடகு மொழியும் தோன்றியிருக்கின்றன என்பதில் மொழி இயல் வல்லுநர்களிடையே கருத்து வேற்றுமைக்கு இடமில்லை. மேற்குத் தொடர்ச்சி மலையால் வெவ்வேறாகப் பிரிக்கப்பட்டு, தமிழும் மலையாளமும் சுயேச்சையாக வளர்ந்தனவாயினும், பிற்காலத்தில் சோழ நாடும் பாண்டிய நாடும் கேரள நாட்டுடன் அரசியல் தொடர்புகள்

கொண்டிருந்தால் தமிழுக்கு அசாதாரணமான செல்வாக்கு உண்டாகி அதன் கை ஓங்கி நிற்கிறது. பல நூற்றாண்டுகளாகக் கேரள நாட்டின் அறிவியல் விவகாரங்கள் யாவும் செந்தமிழிலேயே நடந்து வந்தன. இவ்வாறு செந்தமிழின் ஆதிக்கம் கேரள நாட்டை வெகு ஆழமாகப் பாதித்த போதிலும் பேச்சு வழக்கிலிருந்த மொழி, தொன்மையான காலத்திலிருந்தே உருவாகி, தமிழைச் சாராது வளர்ந்த மலை நாட்டு மொழியாகும், மூலத் திராவிட மொழியினின்றும் தோன்றிய காரணத்தால், கேரள மொழிக்கும் சில தனித்த இயல்புகள் உண்டு. மிகுந்த ஆதிக்கமும் செல்வாக்கும் பெற்றிருந்த செந்தமிழால் கூட இவ்வியல்புகளை அடியோடு மாற்ற முடியவில்லை என்றால் மலையாளத்தின் தனித்துவம் அத்தகைய சிறப்பு வாய்ந்தது. இதற்கு நேர்மாறாக மேற்குறிப்பிட்ட செந்தமிழாக்கம் பாண்டி நாட்டுத் தமிழை ஓரளவு உருமாற்றியிருக்கிறது. இதனால் மூலத்திராவிட மொழியின் அடிப்படை இயல்புகளைப் பாண்டி நாட்டுத் தமிழில் காண்பது அரிதாக உள்ளது. பார்க்கும்போது பலவற்றால் மலையாளமே மூலத்திராவிட மொழிக்கு மிகவும் நெருங்கிய மொழியாகக் காணப்படுகிறது என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாக உள்ளது.

தமிழ் மலையாளத்தை ஒப்பிடும்போது வினைச்சொற்களோடு பால்-இட விகுதிகளைச் சேர்த்தல் தமிழ் வழக்கில் இருக்கிறது. (எடுத்துக்காட்டு: அவன் வந்தான், அவர் போனார், அவள் வந்தாள்) மலையாளத்தில் பழைய முறையே தொடர்ந்து பயின்று வருகிறது. ‘அ’ ‘ஈ’ என்ற சுட்டெழுத்துக்கள் தமிழ்க் கவிதைகளிலன்றி மற்றெங்கும் வழக்கில் இல்லாதிருக்க பேச்சுவழக்கில் கூட அவை மலையாளத்தில் பயின்று வருகின்றன. மூல திராவிட மொழியில் மட்டும் இருந்த சில சொற்கள் இன்று தமிழில் இல்லை. (எ.டு: தெல்லு, நின், ஆயி). சில உச்சரிப்புகளும் அப்படியே (எடு. ‘ற்ற’ என்ற மெய்யெழுத்தின் பழைய இன்றைய உச்சரிப்பு தமிழில் இல்லாதிருக்க, மலையாளத்தில் இருந்து வருகிறது). இந்த எழுத்துகளால் மலையாளம் மூலத்திராவிட மொழிக்கு மிகுந்த நெருக்கமுடையது என்பதும், அது தொன்மையான தனித்திறனுடையது என்பதும் நிரூபிக்கப்படுகின்றன. தமிழ் இலக்கண நூல்களில் மிகப் பழமை வாய்ந்த தொல்காப்பியத்தின் இலக்கண விதிகளுக்கொத்த சொல்லாட்சிகள் பல தமிழில் கிடைக்காமலிருக்க, அவை மலையாளத்தில் காணப்படுகின்றன என்று பண்டிதர்கள் சுட்டிக்காட்டுகிறார்கள். பழைய மலையாளச் சொற்கள் பலவற்றின் விஷயமுமே அப்படித்தான். கேரள நாட்டுடன் நெருங்கிய தொடர்புடைய சிலப்பதிகாரம், பதிற்றுப்பத்து முதலிய

பழந்தமிழ் நூல்களில் பயின்று வருவனவும், மூலத்திராவிட மொழிகளின்றும் வழி வழி வந்தனவும், ஒரு காலத்தில் வழக்கிலிருந்தனவுமான எண்ணிறந்த திராவிடச் சொற்கள் (எ.டு: துன்னல்காரன், பீடிக, அங்காடி, அளியன், பத்தாயம், ஈடு, தேணி, பாணி, பாவ, புலரி-இன்ன பிற) இன்றைய தமிழர்களால் நிகண்டின் உதவிக்கொண்டு புரிந்துகொள்ள வேண்டிய அருஞ்சொற்களாயிருக்க, மலையாளிகளைப் பொறுத்த வரையில் அவை இன்னமும் வழக்கிலுள்ள சொற்களாகவே நிலவி வருகின்றன.

### 1.2.1 மலையாளத்தின் தனித்தன்மை:-

மேலே குறிப்பிட்டிருக்கும் தனி இயல்புகளினால் மலையாளம் மிகப் பழைய காலத்திலிருந்தே வேறுபட்டு நின்றிருக்கிறது என்பது மறுக்க முடியாதபடி மெய்ப்பிக்கப்படுகிறது. ஒரே மூலமொழியின் இரண்டு கிளைகள் என்ற நிலையில் மலையாளமும் தமிழும் சுதந்திரமாக வளர்ந்து வருகின்றன. பிற்காலத்தில் தமிழ் செம்மைப்பட்டுச் செந்தமிழாக மாறியபோது, மலையாளம் அடிப்படையில் அந்த அளவு மாறவில்லை. ஆயினும் வரலாற்றுத் தொடர்பாலும் இரு நாடுகளின் நெருக்கத்தாலும் பாண்டி நாட்டுத் தமிழிலிருந்து பல சொற்களையும் சொல்லாட்சிகளையும் பிற்காலத்தில் மலையாளம் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அதனால் மேலே கூறியதைப் பார்க்கும்போது மலையாளத்துக்கும் தமிழுக்கும் மிக நெருங்கிய உறவு இருப்பதாகத் தோன்றுகிறதேயன்றி, அவ்விரண்டில் ஒன்று மற்றொன்றிலிருந்து பிறந்தது என்ற தாய் சேய் உறவு ஒன்றைக் கற்பனை செய்யத் தேவையே இல்லை. இரு மொழிகளிலும் ஒத்த ஒலிகள் அதிகமாக இருக்கின்றன என்பதைக் கொண்டு மட்டும் ஒன்று மற்றொன்றிலிருந்து பிறந்திருக்கிறது என்று முடிவு கட்டுவது மொழியியல் முடிபுகளுக்கு முரண்பட்டதாகும். பழைய காலத்திலிருந்தே மலையாளத்தைத் ‘தமிழ்’ என்றே பெயரிட்டு அழைத்திருக்கிறார்கள் என்பதுதான் தமிழும் மலையாளமும் ஒன்றே என்று கருதுவதற்கான மற்றொரு காரணம். ‘தமிழ்’ என்று குறிப்பிட்டதில்லை. மூலத்திராவிட மொழியின் பிரிவுகள் என்ற கருத்தில் கன்னடத்தைக் ‘கரி நாட்டுத்தமிழ்’ என்றும் ‘துளு’வைத் ‘துளுநாட்டுத்தமிழ்’ என்றும் வழங்கி வந்ததுபோல, மலையாளத்தை ‘மலைநாட்டுத்தமிழ்’ என்று அழைத்தார்கள் என்பதோடு சரி. ‘கரி நாட்டுத் தமிழ்’ பிற்காலத்தில் ‘கர்நாடகமாகவும்’ மலைநாட்டுத் தமிழ் மலையாளமாகவும் அல்லது ‘மலையாள’ மாகவும், துளு

நாட்டுத் தமிழ் ‘துளு’வாகவும் மாறிய பிறகுமே மலையாளத்தைப் பொறுத்த வரையில் மூல மொழியைக் குறிக்கிற ‘தமிழ்’ என்ற சொல் தொடர்ந்த வழக்கமாகத் தங்கிவிட்டது. ‘தமிழ்’ என்ற சொல்லுக்கு இங்கு மொழி என்று மட்டும்தான் பொருள். இதன் விளைவாகத்தான் ‘பச்சை மலையாள’ நூல்கள் சிலவற்றைக்கூடத் ‘தமிழ்’ என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

தமிழோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, திராவிட மொழிகளில், உறவு நிலையில் தமிழுக்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணப்படும் சிறப்பினைப் பெற்று, வளர்ந்து வரும் இலக்கியச் செல்வங்களுடன் புதுப்பொலிவு பெற்றுத் திகழும் மலையாளமொழி, பண்டைத் தமிழ்நாட்டின் மேற்குப் பகுதியான சேர நன்னாட்டில் பேசப்பட்டு வருகின்றது. இம்மொழியைப் பேசும் மக்களின் தொகை ஏறத்தாழ மூன்று கோடி. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இப்பகுதியில் எழுந்த ‘பதிற்றுப்பத்து’ ‘சிலப்பதிகாரம்’ போன்ற நூற்களே இதற்குச் சான்றாகும். மேலும் மலையாள மொழியின் தொடக்க நிலையில் எழுந்த இலக்கியங்களிலும் தமிழின் ஆதிக்கமே மிகுந்துள்ளது. 15ம் நூற்றாண்டு வரை சமஸ்கிருத மொழியின் தாக்கமும், அதன் பின்னர் ஆங்கிலம் போன்ற மேல்நாட்டுப் பாதிரிமார்கள் இம்மொழிக்குப் பல இலக்கண நூற்களை எழுதிக் குவித்தனர்.

மலபார் கடற்கரை சிறந்த துறைமுகமாக அமைந்திருந்ததால் கிரேக்கர், யூதர், போர்த்துக்கீஸியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோர் வடமொழி, மலையாளம், தமிழ் ஆகியவற்றைத் திராவிடம் என்ற பொதுப் பெயராலேயே சுட்டினர். எனினும் முற்காலத்திருந்தே இந்நாட்டைக் குறிக்கக் ‘கேரளம்’ என்ற சொல்லைப் பயன்படுத்தினர் என்பதற்கு கி.மு.3-ம் நூற்றாண்டில் எழுந்த அசோகனது கல்வெட்டிலுள்ள ‘கேரளபுத்திரா’ என்ற தொடரே சான்றாகும். இந்நாட்டு மன்னனைப் பிளினி என்பவர் ‘செலபத்ராஸ்’(Celobotras) என்றும் தாலமி ‘கெரபத்ராஸ்’ (Kerabothros) என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். இயற்கையமைப்பில் இப்பகுதி வளைந்து காணப்படுவதால் ‘கொங்குநாடு’ என்ற பெயரும் ஏற்பட்டது.

தமிழிலிருந்து பல ஆண்டுகளுக்கு முன்னர்ப் பிரிந்து சென்ற மொழியாக இருந்தபோதிலும் இம்மொழி திராவிட மொழிகளின் வினைமுற்றுக்களிலுள்ள பால்காட்டும் விகுதிகளை (Pronominal Terminations) விலக்கியுள்ளது. மேலும் அளவு கடந்த வடமொழிச்

சொற்களை ஏனைய திராவிட மொழிகளைவிடவும் மலையாள மொழி அதிகமாக ஏற்றுள்ளது. தமிழிலில் 'ஐ'கார ஈற்றைக் கொண்டு முடியும் சொற்களெல்லாம் இம்மொழியில் 'அ'கர ஈற்றைப் பெறுகின்றன.

**எ.கா**. மலை - மல

தமிழில் வல்லொலியும் மூக்கொலியும் இணைந்து வரும் இணைவுகள் (Nasal+Stop Clusters) மலையாளத்தில் இரு மூக்கொலிகளின் இணைவுகளாக ஓரினமாதலைக் (Assimilation)காணலாம்.

இம்மொழிக்கு டாக்டர் குண்டர்ட் இலக்கண நூலும் அகராதியும் அமைத்துள்ளார். அவர் தமிழிலிருந்த மலையாளம் தோன்றியது என்ற கருத்தை ஒத்துக்கொள்ளாமல் கொடுந்தமிழின் ஒரு கிளை மலையாளம் என்றும், மற்றொரு கிளை தமிழ் என்றும் குறிப்பிடுகின்றார். 'கேரளபாணினியம்' என்ற நூலை எழுதிய பேராசிரியர் யு.சு.இராஜராஜவர்மா என்பவரும் மலையாளம் தமிழிலிருந்து தோன்றியது என்ற டாக்டர் கால்டுவெல்லின் கொள்கையை மறுக்கின்றார். வேறு சிலர், தமிழ்மொழி மலையாளத்திலிருந்து தோன்றியது என்னும் கொள்கையை நிலைநாட்ட முயலுகின்றார். இக்கொள்கை பேராசிரியர் ஆத்தூர் கிருஷ்ணபீலி என்பவரால் எழுதப்பட்டது. இதனை டாக்டர் மு.ஆ.ஜார்ஜ் என்பவரும் வழிமொழிகின்றனர்.

வரலாற்றுணர்வோடும், மொழி நூலுணர்வோடும் இவ்விரு மொழிகளையும் நோக்குவோருக்கு இக்கொள்கை வியப்பையும் நகைப்பையும் விளைவிக்கும். சிலம்பும், பதிற்றுப்பத்தும், புறநானூற்றின் பல பாடல்களும் முன்னர்த் தமிழ்மொழி வழங்கிய, தற்போதைய மலையாள மொழி வழங்கும் சேர நாட்டில் முகிழ்த்தன என்பது தெளிவு. இப்போதுள்ள தமிழ் நாட்டோடு படிப்படியாகக் கலாச்சார, பண்பாட்டு, இலக்கியத் தொடர்புகளை இழந்தாலும், வடமொழித் தொடர்பு மிகுந்தாலும் இப்பகுதியில் பேசப்பட்டு வந்த தமிழ் மொழி வேறு ஒரு மொழியாக வளரத் தொடங்கியது. காலப்போக்கில் தமிழிலிருந்து மலையாளம் முற்றிலும் வேறுபட்ட போதிலும், 'இராமசரிதம்' போன்ற தொன்மையான இலக்கியங்கள் மலையாளம் பேசும் மக்களைவிடத் தமிழ் பேசும் மக்களால் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் அமைந்திருக்கின்றன. பழைய மலையாள இலக்கியங்களில் தமிழ் ஒலியன்களான பன்னிரண்டு உயிரும் பதினெட்டு மெய்யுமே மிகுதியாக உள்ளன. கிரந்த எழுத்தையொட்டி மலையாளத்திற்கு எழுத்துகள் அமையவே பிற்காலத்தில் மற்ற வடமொழி ஒலிகளும் மலையாளத்தில் மிகப்

பயின்று கலப்புற்றன. பண்டைய மலையாள மொழியின் இலக்கியங்கள் வடமொழியை விடத் தமிழையே பின்பற்றி அமைந்திருக்கின்ற இயல்பினை டாக்டர் குண்டர்ட் அவர்களும், டாக்டர் மு.ஆ.ஜார்ஜ் அவர்களும் ஒத்துக் கொள்கின்றனர். எனவே டாக்டர் கால்டுவெல் கூறுவதைப் போன்று தமிழின் மிகத் திரிந்த கிளைமொழி மலையாளம் என்று கொள்வதே பொருத்தம். இலக்கிய வளத்திலும், படைப்பாற்றலிலும் இன்றைய நிலையில் திராவிட மொழிக்குடும்பத்தில் மிக உயர்ந்த இடத்தை மலையாளமே பெறுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

## 1.3 சேரளம்

'சேரளம்' என்ற சொல் மருவிக் கேரளம் என்று வழங்குகிறது. சே + அளம் - சேரளம். கடல் உள்வாங்கியதால் அதிகமாகச் சேர்ந்த நிலப்பகுதி 'சேரளம்' என்று அழைக்கப்பட்டது. வடமொழி அறிஞர்கள் சேரளத்தைக் 'கேரளம்' என்று அழைத்தனர். அதுபோல 'மலைநாடு', ''மலைவாரம்'' என்ற சொல் பின்னாளில் மலபார் என்றும் அழைக்கப்பட்டது. திருச்சூர் முதல் காசர்கோடு வரையுள்ள மாவட்டங்கள் பண்டைய மலபார்ப் பகுதிக்கு உட்பட்டவை.

### 1.3.1 வரலாற்றுப் புனைகதை

பரசுராமன் நாடு, திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்று பரசுராமன் அவதாரம். அதவாது வடமொழியில் 'பரசு' என்பதற்கு 'மழு' என்று பொருள். மழுவை ஏந்திய ராமன் - பரசுராமன். சத்திரியர்கள் மீது கோபம் கொண்ட ராமன் உலகில் உள்ள அனைத்து ஆண் சத்திரியர்களையும் கொன்று ஐந்து குளங்களில் குருதியைத் தேக்கிவைப்பான் என்பது வரலாற்றுப் புனைக்கதையாக அறியமுடிகிறது. சினம் தணிந்து பரசுராமன், வருணன் மற்றும் பூமாதேவியோடு கன்னியாகுமரிக்குச் செல்கிறான். குமரி முனையிலிருந்து தன் கை மழுவை வடக்கு நோக்கிக் கடலில் எறிந்தான். அம்மழு 160 காதம் தொலைவிலுள்ள கோகர்ணம் கடலில் வீழ்ந்தது. கடல் உள்வாங்கியது. இதன் காரணமாக மலைப்பகுதி உருவாகிறது. இதனால் பரசுராமன் நாடு என்று அழைக்கப்படுகிறது.

### 1.3.2 கேரளத்தில் தமிழ் மக்கள்

தமிழ்நாட்டோடு அதிக உறவுகொண்ட மாநிலங்களுள் மிக முக்கியமானது கேரளம். கேரளத்து மக்கள் தமிழ்நாட்டிலும், தமிழ்நாட்டு

மக்கள் கேரளத்திலும் இயல்பாக மக்களோடு மக்களாகக் தொடர்பு கொண்டு வருகின்றனர். பண்டமாற்று முறையில் இரண்டு மாநிலங்களும் மிக நெருங்கிய உறவைத் தக்கவைத்துக் கொள்கிறது. அப்பேற்பட்ட சூழலில் கேரளாவில் உள்ள இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம், வயநாடு, கொல்லம் போன்ற மாவட்டங்களில் தமிழ் மக்கள் அதிக அளவில் வாழ்ந்து வருகின்றனர். மட்டுமல்லாமல் அரசு முக்கியப் பொறுப்புகளிலும் பணியாற்றுகின்றனர். இவ்விரு மக்களும் பிற மொழியைக் கற்பதில் அதிக ஆர்வம் செலுத்துகின்றனர். அவற்றை முறையாக வாசிக்கவும், எழுதவும் பழகிவிட்டனர். இங்கு பயன்படுத்தக் கூடிய மொழி என்பது மிகவும் கவனிக்கத்தக்கது. அதாவது தமிழில் உள்ள சொற்கள் மலையாளத்தில் இருந்தாலும் இரண்டு மொழியும் இருவெறு பொருளை உணர்த்தக்கூடிய சூழல் உருவாகிறது. சில வேளைகளில் ஒரே பொருளையும் உணர்த்துகிறது.

### 1.4 எல்லையோர மாவட்டங்களின் புவியியல் அமைப்பு

**இடுக்கி மாவட்டம்:**

கேரள மாநிலத்திலுள்ள பதினான்கு மாவட்டங்களுள் இதுவும் ஒன்றாகும். இந்த மாவட்டத்தின் தலைமையகம் கட்டப்பணை வட்டத்திலுள்ள பைனாவு என்ற இடத்தில் அமைந்துள்ளது. இடுக்கி மாவட்டம் கேரளத்தின் இரண்டாவது பெரிய மாவட்டமாகும். கேரளத்தில் இந்த மாவட்டத்தில்தான் தமிழர்கள் அதிகமாக வாழ்கின்றன. அதாவது தேவிகுளம், பெருமேடு (பீர்மேடு) வட்டங்களில் வாழும் பெரும்பான்மையான மக்கள் தமிழர்களே. இம்மாவட்டத்தின் பெரும்பாலான பகுதி ஏறத்தாழ 97 விழுக்காடுகள் காடுகளாலும் மலைகளாலும் வனங்களாலும் சூழப்பட்டிருக்கின்றன. இது ரயில்பாதை கடந்து போகாத மாவட்டமும், தென்னிந்தியாவில் உயரம் கூடிய கொடுமுடியான ஆனைமுடிச்சிகரம் அமைந்துள்ள மாவட்டமுமாகும். மேலும் கேரளத்தில் மறையூர் என்ற பகுதியில் காணப்படும் வாசனைத் திரவியம் (சந்தனம்) என்று சொல்லக்கூடிய சந்தன மரங்கள் காணப்படுவதும் இம்மாவட்டத்தில்தான். கேரளத்தில் மிகப்பெரிய நீர் தடாகம், இந்தியாவில் மிகவும் பழமையான அணைக்கட்டுகள் மற்றும் கேரளத்தில் ஒரே ஒரு பழங்குடிப் (ஆதிவாசி) பஞ்சாயத்தான இடமலக்குடி மற்றும் தமிழர்களின் வாழ்வாதாரமான கண்ணன் தேவன் தேயிலைத்தோட்டம் போன்றன இம்மாவட்டத்தில்தான் அமைந்துள்ளன.

மேற்குத் தொடர்ச்சி மலையால் சூழ்ந்துள்ள இம்மாவட்டம் நீர்வளமும், நிலவளமும் உடையது. பெரியாறும் பம்பையாறும் இம்மாவட்டத்தில்தான்

பயணிக்கிறது. முல்லைப் பெரியாறு (தமிழகத்திற்கும் கேரளத்திற்கும் நீர்ப்பாசனத்தை வழங்கக்கூடிய ஆறு) முல்லைப் பெரியாறு, மூவாற்றுபுழை, மணிமலையாறு மற்றும் பாம்பாறு போன்றன இம்மாவட்டத்தில் பயணிக்கின்ற முக்கிய ஆறுகளாகும்.

இம்மாவட்டத்தில்தான் கேரளத்தின் பெரும்பாலான தேசியப்பூங்காக்கள் (National Park) இடம் பெற்றுள்ளன. கேரள மக்களால் தென்னிந்தியாவின் காஷ்மீர் என்று அழைக்கப்படும் மூணார் என்ற பகுதி இம்மாவட்டத்தில் அமைந்துள்ளது. கேரளாவில் பழங்குடியின மக்கள்தொகையில் இடுக்கி மாவட்டம் இரண்டாம் இடத்தைப் பெறுகிறது. மேலும் இம்மாவட்டத்தில் 245 வகையான பழங்குடி மக்கள் இருப்பதாக அறியமுடிகிறது. (2014:424).

இம்மாவட்டத்தின் கிழக்கு எல்லையாக தமிழ்நாட்டிலுள்ள தேனிமாவட்டமும் மேற்கு எல்லையாக எர்ணாகுளம் மற்றும் கோட்டயம் போன்ற மாவட்டங்களும், தெற்கு எல்லையாகப் பத்தனம்திட்டாவும் வடக்கு எல்லையாகத் திருச்சூரும், தமிழ்நாட்டிலுள்ள கோயம்புத்தூரும் அமைந்துள்ளன.

இம்மாவட்டம் தொடுபுழா, பீருமேடு, உடும்பன் சோலை, இடுக்கி, தேவிகுளம் போன்ற ஐந்து வட்டங்களைக் கொண்டது. இதில் தேவிகுளம். பீருமேடு போன்ற வட்டங்கள் தமிழ்நாட்டிலுள்ள தேனி, திருச்சி மாவட்டத்தின் எல்லையிலுள்ளன. அதனால் இப்பகுதியில் பூர்வீக இடத்தைக் கொண்டவர்களும் குடியேறியவர்களும் அதிகமாக வாழ்கின்றனர்.

இம்மாவட்டத்தின் மொத்த மக்கள் தொகை 11,09,974 இதில் மொத்தப்பரப்பு -4358 ச.கி.மீ, கல்வியறிவு - 91.99 விழுக்காடாகத் திகழ்கிறது. இங்கு நகராட்சி -1, வட்டங்கள்(Taluk) -5, கிராமம் (Village) -64, தொகுதி பஞ்சாயத்துகள் (Block Panchayath) -8, கிராம ஊராட்சிகள் -52, என அமைக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் அனைத்து மதத்தைப் பின்பற்றுபவர்களும் மத நல்லிணக்கத்தோடு ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்ந்து வருகின்றனர்.

### 1.4.1 பாலக்காடு மாவட்டம் (1957 ஜனவரி-1)

கேரளாவில் உள்ள மிகப்பெரிய மாவட்டங்களில் முதன்மையானது பாலக்காடு மாவட்டமாகும். தமிழகத்தில் தஞ்சையைப் போல கேரள மாநிலத்தின் நெல்பயிர் வேளாண்மையில் முதன்மை இடம் பெறுகிறது.

அதனால் கேரள மாநிலத்தின் நெற்களஞ்சியம் என்று பாலக்காட்டை அழைப்பார்கள். பிற மாநில மக்கள் கேரளாவுக்குள் புகுந்ததும் பாலக்காடு வரவேற்பதால் கேரளாவின் நுழைவாசல் என்றும் கூறுவார்கள். மேற்குத் தொடர்ச்சி மலையின் தாழ்வரையில் உள்ள இம்மாவட்டம் நீர்வளமும் நிலவளமும் உடையது. ஆழியாறு காயத்திரிப்புழை கோரையார், சிறுவாணியாறு, வாளையாறு, தூதுபுழை, குந்திப்புழை, காஞ்சிப்புழை என்ற ஆறுகளெல்லாம் ஒன்று சேர்ந்து பாரதப் புழையாறாக இம்மாவட்டத்தில் பாய்கிறது. மலம்புழை அணைக்கட்டு, பரம்பிக்குளம், வாளையாறு, போத்துண்டி மற்று மீன்கரை சுள்ளியாறு போன்ற அணைக்கட்டுகள் நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுகின்றன.

பாலைமரம் நிறைந்த காடு பாலக்காடு ஆயிற்று. பாலையங்காடு பாலைத்துள்ளி பாலைப்பள்ளம், பாலைப்புறம் போன்ற பெயருடைய ஊர்கள் இப்பகுதியில் உள்ளன. குறிஞ்சியும் மருதமும் மயங்கியது பாலக்காடு மாவட்டம். கடற்கரை என்பது பாலக்காடு மாவட்டத்தில் இல்லை. 960 கி.மீ நீளமுடைய மேற்கு தொடர்ச்சி மலையில் 32 முதல் 42 கி.மீ. வரையிலான இயற்கை இடைவெளியே பாலக்காட்டுக் கணவாயாக அமைகிறது. இவ்விடைவெளியானது காலநிலை மாற்றும் பிற மாநில மக்களோடு பண்பாட்டுப் பரிமாற்றம், வணிகப்பரிமாற்றம் முதலியவற்றிற்குப் பண்டையக்காலம் தொட்டுப் பேருதவி செய்கிறது. இம்மாவட்டத்தின் கிழக்கு எல்லையாகக் கோயம்புத்தூர் மாவட்டமும் மேற்கு-வடக்கு எல்லைகளாக மலப்புறம் மாவட்டமும் தெற்கு எல்லையாகத் திருச்சூர் மாவட்டமும் அமைந்துள்ளன.

இம்மாவட்டம் பாலக்காடு, மன்னார்க்காடு, சித்தூர், ஆலத்தூர், ஒற்றைப்பாலம் என ஐந்து வட்டங்களைக் கொண்டது. பாலக்காடு, மன்னார்க்காடு, சித்தூர் வட்டங்கள் கோவை மாவட்டத்தின் எல்லையிலுள்ளன. அதனால் இப்பகுதிகளைப் பூர்விகமாகக் கொண்ட தமிழர்கள் ஏராளம் பேர் இங்கு வசிக்கிறார்கள். மாவட்டத்தின் மக்கள்தொகையில் 40 விழுக்காட்டின் தமிழர்கள். மொத்த மக்கள் 28,10,934, மொத்த பரப்பு 4480.ச.கி.மீ, கல்வியறிவு 88.31 விழுக்காடு ஆகும். இங்கு நகராட்சிகள் -5, வட்டம்(தாலுகா) -6 கிராம அலுவலகம் -163, ப்ளோக் பஞ்சாயத்து -9, கிராம பஞ்சாயத்துகள் -163 என அமைக்கப்பட்டுள்ளன. இம்மாவட்டத்தில் அனைத்து மதத்தைச் சார்ந்தவர்களும் நல்லிணக்க ஒற்றுமையோடு வாழ்கின்றனர்.

### 1.4.2 திருவனந்தபுரம் மாவட்டம்: (1956 **November**-1)

இம்மாவட்டம் கேரளா மாநிலத்தின் தலைநகரமாகும். இந்நகரானது திருவனந்தபுரம் என்றழைக்கப்படும் மாவட்டத்தின் ஒரு பகுதியாகும். இந்நகரம் மகாத்மா காந்தியால் இந்தியாவின் பசுமை நகரம் என அழைக்கப் பெற்றது. கேரளாவின் பெரிய நகரமும், அதிகமான சமதளங்களைக் கொண்ட நகரமும் இதுவே. இந்திய நடுவணரசின் ஆய்வுக் கழகங்களும் கேரளா மாநில அரசின் அலுவலகங்களும் இங்கே அதிகமாக உள்ளன. இந்நகரம் கேரளாவின் சிறந்த நகரமாக அறியப்படுகிறது.

திருவனந்தபுரம் என்பது தமிழ் சொற்களான திரு + அனந்த +புரம் ஆகிய பதங்களின் இணைப்பே திருவனந்தபுரமாகும். 'அனந்தன்' என்ற பாம்பின் மீதே திருமால் (அரங்கநாதர்) படுத்திருப்பார். இப்பெயர் இவ்வூரிலுள்ள புகழ்பெற்ற அரங்கநாதர் திருக்கோயிலால் அமைந்ததாகும். இந்நகரம் கி.பி.1745 முதல் 1949 வரை திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் தலைநகராக இருந்து வந்தது. 1949-க்குப் பிறகு இது திரு கொச்சியின் தலைநகராக இருந்தது. நவம்பர் 1 -1956-ல் கேரளா மாநிலம் உருவானபோது அதன் தலைநகராகத் தேர்வு செய்யப்பட்டது.
இம்மாவட்டத்தில் மிகபெரிய நதியாக வாமனபுரம் ஆறு விளங்குகிறது. மேலும் நெய்யார், கரமனயார், மாமம் ஆறு, பொன்முடி ஆறு, கிளிமானூர் ஆறு போன்றவை இம்மாவட்டத்தின் முக்கிய ஆறுகளாகும்.

இம்மாவட்டத்தைச் சுற்றி 78 கி.மீ அளவில் கடல் பரப்பு காணப்படுகிறது. கேரளாவின் முக்கிய துறைமுகமான ''விழிஞ்சம்'' துறைமுகம் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. கடல் அலையால் மின்சாரம் தயாரிக்கக்கூடிய திட்டத்தை இந்திய அளவில் முதலில் தொடங்கிய மாவட்டமாக இம்மாவட்டம் போற்றப்படுகிறது.

இம்மாவட்டத்தின் எல்லையாகக் கிழக்கு-தமிழ்நாட்டில் உள்ள திருநெல்வேலியும், மேற்கு -அரபிகடலும், தெற்கு -கன்யாகுமரியும், வடக்கு - கொல்லம் போன்ற மாவட்டங்களும் இம்மாவட்டத்தின் எல்லைகளாக அமைகின்றன. மாநகராட்சி -1, நகராட்சி -4, தாலுகா (வட்டம்)-6, வில்லேஜ் - 116 ப்ளோக் பஞ்சாயத்து-12, கிராமபஞ்சாயத்து (ஊராட்சி) 78, எனப் பிரிக்கப்பட்டு இம்மாவட்டம் அமைக்கப்பட்டுள்ளன.

இம்மாவட்டத்தின் மொத்த மக்கள் தொகையாக 33,01.427, மொத்த பரப்பு -2189 ச.கி.மீ, கல்வியறிவு 93.02 விழுக்காடு ஆகும். மக்கள்

தொகையில் கேரளத்தின் இரண்டாம் இடமாக இம்மாவட்டத்தை அழைப்பார்கள்.

**1.4.3 இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் மாவட்டங்களின் உற்பத்திப் பொருட்கள்.**

| **வ.எண்** | **மாவட்டம்** | **உற்பத்திப் பொருட்கள்** |
|---|---|---|
| 1. | இடுக்கி | ஏலம், தேயிலை, காப்பி, குருமிளகு, ரப்பர், தெங்கு (தேங்காய்) மற்றும் உருளைக்கிழங்கு, காரட், பீன்ஸ், முட்டைக்கோஸ், பீட்ரூட், வெள்ளைப் பூண்டு, பச்சைமிளகாய் போன்றவைக் கூடுதலாக இப்பகுதியில் விளைவிக்கின்றனர். தலைவலி தைலம் (மருந்து) யூக்காலிஸ் மரத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது. |
| 2. | பாலக்காடு | நெல், கரும்பு, நிலக்கடலை, தென்னை உழுந்து, தேயிலை (நெல்லியாம்பதி பகுதி) பருத்தி, பயிர்கள், கொள்ளு போன்றவையும் காய்கறிகளான (தக்காளி, வெண்டைக்காய்) கருவேப்பிலை, மாம்பழம், பலாப்பழம், சப்போட்டா, எலுமிச்சை, ஆரஞ்சுபழம் போன்றவையும் செவ்வந்தி, ஜாமந்தி, முல்லைபூ போன்ற பூவகைகளும் இம்மாவட்டத்தில் உற்பத்திப் பொருளாகச் செய்து வருகின்றனர். |
| 3 | திருவனந்தபுரம் | ரப்பர், தேயிலை, நெல், மரச்சீனி(சர்க்கரை வள்ளிக்கிழங்கு) ஏலக்காய் (கசுவண்டி) வாழை, பயிறு, கீரை, நிலக்கடலை, தென்னை, கமுகு(பாக்கு) குருமிளகு |

போன்றவையும் இப்பகுதியில் உற்பத்தி செய்து வருகின்றன. மேலும் கடலோரப் பகுதில் அதிகமான மக்கள் வாழ்ந்து வருவதால் மீன்களை இப்பகுதியில் முக்கிய உணவுப் பொருளாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

இம்மூன்று மாவட்டங்களில் ஹிந்து, கிறித்துவர் மற்றும் இசுலாம் மதத்தைப் பின்பற்றுபவர்கள் கூடுதலாகவும், மற்ற மதங்களைப் பின்பற்றுபவர்கள் குறைவாகவும் வாழ்ந்து வருகின்றனர். ஒவ்வொரு மதத்திலும் பல்வேறு வகையான சமூக பிரிவுகள் (ஜாதிகளாக) இருக்கின்றன. அவர்கள் ஒவ்வொருவரும் அவர்களுக்கு ஏற்ற உற்பத்திப்பொருளை வாழ்வாதாரத்திற்கு வேண்டி இப்பகுதியில் உற்பத்தி செய்து வாழ்ந்து வருகின்றனர்.

### 1.5 இரட்டைக் குடியுரிமை

எல்லையோரங்களில் வாழக்கூடிய தமிழ் மக்களுக்குப் பூர்வீகம் தமிழ்நாடு என்பதாலும் உறவினர்கள் மற்றும் குலவழிபாடுகள் எல்லாம் தமிழ் மக்களைப் பின்பற்றுவதாலும் தமிழ்நாட்டோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்களாக உள்ளனர். இப்பகுதியில் வாழும் பெரும்பாலான மக்கள் தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் இரட்டை குடியுரிமைப் பெற்றவர்களாக ஏராளமானோர் காணப்படுகின்றனர். இவர்கள் தேர்தல்களில் இரண்டு மாநிலங்களிலும் வாக்களிக்கக் கூடியவர்களாகவும் தமிழ்நாடு அரசு வழங்கக்கூடிய அனைத்து விதமான இலவசங்களையும் பெற்று வாழ்ந்து வருகின்றனர். சான்றிதழ்களும் கூட மாநிலங்களுக்கேற்ப சலுகைகளுக்கு ஏற்ப மாற்றி வாங்கிப் பயன்பெற்று வரக்கூடிய தமிழர்கள் அதிகமாகக் காணப்படுகின்றனர். இது பலவருடங்களாக இருக்கக்கூடிய பழக்கமானாலும் தற்கால தலைமுறையையும் இப்படிப்பட்ட சமூகச்சூழலுக்கு உள்ளாக்கி இருக்கின்றது. எந்த மாநிலத்தில் வேலை முதலில் கிடைக்கின்றதோ அந்த மாநிலத்தை முதன்மை குடியுரிமையுடைய மாநிலமாகவும் மற்ற மாநிலத்தைத் துணைமை குடியுரிமை மாநிலமாகவும் அதாவது ஏதேனும் சிற்சில காரணங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இந்தப் பழக்கம் படித்துப் பட்டம் பெற்ற நபர்களையும் விட்டு வைக்கவில்லை. அதேபோல் இரண்டு மாநிலங்களிலும் சொந்தமாக வீடு வைத்துள்ளவர்கள் ஏராளமாக உள்ளனர். ஜம்முக்காஷ்மீர் மாநிலத்தில் இரண்டு தலைமைச்செயலகம் உள்ளதுபோல

இப்பகுதி மக்களுக்குத் தம்முடைய குடும்பத்தேவைக்காகவும் சமூகத்தேவைக்காகவும் திருவிழாக்களின் பொருட்டும் சில நாட்கள் அல்லது சில மாதங்கள் அல்லது சில வருடங்கள் தங்கி ஓய்வெடுத்துக்கொள்ளப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

இரட்டைக் குடியுரிமையின் மூலம் கிடைக்கக்கூடிய இலவசப்பொருட்களைத் தமிழ்நாட்டிலிருந்து கேரளத்திற்குக் கொண்டுவரக்கூடிய நிலையும் சிலர் இலவசப்பொருட்களை வாங்கிய இடத்திலேயே விற்றுவரக்கூடிய சூழலும் ஏராளமாகக் காணமுடிகின்றது. சிலருக்கு இலவசப்பொருட்களை வாங்கமுடியாத சூழல் இருக்குமானால் குடும்ப அட்டையை (Ration card) யாருக்காவது கொடுத்துக் குறிப்பிட்ட நாளைக்குப் பயன்படுத்திக்கொள்ள உதவிசெய்து வருகின்றனர். இந்த நிலை இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மூன்று மாவட்டங்களிலும் தொடர்ந்து நடைபெற்று வருவதைக் காணமுடியும்.

### 1.6 இடம்பெயர்வு:

மனிதன் காலங்காலமாக ஓரிடத்தை விட்டு வேறொரு இடத்திற்கு இடம் பெயர்ந்துகொண்டே இருக்கிறான். இனக்குழுக்காலத்தில் கூட்டம் கூட்டமாக உணவு தேடியும், தங்குமிடம் தேடியும் இடம்பெயர்ந்தான். ஒரேயிடத்தில் தங்கி வாழ்ந்தாலும் அதன் எதிரிடையான இடம்பெயர்ந்தாலும் மானுட இயல்பாகும். இடம்பெயர்ந்துகொண்டே இருந்த சமூகம் ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்டது. மண் சார்ந்தும், தன்குழு சார்ந்தும், இனம் சார்ந்தும் வாழ்ந்திடும் அவசியம் ஏற்பட்டது. பின் கால ஓட்டத்தில் வணிகத்துக்காகவும் உயர்கல்விக்காகவும் போர்க் காரணங்களுக்காவும் இடம்பெயர்தல் நிகழ்ந்ததாகத் தொல்காப்பியம் கூறுகிறது.(2014,-1)

நம் சங்க ஆற்றுப்படை நூல்களும் இடம்பெயர்தலைப் பற்றிப் பதிவு செய்திருக்கின்றன. ஓரிடம் விட்டு வேறொரு இடம் போவதற்கு முன்னோடியாக பண்டைப் புலவர்களைச் சொல்லலாம். பழந்துறைமுகங்களான முசிறி, தொண்டி, கொற்கை, காவிரிப்பூம்பட்டினம் போன்ற இடங்களிலிருந்து யானைத் தந்தங்களும் வாசனைப் பொருட்களும் முத்தும், அரிசியும், இஞ்சியும், மிளகும் போன்றன பாபிலோனியா, கிரேக்கம், யவனம், சோனகம், சீனம் என இன்ன பிற நாடுகளுக்கும் ஏற்றுமதியாயின. தமிழகத்தையும் ஈழத்தையும் தங்களின் பூர்வநிலங்களாகக் கொண்ட தமிழர்கள் பழங்காலத்திலிருந்தே பர்மா, சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, இந்தோனேசியா போன்ற

நாடுகளுக்கு வணிகத்தின் பொருட்டுச் சென்று அங்கேயே தங்கியும் வாழ்ந்தும் மீண்டும் வந்தனர். இந்தியாவின் பல பகுதிகளிலும் உலகின் பல நகரங்களிலும் தமிழ் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இன்று உலகில் எழுபத்தெட்டு நாடுகளில் தமிழர்கள் வாழ்வதாகத் தமிழறிஞர் ச.வே.சு குறிப்பிடுகின்றார்.(2014:2).

நம் தமிழ் நாட்டிலும் யவனர், கிரேக்கர், சோனகர், சீனர் போன்ற நெடுந்தூரத்தினரான பிற நாட்டவர்கள் நம்நாட்டின் வளம், வீரம், கொடை, வாணிகம், அறிவு போன்ற காரணங்களால் தொழில் நிமித்தம் கருதி இங்குத்தங்கி வாழ்ந்திருக்கின்றன என்பதைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறியலாம்.

**பல்லாயமொடு பதிபழகி**
**வேறுவேருயர்ந்த முதுவா யொக்கற்**
**சாறயர் மூதூர் சென்று தொக்காங்கு**
**மொழி பல பெருகி பழிதீர் தேயத்துப்**
**புலம்பெயர் மாக்கள் கலந்தனி துறையும்.**

என்று பட்டினைப்பாலை கூறுகிறது.(2014:2).

தமிழகத்திலிருந்து வறுமை காரணமாகவும் ஆங்கிலேயரின் அடக்குமுறைக் காரணமாகவும் தோட்டத்தொழிலுக்காக இந்திய தேசத்தில் பிற மாநிலங்களுக்குப் பிழைப்புத் தேடிச்சென்ற தமிழர்கள் இந்தியா முழுவதும் பரவிப் பெருகியிருக்கின்றனர். குறிப்பாக அண்டை மாநிலமான கேரளா மற்றும் மும்பை, டில்லி, பெங்களூர் முதலான இடங்களில் தமிழர்கள் பெருமளவில் வாழ்கின்றனர். இந்திய நாட்டின் பிற மாநில மக்களும் குறிப்பாகக் கேரள, ஆந்திர மக்களும் மேற்சொன்ன நாடுகளிலும் இந்தியாவின் பல மாநிலங்களிலும் பரவி வாழ்கின்றனர். தமிழ் மக்கள் இடம்பெயர்வது என்பது நீண்டகாலமாகவே நிகழ்ந்து வருகின்ற ஒரு செயல். இருந்த போதிலும், அத்தகைய இடம்பெயர்வுகள் பொருளாதார மேம்பாட்டுக் காரணங்களுக்காகவே பெரும்பாலும் நிகழ்ந்துள்ளன என்பதை வரலாறு காட்டுகிறது.

## 1.7 இருமொழிச்சூழல்:

### விவசாயம்:

கேரள மாநில எல்லைப்பகுதியில் வாழக்கூடியவர்களில் (இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம்) அதிகமானோர் விவசாயிகள். இவர்களில் சிலர் தேயிலைத் தோட்டத் தொழிலாளிகளாகவும், காய்கறிகளை உற்பத்திச்செய்யக்

கூடியவர்களாகவும், மற்றும் பல விவசாய பொருட்களை உற்பத்திச் செய்யக் கூடியவர்களாகவும் இப்பகுதியில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களை, பிற மாவட்டங்களுக்கும், பிற மாநிலங்களுக்கும் கொண்டு சென்று பண்டமாற்றும் செய்வதால் இவர்களுக்கு மொழி ஒரு முக்கிய ஊடகமாகப் பயன்படுகின்றன. இதன்பொருட்டு இப்பகுதி மக்களுக்கு இருமொழியத்தின் தேவை இன்றியமையாத ஒன்றாக அமைகின்றன.

### 1.7.1 வாணிபம்:

எல்லாப் பொருட்களும் ஒரே இடத்தில் கிடைப்பது என்பது சாத்தியமற்ற ஒன்று. ஒவ்வொரு இடங்களுக்கும் ஒவ்வொரு வகையான உற்பத்திப் பொருட்கள் சிறந்ததாகக் காணப்படும். இத்தகைய உற்பத்திப் பொருட்களையும் பல்வேறு இடங்களுக்குக் கொண்டு சேர்க்கக்கூடியவர்கள் வாணிபக்காரர்கள். அந்த வகையில் இப்பகுதியில் ஏராளமான வாணிபர்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தங்களுடைய பொருளாதாரத்திற்கு ஏற்ப பல்வேறு இடங்களுக்குச் சென்று வாணிபத் தொழில்களைச் செய்து வருகின்றனர். அதன் பொருட்டு பொருட்களை வாங்கவோ, விற்கவோ ஏதுவாக அந்தந்த இடத்திற்கு ஏற்ற மொழி அவசியப்படுகிறது. இதனால் மட்டுமே வாணிபம் சிறப்பாகச் செய்ய முடியும். இத்தகை சூழலில் இரு மொழியத்தின் தேவை தவிர்க்க முடியாத ஒன்று.

### 1.7.2 வேலைவாய்ப்பு:

21-ம் நூற்றாண்டில் படித்த இளைஞர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாளாகக் கூடிக்கொண்டிருக்கின்றன. இந்த நிலை, இப்பகுதி மக்களிடம் சற்று கூடுதலாகவே காணப்படுகின்றன. சாதாரணமாக 10-ம் வகுப்பை அடிப்படையாகக் கொண்டு நடக்கக் கூடிய அனைத்துத் தேர்விற்குங்கூட முனைவர் பட்டப்படிப்பு (Ph.D) பெற்றவர்கள்வரை ஏராளமானோர் தயாராகி வருகின்றனர். சமூக பொருளாதார தேவையின் பொருட்டு வேலைவாய்ப்பு என்பது இன்றியமையாத ஒன்று. இத்தேவையை நிறைவு செய்ய கிடைத்த வேலையை இழந்தவர்கள் ஏராளமானோர் உள்ளனர். இத்தகைய சூழலை வென்றெடுக்க இருமொழியத்தின் தேவை படித்த இளைஞர்களுக்கும் அவசியமானது என்பதை உணர முடியும்.

### 1.7.3 கல்வி:

எல்லா மனிதனுக்கும் கல்வி என்பது அடிப்படை உரிமைகளில் ஒன்று. அப்பேற்பட்ட கல்வி எல்லோருக்கும் ஒரே இடத்தில் அமைவதில்லை. சில கல்விக்கூடங்களில் மேல்நிலைக் கல்விவரைதான் இருகின்றன. இதற்குப் பிறகு கல்வி கற்க பிற இடங்களைத் தேட வேண்டிய அவசியம் உருவாகின்றன. மட்டுமல்லாமல், அடிப்படைக் கல்வி சிலருக்கு ஆங்கில மொழியிலும், மலையாள மொழியிலும், தமிழ் மொழியிலும் என அவரவர்களுக்கு ஏற்றாற்போல அமைகின்றன. அதற்குப் பிறகு பொருளாதார தேவையின் பொருட்டு மாற்றியமைக்கவேண்டிய சூழலைத் தருணம் செய்ய இருமொழியத்தின் தேவை பெற்றோர்களுக்கும், குழந்தைகளுக்கும் மிக அவசியமான ஒன்றாக அமைகின்றது. இதற்கு கேரள - தமிழக எல்லைப்பகுதியில் வாழக்கூடியவர்களுக்குச் சற்று அதிகமாகக் காணப்படுகின்றது என்பதை அவர்களுடைய கல்வி நிலையை வைத்து உணர முடியும். கல்வி கற்றவர்களே ஆயினும் சில இடங்களில் இருமொழியத்தின் தேவையை அவர்கள் உணர்கின்றனர். அதாவது போட்டித்தேர்வுகள் எழுதும்போது சரியான பொருள் தெரியாமல் தோல்வியுற்ற மாணவ மாணவிகள் இப்பகுதியில் ஏராளமாக இருக்கின்றனர். ஒன்றிற்கு மேற்பட்ட மொழியைக் கற்பது என்பது இன்றைய காலகட்டத்தின் தவிர்க்க முடியாத தேவையாக இருக்கின்றது.

### 1.7.4 திருமணம்:

எல்லையோர தமிழ்மக்கள் கேரளாவில் வாழ்ந்தாலும் தங்களுடைய உறவு முறைகளை அமைத்துக் கொள்வதில் தமிழ்நாடுதான் முதலிடம் பெறுகின்றது. சிறுபான்மையினராக வாழக்கூடிய சூழலாலும் உறவு முறைகள் பெரும்பாலும் தமிழ்நாட்டை மையப்படுத்தி வாழ்வதாலும் தங்களுக்கு ஏற்ற நபர்களைத் திருமணம் செய்ய அதிகபடியான வாய்ப்புகள் தமிழ்நாட்டில்தான் உள்ளது என்பதால் அதிகமான தமிழ் மக்கள் சென்னை, மதுரை, திருநெல்வேலி, கன்னியாகுமாரி, தேனி, கோயம்புத்தூர், திருச்சி. நீலகிரி, தென்காசி போன்ற மாவட்டங்களை அதிகமாகவும் இன்னும் பிற மாவட்டங்களைக் குறைவாகவும் பயன்படுத்திக் கொள்கின்றனர். இப்படி திருமணம் செய்து கேரளாவிற்கு வருபவர்கள், கேரளாவின் எல்லையோர பகுதிகளுக்குத் தங்களுடைய அன்றாட தேவைகளை வாங்கவோ, குடும்ப சடங்கு முறைகளில் பங்கெடுக்கவோ, திருவிழாக்களில் பங்கெடுக்கவோ நேரிடும்போது ஒருவருக்கொருவர் உணர்வுகளைப் பங்கு வைக்க

இருமொழியத்தின் தேவை அவசியமாகின்றது. இப்பகுதி மக்களில் வாழும் தமிழரும், மலையாளியும் தங்களுடைய அன்றாட பழக்கவழக்கங்களில் ஏற்பட்டுக் காதல் திருமணம் செய்தால் குடும்ப உறவினர்களோடும் சமூகத்தோடும் பேசி உறவாட இருமொழியத்தின் தேவை முக்கிய காரணங்களாக அமைகின்றன.

### 1.7.5 ஊடகம்:

இந்திய ஜனநாயகத்தின் நான்கு தூண்களில் மிக முக்கியமான ஒன்று ஊடகம். கடந்த சில காலந்தொட்டு ஊடகத்துறையானது பெரும் வளர்ச்சியை எட்டியிருக்கின்றது. அனைத்து மக்களது தேவைகளையும் நிறைவேற்றுவதற்கு மூல காரணமாக இருக்கும் இந்த ஊடகங்கள் உலகத்தின் முக்கிய வழிகாட்டியாகவும் இருக்கின்றன. நாட்டின் பொருளாதார மேம்பாடு, தொழில்நுட்ப வளர்ச்சி ஆகியவற்றில் ஊடகங்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. ஊடகங்களைப் பொறுத்தவரையில் அது சமூகத்தின் உரிமைக் குரலாகவே இருக்க வேண்டும். அதனால்தான் ஊடகத்தை நாம் பொதுமக்களின் சொத்தாகவே கருதுகின்றோம்.

எங்கோ நடக்கக் கூடிய ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் வரிசைப்படுத்தி, கண்முன்னே நிறுத்தக்கூடிய அளவிற்கு ஊடகவாதிகளுக்கு மொழிப்புலமை தேவைப்படுகின்றது. ஊடகவாதிகள் கண்டும், கேட்டும் செய்திகளைக் கூறாமல் களத்தில் சென்று உண்மைத்தன்மையை அறிய வேண்டும். அதற்கு முக்கிய ஊடகமாகத் திகழ்வது ஒன்றுக்கு மேற்பட்ட மொழியே. நிலத்தைப் பொறுத்தும் மொழியைப் பொறுத்தும், சமூகத்தைப் பொறுத்தும் பிரச்சினைகள் அல்லது நிகழ்வுகள் ஏற்படுமானால் அப்பகுதிக்குரிய மொழி தெரிந்தவராகவும், நல்லவொரு மொழிபெயர்ப்பாளராகவும் ஊடகவாதிகள் திகழ்ந்தால் மட்டுமே மக்களிடையே காணப்படும் ஊடகத்தின் மீதான நம்பிக்கையை என்றும் அழியாமல் காக்க முடியும். இருமொழி மற்றும் பன்மொழிப்புலமை என்பது ஊடகவாதிகளுக்குத் தவிர்க்கவியலாத ஒன்று. அதைச் சரியாகக் கையாளத்தெரிந்தால் மட்டுமே மக்களிடமிருந்தும் பொதுச்சமூகத்திடமிருந்தும் பல செய்திகளை உலகிற்கு வெளிக்கொண்டு வரமுடியும்.

## 1.8 மொழிப்பற்று:

கேரளாவாழ் தமிழ் மக்கள் தங்களுடைய அன்றாட தேவைகளுக்கும் பண்டமாற்று முறைகளுக்கும் முக்கிய காரணமாகத் திகழ்பவர்கள்

மலையாளமொழி பேசக்கூடிய மலையாளி மக்கள்தான். இவர்கள் மூன்று மாவட்டங்களைச் சுற்றியும் (இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம்) அதிகமாக வாழ்ந்து வருகின்றனர். கேரளா வாழ் தமிழ் மக்கள் தம் கல்விக்காகவும், அலுவலகப் பணிக்காகவும் முதலில் எதிர்பார்த்திருப்பது இப்பகுதியில் உள்ள அரசு அலுவலகங்களையும், கல்விக்கூடங்களையும்தான். ஆனால் இப்பகுதியில் தமிழர்களுக்கான வசதி வாய்ப்புகள் நாளுக்கு நாளாகச் சுருங்குகிறது என்பதை உணரமுடியும். இந்த நிலையை மாற்ற தமிழ்வாழ் மக்கள் தங்கள் குழந்தைகளை மலையாள மொழியைப் பொதுப்பாடமாகவோ, சிறப்புப் பாடமாகவோ எடுத்துப் படிக்க வைக்கின்றனர். இந்தச் சூழல் நாளடைவில் பெருகி மலையாள மக்களுடன் நல்ல உறவை ஏற்படுத்தித் திருமணம் செய்வதால் அவர்கள் மலையாள மொழியை நேசிக்கத் தொடங்கி அதுவே இயல்பாக மாறுகிறது. இந்த நிலை இப்பகுதியில் ஏராளமாக நடந்து வருகிறது. பிற மொழி பேசுபவர்கள் எண்ணிக்கை இம்மாவட்டங்களில் அதிகமாகக் காணமுடியும். ஆசிரியர்களாக இருக்கக் கூடியவர்களும் இதற்கு விதிவிலக்கல்ல. கல்விக்கூட வளாகத்தில் மட்டுமே தமிழ் மொழியைப் பயன்படுத்தி வருகின்றனர். மற்ற இடங்களில் எல்லாம் மலையாள மொழிப்பற்று நாளுக்கு நாள் கூடிவருவதை இப்பகுதியில் காணமுடியும்.

தமிழ் மக்கள் அதிகமாக இருக்கக்கூடிய இம்மாவட்டங்களில் அரசு பணிக்காக வரக்கூடிய மலையாளிகள் தம்முடைய தேவைகளை நிறைவேற்ற தமிழ் மொழியை கற்கின்றனர். அதைவிட அரசு அலுவலகத்திற்கு வரக்கூடிய மக்கள் இப்பகுதியில் தமிழ் மக்கள் அதிகம் என்பதால் அவர்களுடைய தேவையைத் தமிழ்மொழியில் கூறும்போது புரிந்து கொள்ளவும், அவர்களுக்குப் பதில் அளிக்கவும் தமிழ்மொழியைக் கற்கின்றனர். மலையாள மொழியை நேசிக்கக் கூடிய தமிழர்களின் எண்ணிக்கையை விட தமிழ் மொழியை நேசிக்கக்கூடிய மலையாளிகள் சற்று குறைவுதான் என்பதில் எந்தவித கருத்துமாறுபாடும் இல்லை. தமிழர்களுடைய கலாச்சாரப் பண்பாட்டிற்காகவும், சினிமா போன்ற பொழுது போக்கிற்காகவும் தமிழ் மொழி மீது விருப்பம் கொள்கின்றனர். இன்றும் கேரள நாட்டில் தமிழ் மொழியில் வரக்கூடிய பாடல்களை விரும்பிக் கேட்கக் கூடிய நிலை சற்று அதிகமாகவே காணப்படுகின்றது. கேரளத்தில் கலை நிகழ்ச்சிகள் போன்ற விழாக்கள் நடைபெறும்போது தமிழ் கவிதைகளைச் சரளமாக மேடையில் பாடிப் பரிசு பெறக்கூடிய வழக்கம் இன்றும் தொடர்கிறது. தமிழ்ப்பற்றின் காரணமாகக் கல்லூரிகளில் தமிழை ஒரு பாடமாகக் (Elective class) கற்கக்கூடிய

மலையாளிகளைப் பார்க்கும்போது தமிழ் மீதான பற்று கூடிக்கொண்டு வருவதை நம்மால் உணரமுடியும். இவ்வாறு பலநிலைகளில் தமிழை நேசிக்கக்கூடிய மலையாள மக்கள் இருக்கின்றனர் என்பதை இப்பகுதியில் நமக்குக் காணமுடியும்.

### 1.9 இயற்கையான எல்லையும் வரையறுக்கப்பட்ட எல்லையும்

தமிழகம் மற்றும் கேரளா போன்ற மாநிலங்கள் மேற்குத் தொடர்ச்சி மலையால் ஒன்றுபட்டுள்ளன. அதிலும் குறிப்பாகக் கேரளா மாநிலம் மலையையும், காடுகளையும் அதிகமாகக் கொண்ட பகுதியாகும். இப்பகுதி மக்கள் தங்களுடைய கலாச்சார பண்பாட்டையும், பலவித வாணிப பொருட்களையும் கொண்டும் கொடுத்தும் வளர்ந்து வரக்கூடியவர்கள். ஒரு காலகட்டத்தில் இந்நிலப்பரப்பெல்லாம் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஆட்சி செய்து வந்தனர். அப்போதும் இயற்கையான எல்லைகள் இயல்பாகவே இருந்தன. ஆனால் தங்களுடைய போர் காரணத்தினால் வென்றும், தோற்றும் எல்லையை வடிவமைத்தனர். அதே நிலை இரு மாநிலங்களாக மாறியபோதும் தொடர்ந்து வருகின்றன. கேரளா மாநிலமான இடுக்கிக்கும், தமிழக மாநிலமான தேனிக்குமிடையே போடிநாயக்கனூர் சுறம் (கால்வாய்) எல்லையை இயற்கையாகக் கட்டமைக்கிறது. மேலும் கேரளத்தில் இடுக்கிக்கும் மற்றும் தமிழகத்தில் பழனிக்கும் இடையே சின்னாறு எல்லையாக அமைகிறது. அதேபோல பாலக்காடு மற்றும் கோயம்புத்தூர் எல்லையை வாளையார் சுறம் கட்டமைக்கிறது. ஆங்காங்கே சில இடங்களில் மலைகளும், ஆறுகளும், தங்கள் எல்லையை வரையறுக்கின்றன. திருவனந்தபுரம் மற்றும் கன்னியாகுமரிக்கு எல்லையாகக் களியக்காவிளை மற்றும் பாறசாலை எல்லையாக அமைகின்றது. இவ்வாறு வரையறுக்கப்படும் எல்லைகள் நிரந்தரமான ஒன்று அல்ல. கால சூழ்நிலைகளுக்கு ஏற்ப இப்பகுதியில் உள்ள தெருக்கள் முதல் மாவட்டம் வரை பெயரிலும், நில அடிப்படையிலும் அரசியல் அதிகாரங்களினால் மாற்றம் செய்யப்பட்டு வருகின்றன. இந்த நிலை கேரளச்சட்டமன்றம் கூடும்போது நமக்கு புலனாகின்றன. எல்லையோர பகுதிகளில் மொழி அடிப்படையிலும் எல்லைகளை மறுசீரமைக்கின்றனர். உதாரணமாகக் கூறவேண்டுமானால் முல்லைப்பெரியாறு அணையைத் தமிழகம் மற்றும் கேரள மக்களின் விவசாய நலன் கருதிப் பென்னிகுவிக் அவர்கள் அணையைக் கட்டினார். இன்று முல்லைப் பெரியாறு அணையை வைத்துக் கேரளத்திற்கும், தமிழகத்திற்கும் மிகப்பெரிய மொழி அரசியல் நடக்கிறது. கேரளமும்,

தமிழகமும் இணைந்து பயணிக்கக்கூடிய எத்தனையோ சாலைகள் பயனற்றுக் கிடக்கின்றன. இதுபோன்ற காரணங்கள் இப்பகுதியில் ஏராளமாக உள்ளன. இது கூடாமல் இயற்கை பேரழிவுகளும் எல்லையை முற்றிலுமாக மாற்றிவிடுகின்றன என்பதை நாம் அனைவரும் அறிந்ததே.

### 1.10 கல்விச்சூழல்

இந்திய மாநிலங்களிலேயே அதிக படிப்பறிவு கொண்ட மாநிலம் கேரளமாகும். இன்றைய கேரள மக்களுக்குக் கல்வியின் முன்னோடிகளாகத் திருவனந்தபுரம் மன்னர் குடும்பம், கிருத்துவ மிஷனரிகள், நாயர் சமுதாய நலசங்கம், ஸ்ரீநாரயண தர்ம பரிபாலன யோகம், இஸ்லாமிய கல்வி சங்கம் ஆகியோர் கேரளத்தின் கல்வி முன்னேற்றத்திற்குக் கணிசமாகப் பங்களித்தனர். வேதங்களின் அறிவை வழங்கிய பல சபைகள் அல்லது மடங்கள் உள்ளன. நவீன கல்வி முறை கிருத்துவ மிஷனரிகளால் கொண்டு வரப்பட்டது. இந்த மாற்றம் கேரள - தமிழக எல்லையோரப் பகுதியில் வாழக்கூடிய மக்களுக்கு பெரிய மாற்றத்தைக் கொண்டுவர முடியவில்லை. இதனால் சிறுபான்மையினருடைய எழுச்சிக்காக அந்தந்தச் சிறுப்பான்மையினர் வாழக்கூடிய பகுதிகளுக்குத் தமிழ் சங்கங்கள் போன்ற பாதுகாப்பு அமைப்புகள் உருவாயின. அதன் பொருட்டு இப்பகுதியில் போதுமான மாற்றங்கள் ஏற்பட்டு வருவதை இன்று காணமுடியும். இருந்தாலும் இப்பகுதியில் பெற்றோர்களின் கல்வி மிக பெரிய கேள்விக்குறியாக இருப்பதாலும் வேலைவாய்ப்பு என்பது எட்டாக்கனியாக உள்ளதாலும் கல்வியை இப்பகுதி மக்கள் குறிப்பாக இடுக்கி, பாலக்காடு போன்ற எல்லையோர மக்கள் பொருட்படுத்தாத சூழல் இருந்து வருகின்றன. எல்லையோர மக்களின் கல்விச்சூழலில் இடுக்கி மாவட்டம் முதலாவதாக உள்ளது. அதாவது மற்ற மாவட்டங்களை விட அதிகமான கல்விக் கூடங்கள் தாய் மொழியில் இருக்கின்றன. அதனால் இப்பகுதியில் கல்வி இயல்பாக கற்க முடிகின்றது. இதே போன்று பாலக்காடு மாவட்டத்தை இரண்டாவதாகக் கூற முடியும். இங்கும் ஏராளமான அரசு பள்ளிகள் தாய்மொழியில் இருக்கின்றன. இன்று அதிகமான மாற்றத்திற்குள்ளாகி வருவதைக் காணமுடியும். திருவனந்தபுரம் போன்ற கேரளாவின் தலைநகரத்தில் விரலில் எண்ணக்கூடிய அளவுக்கு மட்டுமே தமிழ் வழி அரசு கல்விக் கூடங்கள் இருக்கின்றன. இந்த நிலையின் காரணமாகத் திருவனந்தபுரம் போன்ற மாநகராட்சிகளில் தமிழ் மக்களும் பிறமொழியை நாடுகின்றனர். கல்வியில் சிறந்து விளங்குபவர் திருவனந்தபுரம் பகுதியில்

வாழக்கூடியவராக இருந்தாலும் தாய்மொழி கல்வியில் சிறந்து விளங்கக் கூடியவர்கள் இடுக்கி மற்றும் பாலக்காடு பகுதியைச் சேர்ந்த எல்லையோர மக்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இன்று கல்வி, முன்பு போலவே சுரண்டல், பொருளாதார ஏகாதிபத்தியம் முதலியவற்றின் கருவியாக மறுபடியும் மாறியுள்ளது. அரசும் சட்டங்களும், பொருளாதாரம், சமூகம், கல்வி முதலியவற்றில் தாழ்ந்துள்ள மக்களுக்கு எவ்வளவோ பாதுகாப்புகள் கொடுத்திருந்தாலும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் நிலையில் அவர்களில் பலரும் இல்லை. பழைய ஆளும் வர்க்கம் அப்பாதுகாப்பைப் பயனற்றதாகச் செய்ய ஒருபுறம் முயற்சி செய்வதோடு வேறு புத்தம் புது முறைகள் மூலம் அரசின் அடிப்படை நோக்கத்தையும் கல்வியின் பயனையும் ஒன்றுமில்லாமல் தகர்த்தெறிய கங்கணம் கட்டிக்கொண்டு முயற்சி செய்து வருகின்றனர்.

இதற்கு ஓர் எடுத்தக்காட்டு கூறலாம். ‘அனைவருக்கும் கல்வி’ என்பது நமது தேசியக் குறிக்கோள். இக்குறிக்கோளை அடைய அரசு கல்வியைத் தன் கண்காணிப்பிலும் அதிகாரத்திலும் வைத்துக் கொள்வது மிகமிகத் தேவையாகும். கல்வித்துறையில் அடைய வேண்டிய குறிக்கோளை வகுப்பதற்கும் அதற்காக நடைமுறைப் பணிகளை மேற்கொள்வதற்கும் அரசு முழு அதிகாரமும் வசதியும் படைத்ததாக இருக்க வேண்டும். இன்று உண்மையில் கல்வித்துறை அரசின் பரிபூரண ஆட்சியில் இல்லை. தந்நலச்சார்புள்ள தனியார் துறையினரே கல்வித்துறையில் இன்று முன்னிற்கின்றனர். இதன் காரணமாக அரசு வகுக்கும் கல்வித் திட்டங்களை முழுமையாக நிறைவேற்ற இயலாதநிலை உள்ளது. இதில் இரண்டு நிலைகள் கவனிக்கத்தக்கவை. ஒன்று அரசின் கல்வித்துறைகளும், பள்ளிகள், கல்லூரிகள் முதலிய நிறுவனங்களும் மிகவும் தரம் குன்றியவைகளாகவும், கல்விபரப்பும் குறிக்கோள் நிறைவேற்ற இயலாத முடத்தெங்குகளாக உள்ளன. இரண்டு அரசின் கல்வி நிலையங்களுக்குப் போட்டியாக விளங்கும் தனியார் கல்வி நிலையங்கள் இதற்கு மறுதலையாகக் காணப்படுகின்றன. கல்வி படிப்பிப்பதிலும், அவற்றை செவ்மையாகச் நடத்துவதிலும் அவற்றை வைத்து ஊதியம் அடைவதிலும் சிறந்து விளங்குகின்றனர். ஆனால் ‘நலிந்த மக்கள் மேம்பாடு’ இத் தனியார் நிறுவனங்களுக்குக் குறிக்கோளல்ல; அவற்றில் பலவும் வணிக முயற்சிகளாய் பணம், அதிகாரம் இனம் குழு முதலியவற்றின் கைப்பாவைகளாய், மேல்தட்டு வர்க்கத்தினரின் தேவைகளை நிறைவேற்றும் கொடும்

குத்தகையமைப்புக்களாய் விளங்குகின்றன. நல்ல நிறுவனங்கள் என்று பெயர் பெற்று விளங்கும் தனியார் கூடங்களில் திறமையிருந்தாலும் ஏழை எளியவன் நுழைய முடியாது. அதே சமயம் திறமையுள்ள ஏழை எளியவன் தன்னை வளர்த்துக்கொள்ள உதவும் அமைப்புகளாய் அரசு நிறுவனங்கள் விளங்கவும் இல்லை.

### 1.10.1 கேரளத்தில் தமிழ்க்கல்வி

உயர்நிலைப் பள்ளி மட்டத்தில் தமிழ்க் கல்வியின் (மொழி/மொழிவழி) தரம் மிகவும் தாழ்ந்துகிடக்கிறது என்பது வெளிப்படையான உண்மை. இதுபற்றி இத்துறையில் ஆராயும்போது பலவிதமான பிரச்சினைகள் / குறைபாடுகள் காணமுடிகின்றன. அதாவது ஆசிரியர் பற்றாக்குறை தீர்த்தல், தோட்டத் தொழிலாளர் பகுதியில் போதிய கல்விக்கூடங்களை நிறுவுதல், நூலகங்களில் நல்ல மேற்கோள் நூல்களை வைத்தல், பாட நூல்களை தாய்மொழியில் கொடுத்தல், தாய்மொழியில் பயின்றவரை நியமித்தல், படித்த தமிழ் மாணவர்களுக்குப் போதிய வேலைவாய்ப்பளித்தல்; கல்லூரிக் கல்வி வசதியைத் தேயிலைத்தோட்டப் பகுதியில் ஏற்படுத்துதல் போன்றவற்றை மேற்கொண்டால் தமிழ்க்கல்வி தரம் உயர்வதுமன்றிப் பயில்வோர் எண்ணிக்கையும் இப்பகுதியில் பெருகிவரும்.

அடுத்தது கேரள அரசு கொண்டுவந்துள்ள பொதுவிதிப்படி மலையாளம் முதல் மொழியாகப் படிக்காதவர் (எ.டு) தமிழ், கன்னடம் படிக்கிறவர்கள் தாய்மொழி, இந்தி, ஆங்கிலம் ஆகியவற்றுடன் மாநில மொழியாகிய மலையாளத்தையும் நான்காவது மொழியாகக் கற்க வேண்டியுள்ளது. இத்தகைய விதி தமிழ்நாட்டில் நடைமுறைப் படுத்தப்படவில்லை. அரசியல் சட்ட அமைப்பு விதிகளுக்கு எதிரானது இது. ஏனெனில் மொழிச்சிறுபான்மையினர் நான்கு மொழி கற்கும் மொழிச் சுமைக்கு உட்படுத்தப்படுகின்றனர். அடுத்தது, சிறுவர்கள் நான்கு மொழிகளைப் படிக்க நேரும்போது மற்ற பாடங்களில் போதிய கவனமும், திறமையும் செலுத்த இயலாது. இது மொழிச் சிறுபான்மையினரைப் பாதிக்கும் என்றும், காலப்போக்கில் மொழிச்சிறுபான்மையினர், தம் மொழிக்கற்பதை விட்டுவிடுவர் என்றும் தமிழாசிரியர் திரு.பகவதியப்பன் கூறுகிறார் (1985; 108) இது உண்மையல்ல என்றும் இன்றும் கூற முடியாது. ஒரு மாநிலத்தில் வாழ்கிறவர்கள் அம்மொழியைப் படித்திருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் தவறல்ல. ஆனால் அது சிறுபான்மையினரைப் பாதிக்காத முறையில் (விருப்ப

பாடம் அல்லது தேர்விற்கு அடிப்படையில்லாத பாடம் என்ற நிலையில்) நடைமுறைப்படுத்தலாம் என்று தோன்றுகிறது.

### 1.11 அரசியல் பின்புலம்

பண்டையத் தமிழகத்தில் புகழ் பெற்று விளங்கிய மூன்று நாடுகளுள் ஒன்றான தமிழகத்தின் மேற்குக் கரையில் அமைந்திருந்த சேரநாட்டை ஆண்ட அரச வழியினரைச் சேர்ந்தவர்களே சேரர்கள் எனப்படுகிறார்கள். சேரர்களின் கொடி விற்கொடி ஆகும். சேரர்கள் வில்லால் அம்பு எய்வதில் சிறந்தவர்களாக இருந்தனர் என்று உயத்துணரலாம். மூவேந்தர்களில் ஒருவரான இவர்கள் கரூரையும் வஞ்சியையும் தலைநகராகக் கொண்டிருந்தனர். சில சேர அரசர்கள் தொண்டியையும் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். அந்நாடு அக்காலத் தமிழகத்தின் மேற்குக் கரைப்பகுதிகளை உள்ளடக்கியிருந்தது. பெரும்பாலும் இன்றைய தமிழகத்தின் கொங்கு நாட்டுப் பகுதியே அக்காலச் சேரநாடு எனலாம். பல சங்கத்தமிழ் நூல்களும் கூடச் சேரநாட்டில் உருவாயின. மேலும் வேணாடு குட்டநாடு, தென்பாண்டி நாடு ஆகிய கொடுந்தமிழ் மண்டலங்களையும் (இன்றைய கேரளா போன்றவற்றை) சேர மன்னர்கள் ஆண்டனர்.

கேரள தேசம் சோழ தேசத்திற்கு மேற்கிலும் அரபிக்கடலும் தென்கடலும் கூடுமிடத்திலுள்ள கன்னியாகுமரி முதல் வடபாகமாக நீண்டு, கர்நாடக தேசத்திற்கு தெற்கிலும் அகன்று பரவி இருக்கிறது. கேரள தேசத்தை வட கேரளம், தென் கேரளம் என இரு பிரிவாகப் பிரித்திருந்தனர். தற்போது மத்திய கேரளம் என்றும் பிரிக்கப்பட்டிருக்கிறது.

சேர நாட்டை ஆண்ட அரச வம்சத்தினர் சேரர்கள் எனபட்டனர். சங்க நூல்கள் பலவற்றில் சேர மன்னர்கள் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. மிகப் பழைய சங்க நூல்களில் ஒன்றாகிய பதிற்றுப்பத்து என்ற நூல் சேர மன்னர்களைப் பற்றிப் பாடிய பாடற்தொகுப்பு ஆகும். கேரள தேசத்தை அரசியல் ரீதியாகத் திருவிதாங்கூர் சமஸ்தானம், கொச்சி சமஸ்தானம், மலபார் சமஸ்தானம் என்று மூன்றாகப் பிரித்து ஆட்சி செய்து வந்தனர். மொழிவாரி மாநிலமாக இந்தியாவைப் பிரித்த போது பல்வேறு நிலப்பகுதிகள் தமிழகத்தோடும் கேரளத்தோடும் இணைத்தும் பிரித்தும் மாநில எல்லைப் பகுதிகளை வடிவமைத்தனர். அதன் பொருட்டாகப் பாலக்காடு போன்ற பகுதிகள் கேரளத்தோடும் கன்னியாகுமாரி போன்ற பகுதிகள் தமிழகத்தோடும் இணைக்கப்பட்டன. மேலும் இதுபோன்று இடுக்கி மாவட்டத்திலும் சிற்சில பகுதிகளில் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

கேரளா, இந்தியாவின் தென்மாநிலங்களுள் ஒன்றாக உள்ளது. இம்மக்கள் கேரளாவைத் தெய்வத்தினுடைய சொந்தம் நாடாக வருணித்து வருகின்றனர். இம்மாநிலத்தில் கிழக்கில் தமிழ் நாடும், வடக்கில் கர்நாடகாவும் எல்லைகளாக அமைந்துள்ளன. மேற்கில் அரபிக்கடல் உள்ளது. மலையாளம் கேரளாவின் முதன்மையான மொழியாகும். இப்பகுதியில் தமிழ் பேசுவோரும் அதிகமாகக் காணப்படுகின்றனர். கேரளத்தின் தலைநகராமாகத் திருவனந்தபுரம் திகழ்கிறது. இந்திய மாநிலங்களில் கல்வியறிவு எழுத்தறிவு விகிதத்தில் கேரளம் முதலிடம் வகிக்கிறது.

கேரளா என்ற சொல் தமிழ்ச் சொல்லான ‘‘சேரளம்’’ (மலைச் சரிவு) அல்லது சேர நாடு என்பதிலிருந்து தோன்றியது என்பது அறிஞர்களின் கூற்று. இன்றைய கேரளா வரலாற்றுக் காலத்தில் ‘‘சேர நாடு’’ என்று அழைக்கப்பட்டு வந்தது. 3-ஆம் நூற்றாண்டு பேரரசர் அசோகரின் கல்வெட்டில் கேரளா நாடு ‘‘கேரளபுத்திரர்’’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் ரோமானிய வணிகனான பெரிபுளீஸின் என்பவர் நிலவரைபடத்தில் இன்றைய கேரளப் பகுதியைச் ‘சேரபுத்ரா’ என்று குறிப்பிடுகிறார். கேரள மக்களை ‘மலையாளிகள்’ என்று அழைப்பதற்கான காரணம் அவர்கள் மேற்குத் தொடர்ச்சி மலைகளில் வாழ்ந்து வருவதாலேயேயாகும்.

அரசியல் என்பது மனித வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாத ஒரு தத்துவம் அல்லது கொள்கை எனலாம். அரசியல் என்பது வாழும் முறை (Way of Life ) அல்லது வாழ்க்கை முறை (Way of living) ஆகும். அரசியல் என்பது சமுதாய வாழ்க்கைக்கு அமைதியைத் தருவதாகிறது. சமூதாயத்தில் பலர் கூடி வாழ்வதற்கும் பொருளியல் ஒழுங்கியல் முறைகளுக்கும் அரசியலே வழிவகுக்கிறது. அறநெறிகளில் மனிதகுலம் ஒன்றி நின்று வாழ்வதை உறுதிப்படுத்தத்தான் அரசியல் தோன்றுகிறது மற்றும் தொண்டு செய்கிறது. அரசியல் தத்துவங்கள் மனித உலக வரலாற்றின் நிகழ்வுகளிலிருந்து தோற்றம் பெறுகின்றன. சிறந்த அரசியல் நிலவும் நாட்டில் ஒழுங்குகள் நிலவும், வாழ்க்கையை வாழ்வதற்குத் தேவையான அனைத்தும் எளிதில் கிடைக்கும், அறிவுத்துறை மேம்படும், பகை ஒடுங்கிப் பண்பாடு சிறந்து விளங்கும். கேரளா அரசியல் என்பது உலகத்திற்கே முன்மாதிரியான அரசியல் எனலாம். காரணம் உலகத்தில் முதன்முறையாக வாக்குச்சீட்டு அடிப்படையிலான தேர்தலில் 1957 –ல் EMS. நம்பூதிரிப்பாடு அரசு அதாவது

கம்யூனிஸ்ட் கட்சியின் அரசு கேரளாவில் அமைந்தது. 1964-ல் பொதுவுடைமைக் கட்சியில் இருந்து விலகி இந்திய பொதுவுடைமைக்கட்சி மார்க்கிஸ்ட் என்ற பெயரில் கேரளாவில் வளர்ந்து வருகிறது. அதேபோல மற்றொரு முக்கியமான கட்சி (INC) -அதாவது இந்திய தேசிய காங்கிரஸ் ஆகும். இந்த இரண்டு கட்சிகளும்தான் கேரளாவை இதுவரை ஆட்சி செய்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொரு ஐந்து வருடமும் இந்த இரண்டு கட்சிகளின் கீழ் அமையக்கூடியக் கூட்டணிக்கட்சிகளே மக்களை ஆட்சிசெய்து வருகின்றன. மூன்றாவதாகக் கூறக்கூடிய முக்கியமான கட்சி பாரதிய ஜனதாகட்சி, இந்தக்கட்சி கேரளாவில் ஆட்சி செய்யாவிட்டாலும் நாளுக்கு நாளாக வளர்ந்து வரக்கூடிய மிகப்பெரிய மூன்றாம் சக்தியாகத் திகழ்கிறது. இந்த மூன்று கட்சிகளுமே தேசிய கட்சிகளாக அங்கீகாரம் பெற்றுக் கேரளத்தில் சிறந்து விளங்குகின்றன.

காலங்காலமாகக் கேரளாவில் இடதுசாரி (கம்யூனிஸ்ட்) கட்சியும் வலதுசாரி (காங்கிரஸ்) கட்சியுமே ஆட்சி செய்து வந்தாலும் எல்லையோர தமிழ் மக்களுக்கு மொழி அளவில் பெரிய மாற்றம் ஒன்றும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. இப்பகுதி மக்கள் கல்வியில் பின்தங்கிய சூழலில் இருப்பதால் அரசு அலுவலகங்களில் வாங்கக்கூடிய பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள பல்வேறு சான்றிதழ்கள் தேவைப் பட்டாலும் கூட அவற்றை வாங்க மொழி மிகப்பெரிய பிரச்சினையாக இருக்கிறது. அரசு அலுவலகங்களில் இருந்து வரக்கூடிய விண்ணப்பங்களும் மலையாள மொழியையே மையமிட்டதாக அமைகிறது. அரசுத் தேர்விற்காகக் கேட்கப்படும் வினாக்கள் கூட இன்றளவும் சிறந்த மொழிபெயர்ப்பாக இல்லாமல் பெரும் விளைவுகளை இப்பகுதி மக்களுக்கு ஏற்படுத்துகிறது. தமிழ் மட்டுமே பேசக்கூடிய நபர்கள் ஏராளமாக இப்பகுதியில் இருந்தும் அவர்களுக்காக அரசு விண்ணப்ப படிவங்களைக் கூட தமிழில் வடிவமைக்க அனுமதி வழங்காத அரசுகளாகவே இதுவரை இருந்திருக்கின்றன என்பதைப் பார்க்கும் போது இப்பகுதி மக்களுக்கும் மொழிக்கும் இழைக்கக் கூடிய பெரும் விளைவுகளாகவும் சவால்களாகவும் இருக்கிறது என்றே நினைக்கத் தோன்றுகிறது.

### 1.11.1 அமைப்புகள் (அல்லது) சங்கங்கள்:

எல்லையோர பகுதியில் வாழக்கூடிய சிறுபான்மையினருக்கு மொழியில் ஏற்படும் பிரச்சினையையும் வேலைவாய்ப்பையும் மற்றும் அரசு

கல்விக்கூடங்களைப் பெருக்கிடவும் இப்பகுதியில் பலவிதமான அமைப்புகள் (அல்லது) சங்கங்கள் உதவி செய்து வருகின்றன. அதாவது கேரளா அரசு சார்பிலும் தனிநபர் மற்றும் குழுக்களாக இருந்து பல்வேறு சங்கங்கள் செயல்பட்டு வருகின்றன. அவை,

- கேரளா மாநில தமிழ் பாதுகாப்பு இயக்கம்
- திருவனந்தபுரம் தமிழ்சங்கம்
- பாலக்காடு தமிழ்சங்கம்
- மூணார் தமிழ்சங்கம்

### 1.12 மொழிச் சிறுபான்மை மக்களின் பிரச்சினைகள்

மொழிச் சிறுபான்மை மக்கள் அதிகமாக வாழக்கூடிய மாவட்டம் இடுக்கியும் பாலாக்காடும் ஆகும். சிறுபான்மையினர் என்போர் ஒரு நாட்டிலோ மாநிலத்திலோ அதற்குட்பட்ட பகுதிகளிலோ இன மொழி பண்பாட்டு அடிப்படையில் குறைந்த எண்ணிக்கையிலோ அல்லது விகிதாச்சார அடிப்படையிலோ, குறைந்த அளவிலோ வாழ்பவர்கள் உலகின் பெரும்பாலான நாடுகளில் சிறுபான்மையினராக வாழ்கின்றனர். மிகக்குறைந்த நாடுகளே தங்கள் நாட்டில் ஒரே இனத்தைப் பண்பாட்டை மொழியைப் பாவிக்கிற மக்களைக் கொண்டுள்ளன. சிறுபான்மையினர் பூர்வகுடிகளாகவோ குடிபெயர்ந்தவராகவோ இருக்கலாம். எண்ணிக்கையில் சிறுபான்மையினராய் இருந்தாலும் அவர்களும் தங்கள் வாழும் பகுதியின் குடிமக்களே என்பதால், பல நாடுகள், இவர்களுக்கும் சம உரிமையை வழங்கியுள்ளன.

இந்தியாவிலும் மொழிச் சிறுபான்மையினர் ஆங்காங்கே பல மாநிலங்களில் வாழ்கின்றனர். ஜனநாயக நாடு என்பதால் எந்தவொரு மனிதனும் சுதந்திரமாக வாழலாம். சிறுபான்மையின மக்கள் எல்லா இடங்களிலும் சுதந்திரமாக வாழ்ந்தாலும் சில இடங்களில் ஓட்டுக்காக மட்டும் அவர்களை பயன்படுத்துகின்றனர். திராவிட மொழி பேசக்கூடிய மக்களை நில அடிப்படையிலும், மொழி அடிப்படையிலும் பிரிக்கப்பட்டபோது சிறுபான்மையினராக உருவாகின்றனர். அப்படி உருவாகினவர்கள்தான் கேரளாவில் உள்ள எல்லையோர தமிழ் மக்கள். இவர்களில் சிலர் பூர்வீகமாகக் குடி கொண்டவர்களாகவும், வயிற்றுப் பிழைப்பிற்காகத் தஞ்சம் புகுந்தவர்களாகவும் இருக்கின்றனர்.

### 1.12.1 பிரச்சினைகள்:

1. அடிப்படை உரிமைகளில் ஒன்றான கல்வி இப்பகுதி மக்களுக்குக் கிடைத்தாலும், போதிய வசதி வாய்ப்புகள் இல்லாமல் எத்தனையோ கல்விக் கூடங்கள் கேட்பாரற்று இயங்கி வருகின்றன.
2. ஆயிரம் மக்களுக்கு ஒரு மருத்துமனை என்பது உலக சுகாதார விதிமுறை. இருப்பினும், இதெல்லாம் இப்பகுதி மக்களுக்கு வெறும் வாய்ச்சொல்லாகவே இருந்து வருகிறது. இப்பகுதியில் எத்தனையோ விபத்துகள் நாள்தோறும் நடந்து வருகின்றன. இப்பகுதியில் போதுமான மருத்துவமனைகள் சுற்றுவட்டாரத்தில் இல்லாததால் எத்தனையோ உயிர்பலிகள் தொடர்ந்து நடந்து வருகின்றன.
3. அனைவருக்கும் பயன்படக்கூடிய சாலைகள் தரமற்றதாகக் காணப்படுவதால் பல்வேறு விபத்துகளைச் சந்திக்க நேருகிறது. வாகனங்கள் பெருகி வரும் சூழலில் இப்பகுதியில் சாலைகள் வேகமாகக் கேடுவந்தாலும் சரிசெய்ய பல மாதங்களோ, வருடங்களோ ஆகின்றன.
4. கேரளத்தில் வாழும் தமிழ் விவசாயிகளுக்கு நீர்பாசனம் வழங்குவது முதல் விவசாயத் தொழில்நுட்பம் வழங்குவது வரை தொடர்ந்து வஞ்சிக்கப்படுவதாக இப்பகுதி மக்களிடையே மேற்கொண்ட களாய்வின் மூலம் தெரிய வருகிறது.

தமிழ் பாதுகாப்பு இயக்கத்தின் இயக்குநர் மா.பேச்சிமுத்து அவர்களிடம் நேரில் சென்று தமிழர்களுடைய பிரச்சினையாக கேரளத்தில் ஏதாவது கூற முடியுமா? என்று கேட்டபோது அவர் கூறிய கருத்துக்கள் பின்வருமாறு பதிவு செய்யப்பட்டுள்ளன.

“மொழிவாரி மாநிலம் பிரிக்கப்பட்டபோது பெரும்பாலான தமிழர்கள் வாழும் பல பகுதிகளும் கேரளத்துடன் இணைக்கப்பட்டன. இதனால் மொழிச்சிறுபான்மை உரிமை உள்ளிட்ட பல்வேறு அடிப்படை உரிமைகள், சலுகைகள் தமிழர்களுக்கு மறுக்கப்பட்டு வருகின்றன என்றும் தற்போது மலையாள மொழியைக் கட்டாயமாக்கும் திட்டமும் கேரள அரசால் கொண்டுவரப்பட உள்ளதாகத் தெரிகிறது. இப்படி செய்வதின் மூலம் தமிழ் மாணவர்கள் அதிகமாகப் பாதிக்கப்படுவார்கள் என்று எடுத்துக்கூறினார்”.

மேலும் கேரளத்தில் இயங்கி வரும் பேரிடர் மேலாண்மை குறித்த இதிகாசம் அறக்கட்டளையின் நிறுவனர் சரவணகுமார் கூறுகையில், “தமிழ் மட்டுமே தெரிந்த தமிழர்கள் கேரளத்தில் அதிகமாக வாழுகின்றனர். இவர்கள்

கேரளா அரசு அலுவலகங்களில் தங்கள் தேவைகளுக்காகச் செல்லும்போது அவர்கள் படும் அவலம் சொல்லிமாளாது மற்றும் வாழ்வாதாரத்திற்காக அடிப்படைத் தேவைகளைக்கூடக் கேட்டுப் பெறமுடியாத நிலை உள்ளது. பிற நாடுகளில் வாழும் தமிழர்களுக்கு உள்ள பிரச்சினை போன்று கேரளத்தில் வாழும் தமிழர்களின் பிரச்சினை தீர்க்க முடியாத ஒன்றல்ல. கேரளா வாழ் தமிழர்கள் என்பவர்கள் தமிழகத்தில் இருந்து கேரளத்தில் குடியேறியவர்களும் அல்லர். கேரளம் பிரிக்கப்பட்டபோது கேரள எல்லைக்குள் சிக்கிக் கொண்டவர்கள் என்றும் அவர்களுடைய இறையாண்மையைக் காக்க வேண்டும் என்றும் கூறினார்.''

மொழிச் சிறுபான்மை மாணவர்கள் பன்னிரண்டாம் வகுப்புத் தேர்வைத் தமிழில் எழுத அனுமதி வழங்க வேண்டும். (மலையாள மாணவர்களுக்கு மலையாளத்தில் தேர்வு எழுத தமிழக அரசு அனுமதி வழங்குகிறது.) பத்தாம் வகுப்பு (SSLC) வரை தமிழ் வழியில் படித்த மாணவர்கள் பன்னிரண்டாம் வகுப்புத் தேர்வைத் தமிழில் எழுத அனுமதிக்கப்படுவதில்லை. இதனால் சராசரி மொழிச் சிறுபான்மை தமிழ் மாணவர்கள் பன்னிரண்டாம் வகுப்புத் தமிழ் மாணவர்கள் குறைந்த மதிப்பெண் பெற்றுக் கல்லூரிக்கல்வி மறுக்கப்படும் நிலைக்கு ஆளாகிறார்கள். தமிழகத்தில் மொழிச்சிறுபான்மை மாணவர்களுக்கு மலையாள வழியில் வகுப்புகள் நடத்தப்பட்டுத் தேர்வுகளும் மலையாளத்தில் எழுத அனுமதி அளிக்கப்படுகிறது. இதுபோல கேரளாவில் கல்வி கற்கும் பன்னிரண்டாம் வகுப்புத் தமிழ் மாணவர்களுக்கும் தமிழில் தேர்வெழுத கேரள அரசு அனுமதிக்க வேண்டும். (2009,106)

### 1.13 மொழி சிதைவிற்கு அடிப்படைக் காரணங்கள்:

மொழிச் சிதைவென்பது மொழியின்த் தூய்மையினைச் சிதைக்கும் செயலாகும். ஒரு மொழியின் தொன்மையை பாழ்படுத்தும் இழிச்செயலே மொழிச்சிதைவாகும். மொழிக்கென உள்ள முகவரியை அதாவது அதன் தனிச்சிறப்பை அழிக்கும் செயலே மொழிச்சிதைவாகும். ஒரு மொழியை அதன் விதிகளுக்கு முரண்பட்டுப் பிழைப்பட கையாளுவதும் மொழிச்சிதைவே.

தொழில்நுட்ப வளர்ச்சியினால் மொழியின் பயன்பாடு குறைந்துகொண்டு வருகின்றன. ஒவ்வொரு நாளும் புதிய புதிய கலைச்சொற்கள் உதயமாகினாலும் அவற்றை பயன்படுத்தும்போது அதாவது பேச்சுமொழியில் அறியாமையினால் சிற்சில மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. அதற்கு

முக்கிய காரணமாக உச்சரிப்பு, கேள்வியறிவு, படிப்பறிவு போன்றவை சரியாக அமைய வேண்டும். இவை சரியாக அமையாவிட்டால் மொழிப்பெயர்க்கும் போதும் பத்திரிக்கை மற்றும் அரசு அலுவலகங்கள் போன்ற அனைத்து வகையான பயன்பாட்டிலும் சிற்சில மொழிச்சிதைவு ஏற்பட்டுப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்திவிடும்.

மேலும் விளம்பரங்கள், விளம்பர நகலில் தரக்குரவு, விளம்பரத்தில் பிறமொழிகள், தகவல் தொடர்புச் சாதனங்கள், பொதுக் குறியீட்டு நிலைபேறாக்கும் (ஆல்பா, பீட்டா, காமா) மொழிபெயர்ப்பு, அன்றாடம் பேசும் மொழி போன்ற காரணங்களால் மொழிச்சிதைவு ஏற்பட வாய்ப்பாக உள்ளது.

மொழிச்சிதைவு இயல்பாக ஏற்பட்டாலும் அவற்றை மாற்றக்கூடிய மனப்பக்குவம் சில மொழி அறிஞர்களுக்கும், அரசு கல்வியாளர்களுக்கும் அது ஒரு பொருட்டே இல்லை. காரணம் 2019-ம் ஆண்டு தேவகுளம் வட்டத்தில் அமைந்துள்ள வட்டவடை பஞ்சாயத்தில் (ஊராட்சி) நூலகம் ஒன்றைத் தற்போதைய கேரள முதல்வர் தோழர் பினராயி விஜயன் அவர்கள் திறந்து வைத்தார். அந்த நூலகத்தின் பெயர் அபிமன்யூ நூலகம். இதைச் சரியாக எழுதாமல் அபிமன்பூ நூலகம் என்று எழுதி வைத்திருக்கின்றனர். இந்தத் தவறை இன்றளவும் மாற்றவும் இல்லை மாற்ற முயற்சித்ததும் இல்லை. இதுபோல் ஏராளமாகக் கூறமுடியும். எர்ணாகுளத்தில் அமைந்துள்ள கொச்சியில் பட்டாசு கடை என்பதற்குப் பதிலாகக் ‘பட்டாசு கனட’ என்று மொழியறிவின் குறைவால் தகவல் பலகையில் எழுதி வைத்திருக்கிறார்கள். இந்தப் பழக்கம் தொடர்ச்சியாக மாறுவதற்குக் காரணமாக அமைகின்றது.

### 1.14 மொழிகலப்புக்கான காரணம்:

ஒரு மொழியில் உள்ள சொற்கள் பிறிதொரு மொழியில் கலத்தல் என்பது மொழித்தொடர்பாகும். இம்மொழித்தொடர்பு மொழி வரலாற்றில் தவிர்க்க முடியாததாகும். எந்தவொரு நாடும் தனித்து வாழமுடியாது. மற்ற நாடுகளுடன் தொடர்பு கொள்ளும் போது மொழித் தொடர்பு ஏற்படுகின்றது. ஆகையால் கடன் வாங்கப்பட்ட சொற்கள் இல்லாத மொழியே பெரும்பாலும் இல்லை எனலாம். காலத்துக்குக் காலம் தமிழ் மொழியும் பிற மொழிகளுடன் தொடர்பு ஏற்பட்டு வந்துள்ளது. பிற மொழிகளிலிருந்து கடன் வாங்குதல், ஒப்புமையாக்கம், நம்மிடம் இல்லாத புதிய பொருட்களைப் பயன்படுத்துதல் அரசியல், வணிகம், சமய கலாச்சாரத் தொடர்பு போன்ற பல காரணங்களால் தமிழில் பல சொற்கள் கலந்துள்ளன. இவற்றினால் பல விளைவுகளும்

ஏற்பட்டுள்ளன. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழுக்கும் சமஸ்கிருதத்திற்கும், பிற வடமொழிகளுடனும் தொடர்பு இருந்து வந்துள்ளது. சங்க இலக்கியங்களில் ஆதி (குறுந்தொகை 293:4) சங்கம் மருவிய காலத்தில் வடமொழிச் செல்வாக்கு கூடுதலாகக் காணப்பட்டது. தமிழ்நாட்டிற்கு அருகில் உள்ள தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிச்சொற்கள் தமிழில் கலந்தன. அட்டிகை, சொத்து போன்ற கன்னட மொழிச்சொற்களும், கச்சவடம், கொச்சி போன்ற மலையாளச் சொற்களும், டாப்பு, ரவிக்கை, ராணுவம், லஞ்சம் போன்ற தெலுங்கு மொழிச்சொற்களும் இவ்வாறு கலந்துள்ளன.

கேரளா, தமிழ்நாடு எல்லையோர மாவட்டங்களிலும் மொழிகலப்பு என்பது தவிர்க்கமுடியாத ஒன்றாகும். அதாவது மாறிவரும் கல்வி, அறிவியல், தொழில்நுட்பம் போன்ற காரணங்களாலும் 19-ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் வருகையைத் தொடர்ந்து நவீன கல்விமுறை வேகமாகப்பரவியது. புதுப்புது முறைகளில் கல்விதுறைகளும் வேகமாக வளர்ந்து வருகின்றன. கணினி, விண்வெளிப்பயணம், தொலைக்காட்சி, பத்திரிக்கை, வானொலி, இணையம் போன்றவற்றினாலும் புதிய கண்டுபிடிப்புப் பொருட்களினாலும் ஆங்கிலம் மற்றும் பிறமொழிச்சொற்கள் அதிகமாகக் கலந்து கொண்டிருக்கின்றன. மட்டுமல்லாமல் கேரளா, தமிழ்நாடு எல்லையோர பகுதிகளில் பலவிதமான சிறப்பு வாய்ந்த சுற்றுலா தலங்கள் உலக அளவில் அறியபடுகின்றன. இதன் பொருட்டுப் பல்வேறு மாநிலங்களில் இருந்தும் பல்வேறு நாடுகளிலிருந்தும் இப்பகுதிகளுக்கு ஏராளமானோர் வந்து செல்கின்றனர். இதுபோன்ற காரணங்களால் இப்பகுதியில் மொழி கலப்பு என்பது தவிர்க்க முடியாத ஒன்றாக உள்ளன.

**தொகுப்புரை :**

திராவிட மொழிகளின் திருந்திய திராவிட மொழியாக இருக்கக்கூடிய தமிழ் மலையாள மொழிகள் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையது என்பது இவ்வாய்வின் வழி தொகுத்தளிக்கப்பட்டுள்ளது.

மொழியானது மிக முக்கியமான ஒன்று. உணவு உடை, மொழி இவற்றில் மொழிதான் மனிதனின் நாகரீக வளர்ச்சிக்கு முதன்மையானது என்றும், பழங்காலத்தில் சைகையே பேச்சுமொழியாகப் பயன்பட்டு வந்தன என்றும், அவை நாளடைவில் எல்லா சூழலிலும் பயன்படுத்த முடியவில்லை

என்பதையும் உணர்ந்து எழுத்துமொழி உருவானது என்றும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

மொழியும் சமூகமும் ஒன்றோடொன்று நெருங்கியதும் பிரிக்க முடியாத சக்தியாகவும் இருக்கிறது. பேச்சுமொழி, எழுத்துமொழி உருவான விதம், அவற்றின் உறவு, பேச்சுமொழியின் பழமை, பேச்சுமொழியின் சிறப்பு போன்றவற்றை விளக்கி, அவை இலக்கியத்தோடு கொண்டுள்ள உறவு, எழுத்துமொழியின் சிறப்பு, போன்றவற்றை இவ்வியல் விரிவாக விளக்குகிறது.

தொடர்ந்து தமிழும், திராவிடமும் பெற்றுள்ள சிறப்பு, மலையாள மொழியின் தோற்றம், மலையாளத்தின் தனித்தன்மைகள், தமிழ் மலையாள உறவு, போன்றவைகள் விளக்கப்பட்டுள்ளன.

மேலும் இவ்வியலில் கேரளம் பற்றியும் கேரளம் உருவான வரலாற்றுப் புனைகதைப் பற்றியும், கேரளவாழ் தமிழ் மக்களைப் பற்றியும் விளக்கி எல்லையோர மாவட்டங்களின் புவியியல் அமைப்பு அதாவது இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் என மாவட்ட வாரியாகப் பிரித்து அம்மாவட்டத்தில் உற்பத்திச் செய்யக்கூடிய பயிர்த்தொழில்களையும் அட்டவணைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது.

எல்லையோரங்களில் வாழக்கூடிய தமிழ்மக்கள் தமிழ்நாட்டோடு கொண்டுள்ள தொடர்பும், அவர்கள் வைத்துள்ள இரட்டைக் குடியுரிமையும், இவர்களின் இடம்பெயர்வு எவ்வாறு அமைந்தன போன்றவற்றையும் இவ்வியல் கூறப்பட்டுள்ளன.

இருமொழிச் சூழல் என்ற அடிப்படையில் அவை உருவாகக் காரணமான விவசாயம், வாணிபம் வேலைவாய்ப்பு, கல்வி, திருமணம், ஊடகம் போன்றவை தமிழ் மலையாள மொழிகளில் மொழிக்கலப்பு ஏற்படக் காரணமாக இருந்திருக்கின்றன என்றும் இப்பகுதியில் வாழக்கூடிய தமிழ் மலையாள மக்களின் மொழிப்பற்று நாளுக்கு நாள் மேலோங்கி வருவதையும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

இந்திய மாநிலங்களிலேயே கல்வியில் சிறந்த மாநிலமாகக் கேரளா இருந்ததாலும் தனியார் கல்வி நிறுவனங்களின் போக்கு பொருளாதார மேம்பாட்டிற்காக மாறிக் கொண்டிருக்கிறது என்பதையும் இந்தச் சூழலால் எல்லையோர மாவட்ட மக்கள் கல்வியில் பின்தங்கி இருக்கக்கூடிய நிலையையும் காணமுடிகிறது. கேரளத்தில் தமிழ்க்கல்வி உயர்நிலைப்பள்ளி மட்டத்தில் தமிழ்க்கல்வியின் (மொழி/மொழிவழி) தரம் மிகவும் தாழ்ந்து கிடக்கிறது என்பதையும் மேலும் இத்துறையில் பலவிதமான பிரச்சினைகள்

/குறைபாடுகள் காணப்படுகின்றன. என்பதையும் இவ்வியலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

காலங்காலமாகச் சேர நாடாக இருந்த கேரளத்தை ஆட்சி செய்தவர்கள் எல்லையோர மக்களான தமிழ் மக்களுக்கு மொழி அடிப்படையில் வசதி, வாய்ப்புகள் ஒன்றும் செய்யவில்லை என்பதையும் இவ்வியல் வழியாக விளக்கப்பட்டுள்ளன.

இறுதியாக மொழிச்சிறுபான்மை மக்கள் அதிகமாக வாழும் இப்பகுதிகளில் அவர்கள் அன்றாடம் நேரிடும் பிரச்சினைகளையும், உரிமைகளையும் இவ்வியல் விளக்கிக் காட்டுகிறது.

# இயல் - 2

# தமிழ் மலையாள பேச்சுவழக்கில் பொதுச் சொற்களும் சொற்பொருளாய்வும்

தமிழ் மொழியில் பேச்சு வழக்குச்சொற்கள் இடம் சார்ந்து அல்லது சமூகம் சார்ந்து அல்லது தொழில் சார்ந்து ஏராளமாகக் காணப்படுகின்றன. இப்பேச்சு வழக்குச்சொற்கள் சமூகம் தொழில், பண்பாடு, சாதி, மதம், அந்நிய மொழி சார்ந்தும் வேறுபடுகின்றன. தொலைக்காட்சி, இணையம் தொடர்பான முன்னேற்றத்தால் ஆங்கிலம் கலந்து சொற்கள் பெருமளவில் கலந்து புதிய வழக்குச் சொற்களாக நிலவி வருகின்றன. மேனாட்டுக்கல்வி மற்றும் அறிவியல் வளர்ச்சி தொடர்பில் புதிய சொல்லாக்கம், கலைச்சொல்லாக்கம் முதலிய அம்சங்களில் ஒருங்கிணைவு அற்ற முயற்சிகள் வேறுபட்ட மொழி வழக்குகளை உருவாக்கியுள்ளன.

தமிழில் பேச்சு வழக்குச் சொற்கள் பெரும்பாலும் சொற்களை ஒலிப்பதிலேயே மாறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக, "இங்கே" என்ற சொல் மூணார் பகுதிகளில் 'இங்கிட்டு' 'இங்க' என்றும் திருநெல்வேலி பகுதிகளில் "இங்கனெ" என்றும் இராமநாதபுரம் பகுதிகளில் ''இங்குட்டு'' என்றும் யாழ்ப்பாணப் பகுதிகளில் "இங்கை" என்றும் கன்னியாகுமரி மற்றும் மட்டக்களப்பின் சில பகுதிகளில் "இஞ்ஞ" என்றும் வழங்கப்படுகின்றது. இது போன்று பேச்சுமொழியில் சொற்களின் வடிவம் ஒவ்வொரு இடங்களுக்கு ஏற்பவும் சமூகப் பொருளாதார சூழல்களுக்கு ஏற்பவும் மாற்றம் பெற்று ஒலிக்கின்றன.

**2.1 மொழிக்கூறுகள்:-**

மொழியின் அடிப்படைக்கூறுகளில் சொல் ஒன்றாகும். இது தனித்து நிற்கும் பொருளுடைய மொழிக்கூறு என்று புளும்பீல்டு கூறுகிறார். சொற்களைத் தனித்து இயங்கும் ஆற்றல் உடையன, தனித்து இயங்கா ஆற்றல் உடையன என்றெல்லாம் வகைபடுத்தலாம். இலக்கண அடிப்படையில் பெயர், வினை தனித்து இயங்குபவை பெயரடை, பெயரெச்சம், வினையடை, வினையெச்சம் காலங்காட்டும், இடைநிலைகள் பால், எண், இடம் காட்டும் உருபுகள் போன்றவை தனித்து இயங்காத சொற்களாகும். பெயர், வினை என்ற சொல் வகைகள் எந்தவொரு மொழயிலும் முதன்மையிடத்தைப் பெற்றே விளங்கும். இவற்றைச் சார்ந்தே பிற சொற்கள் மொழியில் வந்தமைகின்றன. எனவே பெயர், வினை, என்ற

இரண்டும் அடிப்படைச் சொற்களாக அமைந்து பல்வேறு சொல்லமைப்புகள் உருவாகத் துணை நிற்கின்றன.

பேச்சுச் சூழல், சமுதாயச்சூழல் போன்றவற்றிற்கேற்ப சொற்தேர்வு அமையக் காண்கிறோம். இச்சூழல்களில் இடம் பெறுவோர் அவர்களுக்கிடையே காணப்படும் தொடர்பு உறவுமுறை பேச்சிலும், எழுத்திலும் அமையும்.

ஒரு குறிப்பிட்ட மொழிப் பயன்பாட்டில் யார் மொழியைப் பயன்படுத்துகிறார், யாருடன் பயன்படுத்துகிறார் எப்பொழுது பயன்படுத்துகிறார் என்பனவற்றை விளக்கும் போதுதான் அக்குறிப்பிட்ட மொழிப் பயன்பாட்டின் பண்பு வெளிப்படும்.

### 2.1.1 பேச்சுமொழி:-

தமிழ் மொழி இருநிலை மொழியாகும். உரையாடல் போன்ற முறைசாரக் கருத்து பரிமாற்றச் சூழல்களில் நாம் இயல்பாகப் பேசும் தமிழைப் பேச்சுமொழித் தமிழ் எனலாம். இப்படி பேச்சுத் தமிழ்நடைகளையும் இன்ன சூழலுக்கு இன்ன தமிழ்நடை வகையைப் பயன்படுத்துவது என்ற சூழற்கட்டுப்பாடு விதிகளுக்கு ஏற்ப நாம் தமிழ் மொழியை அன்றாடம் பயன்படுத்துகிறோம்.

பேச்சு நடைத் தமிழுக்கும் எழுத்து நடைத் தமிழுக்கும் இடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. மொழிப் பயன்பாட்டுச் சூழல் கட்டுப்பாடுகள் இரண்டு நடைகளுக்கு இடையே இருப்பதால் தமிழ் மொழியை மற்ற உலக மொழிகளான அரேபிய, கிரேக்க, சிங்களம் போல இருநிலை வழக்குக் கொண்ட மொழியாகவே கருதுகின்றனர்.

தமிழர்கள் தமிழ் மொழியின் ஒரு வழக்கான "பேச்சுத் தமிழைக்" குழந்தைப்பருவத்திலிருந்து தாய் மொழி கற்றல் பாங்கில் இயல்பாகக் கற்றுக் கொள்கிறார்கள். பிறகு எழுத்தறிவு மற்றும் கல்வி பெறுவதற்கான வாய்ப்புப் பெற்ற தமிழர்கள் பொதுவாக முறைசார்ந்த பள்ளி கல்வி மூலமாக "எழுத்து தமிழைக்" கற்றுக்கொள்கிறார்கள். இந்த வாய்ப்புக் கிடைக்காத தமிழர்கள் எழுத்தறிவு பெறாதவர்களாகத் தமிழின் ஒரு வழக்கான அடிப்படை வகையான பேச்சுத் தமிழை மட்டும் கற்பதோடு நின்று விடுகிறார்கள். ஒவ்வொரு மனிதரும் தமிழின் பேச்சு வழக்கினைத் தாய்மொழியாகக் குழந்தை பருவ நிலையில் பெறுகிறார். எழுத்தறிவு பெற வாய்ப்புள்ளவர்கள் தமிழின் அடுத்த வழக்கான எழுத்துத் தமிழைக் கற்று நிலை நிறுத்துகிறார்கள். அடித்தளம், மேல்தளம் என இரண்டு தளங்களிலும்

உள்ள மொழியமைப்புகளைக் கற்றுவிடும் நாம் பயன்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப இருநிலை வழக்குகளைப் பயன்படுத்தக் கற்றுக் கொள்கிறோம்.

தொல்காப்பியர் இதனையே இயல்புவழக்கு, செய்யுள்வழக்கு என்கிறார். தமிழ்மொழி என்பது பேச்சு வழக்கு, எழுத்துவழக்கு இரண்டினையும் கொண்டதாகும். ஒரு மொழியைக் குறைந்தது இரண்டு பேர் பேசினால் கூட அவர்களின் பேச்சில் வேறுபாடுகளை உணர்கிறோம். இடுக்கி மாவட்ட தமிழரும், திருவனந்தபுரம் மாவட்ட தமிழரும், பாலக்காடு மாவட்ட தமிழரும் தமிழ் என்ற ஒரே மொழியைப் பேசினாலும் அவர்களின் பேச்சில் உள்ள வேறுபாடுகளை நாம் கேட்ட உடனே உணர்ந்து விடுகிறோம்.

எ.கா :

அவர்கள் என்ற சொல் பொதுவாக இருந்தாலும் சில வட்டாரங்களில் வேறு விதமாகப் பயன்படுத்துகின்றனர்.

| | | | |
|---|---|---|---|
| அதாவது | அவக, அவுக | - | என்று மூணார் வட்டாரத்திலும் |
| | அவா, அவாள் | - | பிராமணர்கள் |
| | அவுங்க, அவங்க | - | பாலக்காடு |
| | அவிய | - | கோவை நெல்லை, மாவட்டம் |

பொதுவாக இப்படிப்பட்ட பேச்சு வழக்கு வேறுபாடுகளை நாம் மொழி வேறுபாடுகள் அல்லது வட்டார மொழிகள் என்கிறோம். இவை எல்லாம் ஒரே பொருளை உணர்த்தினாலும் இடத்திற்குத் தகுந்தவாறு ஒலிப்பு முறையில் மாறுபடுகிறது.

**2.1.2 வட்டார வழக்குகள்:**

இன்று கேரளாவின் பல பகுதிகளில் பேசப்படும் தமிழுக்குள்ளும் சிறு சிறு வேறுபாடுகள் இருந்து வருகின்றன. சென்ற நூற்றாண்டில் போக்குவரத்துக் குறைவாக இருந்த காலத்தில் இந்த வட்டாரமொழி வேறுபாடுகள் மிகுதியாக இருந்திருக்கும், போக்குவரத்துப் பெருகிய காரணத்தாலும், கல்வி நிலையங்களும், பாடபுத்தகங்களும், செய்திதாள்களும், இதழ்களும், வானொலி முதலியனவும் கேரளா முழுமைக்கும் எல்லா பகுதிகளுக்கும் பொதுவாக ஒரே வகையாக அமைந்து வருவதாலும் இப்போது அந்த வேறுபாடுகள் குறைந்துள்ளன எனலாம். இனி இந்த வட்டார மொழி வேறுபாடுகள் பெருகுவதற்கு வழியில்லை.

ஆயினும் இன்றும் தமிழ்நாட்டில் பேசும் தமிழும் கேரளாவில் பேசும் தமிழும் சிற்சில வகையில் வேறுபட்டிருக்கின்றன. அவைகளுக்குள்ளும் அதாவது தமிழ்நாட்டில் உள்ள தென்மண்டல தமிழிற்கும், கொங்கு மண்டல தமிழிற்கும் வேறுபாடு உண்டாகும். கேரளாவில் இடுக்கி மாவட்டத் தமிழிற்கும் பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மாவட்டத் தமிழிற்கும் வேறுபாடு உண்டாகும் அந்தந்த மாவட்ட எல்லையோர மொழிகளின் தாக்கத்தால் இத்தகைய வேறுபாடுகள் காணப்படுகின்றன. இது ஒரு புறம், பெருகி வரும் ஆங்கிலச்சொற்கள் எல்லாபகுதிகளிலும் மிகுதியாகக் கலக்கின்றன. இது போன்று ஒலிகளிலும் இப்படிப்பட்ட வேறுபாடுகள் உள்ளன. இடுக்கி மாவட்டத்தில் தமிழ் எழுத்துகள் நன்கு ஒலிக்கப்படுகின்றன. ஆனால் கேரளாவில் பிற தமிழ் பேசும் பகுதிகளில் ஒலியியல்புகள் சிறப்பாக அமைவதில்லை. தமிழின் சிறப்பெழுத்தாகிய 'ழ' ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொரு வகையாகத் திரிக்கப்பட்டுப் பயன்படுத்துகின்றனர். சில வட்டாரங்களில் 'ள' எனவும் (மத்திய கேரளம்) சில இடங்களில் 'ய' எனவும் (வடக்கன் கேரளம்) உச்சரிக்கப் படுகிறார்கள். 'இழு' என்பதை 'இசு' என்பாரும் உண்டு, பேச்சுமொழியில் வாழைப்பழம் என்பதை வாளப்பழம், வாயப்பழம் என்று ஒலிக்கக்கூடிய நிலை படிப்பறிவு இல்லாத மக்களிடத்தில் அதிகமாக உள்ளது. அதே போல் 'இருக்கிறது' என்ற சொல்லைச் சிலர் 'இருக்கு' என்றும் வேறுசிலர் 'இருக்குது' என்றும் 'இக்குது' என்றும் பேசுகின்றனர். மேலும் செய்துவிட்டார் என்பதன் பேச்சுவடிவங்கள் செயஞ்சிட்டார், சேஞ்சிட்டார் முதலியவையாக உள்ளன. எடுத்துக்கொண்டான் என்பது எடுத்துக்கினான், எடுத்துக்னான் எடுத்துக்கிட்டான் என பலவாறாக ஒலிக்கப்படுகிறது. இதேபோல் மலையாளத்தில் பூ பறிக்குக என்பது, பூ என்பது, பூ வலிக்குக, பூ பிச்சுக, பூ நொட்டுக, பூ சிந்துக என்றவாறு ஒலிக்கப்படுவதைக் காணலாம்.

**2.2.1 மலையாள மொழியில் தமிழ்ச் சொற்கள்:-**

தென்னாட்டின் மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் தமிழின் வட்டார மொழியாக வழங்கிய மொழியே தமிழிலிருந்து கி.பி. 1500 காலகட்டத்தில் மலையாளம் எனத் தனிமொழியாக உருப்பெற்றது என்பது திராவிட மொழியியல் அறிஞர் அனைவரும் ஏற்றுள்ள கருத்து. மலையாள மொழி அறிஞர்களுள்ளும் நடுநிலைவாதிகள் இக்கருத்தை ஏற்கின்றனர். 1896-ல் கேரள பாணினீயம் எழுதிய ராசராசவர்மா, எல்.வி. இராமசாமி ஐயா,

எளங்குளம் குஞ்சன்பிள்ளை, எஸ். கே. நாயர் முதலியவர்கள் இக்கருத்தை ஏற்பவர்கள்.

மேற்குக் கரைத் தமிழ் மலையாளமாக மாறியதைப் பின்வரும் பகுதிகள் விளக்குகின்றன.

1. காடடர்ந்த மலைகளால் செந்தமிழ், நாட்டினின்றும் பிரிவுபட்டுத் தன்வழியே மாறிக் கொண்டு வந்த மலைநாட்டுத் தமிழை இக்காலத்தில் மலையாளமென்று பெயரிட்டழைக்கினறனர். மலையாள மொழியின் மொழித் தொகையைத் கவனித்துப் பார்த்தால் தமிழல்லாத சொற்களைக் காண்பது மிக அரிது (து.அ. கோபிநாதராவ்: செந்தமிழ் 1911-12)
2. இப்பொழுதுள்ள நிலையில் வடமொழியின் செல்வாக்கு மிகுதியாக மலையாளமொழியில் கலந்து பலன் தந்துள்ளது என்றாலும் அஸ்திவாரமும் மேற்கூரையும் இன்னும் தமிழ் மொழி நிலை நிறுத்தியனவே சிறப்பு விதிகள் ஒன்றும் உள்ளே சேரவில்லை. மரத்தாலமைந்த சுவரை நீக்கி அங்குச் செங்கல்லை வைத்துச் சுவர் கட்டிச் சாளரங்களை அமைத்து இருட்டையொழிக்க இவையே வடமொழி வாணிகனுக்குத் தனது மலையாள சீர்திருத்தஞ் செய்ய இயன்றன. இதனை உறுதிப்படுத்துவதற்கு வேண்டுமளவு ஆதாரங்கள் உள்ளனவாக (கேரள பாணினீயம் கருத்து) என்று எ.ஆர். ராஜராஜவர்மா கூறுகிறார்.
3. தமிழ் மொழிச் சொற்களுட் பெரும்பாலானவை மலையாள மொழியில் இன்றுவரைச் சிதைக்கப்படாமலும், சில சிதைக்கப்பட்டும், வேறு பல சமஸ்கிருத கலப்பால் உருமாற்றப்பட்டும் காட்சியளிக்கின்றன. இரு மொழிகளிலுமுள்ள ஒப்புமையுடைய சொற்கள், தொடர்கள் ஆகியனவும் தமிழினின்றும் அண்மையில் பிரிந்ததே மலையாளம் என்பதைப் பின்வரும் சான்று தெளிவாகக் காட்டுகின்றன.

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| அரிசி | அரி |
| எருக்கு | எரிக்கு |
| எலும்பு | எல்லு |
| கொக்கு | கொக்கு |
| கஞ்சி | கஞ்சி |

| | |
|---|---|
| மூஞ்சி | மூஞ்சி |
| குடம் | குடம் |

இதுபோன்று ஏராளமான சொற்கள் தமிழ் மலையாள மொழிக்கு ஒப்புமையுடைய சொற்களாக இருக்கிறது. (2002:51)

தமிழுக்கும் மலையாளத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டை ஆறு வகையாகப் பிரித்து விளக்குவதை ராஜராஜவர்மாவினுடைய கேரள பாணினீய வழியாக அறிய முடிகிறது.

### 2.2.1 மெல்லினமாக்கல்

மெல்லின எழுத்து தன்னை அடுத்து பின்வரும் எழுத்து வல்லினமெனில் அதனை ஆக்கிரமித்து மெல்லினமாகிவிடும் மெல்லினம் முன்னும் வல்லினம் பின்னுமாக வந்தால் மெல்லினம் இரட்டிக்கும்.

| எ.டு | தமிழ் | மலையாளம் |
|---|---|---|
| | மாங்காய் | மாங்கா |
| | பஞ்சி | பஞ்ஞி |
| | கன்று | கந்நு |
| | மங்கலம் | மங்ஙலம் |
| | சந்தனம் | சந்நனம் |

### 2.2.2 அண்ண ஒலியாய்த்திரிதல்

தமிழில் 'த' வர்க்கத்தில் 'த', 'ந' என்ற இரண்டு எழுத்துக்களே உள்ளன. இவை தம்முள் உறழும்போது த்த, ந்ந, ந்த என்ற மூன்று ஒற்றிணைகள் அமையும் இவற்றின் முன் அ, இ, எ, ஐ என்ற உயிர்கள் ஒன்றாயின் அவற்றின் இண்ண ஒலிகள் இன்பல்லொலிகளில் பரந்து அவைகளை அண்ண ஒலிகளாக்கும்.

| எ.டு | தமிழ் | மலை | |
|---|---|---|---|
| | அலைந்தான் | அலஞ்சான் | அலஞ்ஞான் |
| | அறிந்தான் | அறிஞ்சான் | அறிஞ்ஞான் |
| | ஐந்து | | அஞ்சு |
| | நான் | | ஞான் |
| | நண்டு | | ஞண்டு |

### 2.2.3 உயிர்குறுக்கம்

1. உயிர்களை வேண்டிய அளவுக்கு முற்றிலும் திறந்து ஒலிக்காது அடைத்து ஒதுக்கி ஒலிப்பதுதான் இதன் தன்மை. இது முக்கியமாக உகர

ஒலியில் தான் காணப்படுகிறது. குறைந்து ஒலிப்பதால் இதனைக் குற்றியலுகரம் என்பர். தமிழில் இது ஒரு ஒலிவேறுபாடேயன்றி இலக்கணப்பகுதிகளையோ பொருளையோ பாதிப்பதில்லை மலையாளத்தில் வினையெச்சத்திற்கும் வினைமுற்றிற்கும் இடையே உள்ள வேறுபாடு பலவிடங்களில் உகரத்தில் ஒலிவேறுபாட்டால் குறிக்கப்படுகிறது. முற்றுகரமெனில் வினைமுற்று ஆகும். குற்றியலுகரமெனில் வினையெச்சமாகும்.

எ.கா

| | |
|---|---|
| கண்டு (வி.மு) | கண்டு |
| கேட்டு | கேட்டு |
| வேலு (பெயர்) | வேலு (ஆயதம்) |

மிகப் பழைய காலத்திலிருந்தே உரைநடை வழக்கில் வந்திருக்கிறது. ஆயினும் செய்யுளைப்போல அது இலக்கியத் தரத்துக்கு உயர இயலாமற் போயிற்று.

2. பகுதி, உருபு ஆகியவற்றின் இறுதியில் வரும் ஐகாரம் குறைந்து அகரம் ஆகும்.

எ.டு

| **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|
| மழை, இலை, விலை | மழ, இல, வில |

### 2.2.4 பால் வேறுபாட்டொழிப்பு

தமிழில் காலத்தைக் குறிக்கும் சொற்களாகிய வினைமுற்றுகளில் பால், இடம், எண் ஆகியவைகளைக் குறிக்கும் விகுதிகள் சேர்க்கப்படுகின்றன. மலையாள மொழி இவற்றையெல்லாம் முற்றிலும் தவிர்த்துவிட்டது.

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| வந்தான் | அவன் வந்நு |
| வந்தாள் | அவள் வந்நு |
| வந்தார் | அவர் வந்நு |
| வந்தாய் | நீ வந்நு |
| வந்தீர் | நிங்ஙள் வந்நு |
| வந்தேன் | ஞான் வந்நு |
| வந்தோம் | ஞங்ஙள் வந்நு |

### 2.2.5 அரிய வழக்குகளைப் பயன்படுத்துதல்

தமிழ் மொழியில் ஒரு காலத்தில் வழக்கில் இருந்து காலப்போக்கில் வழக்கில்லாது போன சில வடிவங்கள் மலையாளத்தில்

வழங்குகின்றன. வடமொழியிலுள்ள தும் என்ற விகுதியின் இடத்தைப்பிடிக்கும் எதிர்கால வினையெச்சவிகுதியாகிய அன் என்ற விகுதி தமிழில் இப்போது வழக்கில்லாது போய்விட்டது. அது இன்று மலையாளத்தில் வழக்கில் உண்டு என்பது குறிப்பிடத்தக்கது.

| எ.டு தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| | படிக்க வந்தேன் | படிக்கான் வந்நு |
| | வாசிக்கப்போகிறேன் | வாயிக்கான் போகுந்நு |

**2.2.6 அங்க பங்கம்**

பழைய திராவிடச் சொற்களிலும் உருபுகளிலும் மலையாள மொழியின் வசதிக்காக எழுத்துக்களைக் குறைத்துள்ளது. இவ்வகை வடிவங்கள் வாலும் தலையும் வெட்டும்போது உண்டாகும் உருமாற்றத்தால் எளிதில் அறிய முடியாத விதத்தில் மாறிப்போயிருக்கின்றன.

எ.டு

'க்கு' என்ற நான்காம் வேற்றுமையுருபும் 'உடைய' என்ற ஆறாம் வேற்றுமையுருபும் சில இடங்களில் சில விதிகளுக்கேற்ப 'உ' என்றும் 'உடெ' என்றும் டெ என்றும் எழுத்துக் குறைத்துச் சுருக்கப்பட்டுள்ளன.

4 வே. உ அவனு, அவள்க்கு

6 வே. உ அவனுடெ, அவன்றெ

இவ்வாறு ஆறு நிலைகளில் மலையாளம் தமிழினின்று எவ்வாறு மாறுபட்டுள்ளது என்று கேரள பாணினீயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

**2.3 மலையாள மொழியில் மானுடப்பெயரும், ஊர் பெயரும்**

பழங்காலந்தொட்டுத் தமிழ் மலையாள மக்களின் பெயர்கள் ஒன்றுபட்டு இருப்பதைச் சேரமன்னர்களின் பெயர்கள் வழியாக இன்னும் காணமுடிகிறது. 'குட்டுவன்' என்னும் பெயர் 'குட்டன்' என்று மாறி அந்நிலையிலேயே அங்ஙனமே இன்றும் பொதுவுடைமைப் பொருள்போன்று பண்டைய மன்னர்களையும், இன்றைய மக்களையும் குறிக்கும் சொல்லாக வழங்கி வருவதை அறியமுடிகிறது.

எ.கா சேரமான் குட்டுவன் கோதை (பழங்காலம்)

அப்புக்குட்டன், ஸ்ரீகுட்டன் (தற்காலம்)

இதேபோன்று மலையாளத்திலுள்ள பழமையான ஊர்ப் பெயர்களெல்லாம் இன்றும் தனித்தமிழாகவே இருக்கின்றன. கோடு(கோழிக்கோடு), சேரி(தலச்சேரி) குளம்(தேவிகுளம்), புரம்(அங்ஙாடிபுரம்), ஊர்(கண்ணூர்),

காடு(பாலக்காடு), குடி(சாலக்குடி), அங்காடி (பரப்பனங்காடி), வாசல்(பள்ளிவாசல்), கரை(கொட்டாரக்கரை), களம்(திருவஞ்சிக்களம்) முதலியன தனித்தமிழ் ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன.

தமிழ்நாட்டில் இப்பெயர்களுக்கு இணையாக கோடு(விளவங்கோடு), சேரி(பாண்டிச்சேரி), புதுச்சேரி, குளம்(பெரியகுளம்), புரம்(காஞ்சிபுரம், கராசிங்கபுரம்), ஊர்(போடிநாயக்கனூர், கடலூர்) காடு(களக்காடு, தென்னாற்காடு), குடி(மன்னார்குடி, புளியங்குடி), வாசல் (காளவாசல்) போன்றவைத் தமிழ்நாட்டில் அமைந்துள்ள ஊர் பெயராகும்

## 2.4 தமிழ் மலையாள மொழியில் ஐம்பூதங்கள்:

ஐம்பூதங்கள் என்பவை நீர், நெருப்பு, காற்று, நிலம், ஆகாயம் போன்றவகளைக் குறிக்கின்றன. பஞ்சம் என்பது ஐந்து என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். எடுத்துக்காட்டாகப் பஞ்சலோகம் என்பது ஐந்து உலோகங்களின் கலவை எனலாம். இது போல முக்கியமான ஐந்து கூறுகளினை ஐம்பூதங்கள் அல்லது பஞ்சபூதங்கள் என்பர். பஞ்சபூதங்களுக்கு ஒவ்வொரு சிவத்தலமும், ஒரு வரலாறும் காரணமாக அமைகின்றன. ஏதேனும் ஒரு தன்மையினாலும் அல்லது இயற்கையான நிலவரத்தினாலும் இப்பூதத்திற்குரிய கோயிலாக விளங்குகின்றன.

பூதம் என்ற சொல் அச்சப் பொருளும், பருமன் பொருளும் கொண்டமைந்ததாகும். ‘பூ’ என்றால் மலர்ந்து நிறைந்ததைக் குறிக்கும் முழுமை, நிறைவுப் பொருள்களில் சொற்கள் பிறந்தன. ‘பூ’ பூரணம், பூதம், பூருதல் ஆகிய அனைத்தும் ‘பருத்துப் பெரிதாகும்’ என்ற பொருள்பட அமைந்தவை எனலாம்.

பஞ்ச - என்பது மருவிய தமிழ்ச்சொல்

பூதம் - என்பது நேரடி தமிழ்ச் சொல்

ஐந்து என்ற தமிழ்ச்சொல் மருவி ‘அஞ்சு’ எனப்படுகிறது. ஐந்து -> அஞ்சு ‘அஞ்சு’ என்ற சொல் அயல்மொழியினரின் பயன்பாட்டில் ‘பஞ்சு’ எனத்திரிவது இயல்பானதே. இதனடிப்படையில் மலையாளத்தில் பஞ்சபூதம் என்று அழைக்கின்றனர்.

பஞ்சம் என்ற சொல்லும் பூதம் என்ற சொல்லும் தமிழ் சொல்லாகும். பஞ்சு என்ற சொல்லுக்குப் பருத்தி என்று பொருளுண்டு. இந்தப் பருத்தியில் விளையும் காயில் பெரும்பான்மையும் ஐந்து அறைகள் உண்டு. கையில்

உள்ள ஐந்து விரல்களைப் போல பருத்திக் காயானது ஐந்து பிரிவுகளாக விரியும். இதன் அடிப்படையில் உருவானதே ஐந்து என்னும் எண்ணிக்கைக் குறிக்கும் பஞ்சம் என்ற சொல்

பஞ்சு=பருத்தி > பஞ்சம்=ஐந்து

மலையாளத்தில் ஐம்பூதங்கள் என்று அழைப்பதில்லை. பெரும்பாலும் பஞ்ச பூதங்கள் என்றே அழைத்து வருகின்றனர். இரு மொழிகளிலும் சொற்களும், பொருளும் ஒன்றுபட்டு இருப்பதைப் பஞ்சபூதங்களைப் பயன்படுத்தும் முறையில் அறியமுடிகிறது.

| ஐம்பூதங்கள் | தமிழ் | மலையாளம் |
|---|---|---|
| பூமி | நிலம், பூமி | பூமி |
| நீர் | நீர், தண்ணீர் | ஜலம், வெள்ளம் |
| காற்று | காற்று, வளி | வாயு, காற்று |
| தீ | தீ, நெருப்பு | தீ, அக்னி |
| வானம் | வானம், ஆகாயம் | ஆகாசம் |

முதலாவதாகத் தமிழில் நிலம் என்பதை மலையாளத்தில் பூமி என்று கூறிவருகின்றார்கள். நிலம் என்பதைப் பயன்படுத்துவதில்லை. ஆனால் வடமொழிச் சொல்லான ‘ஸ்தலம்’ என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர் இரண்டாவதாக நீர். நீர் என்பதற்கு ஜலம், வெள்ளம் என்ற சொற்களால் பயன்படுத்தி வருகின்றனர். இங்கு வெள்ளம் என்பது மலையாள மக்களிடத்தில் பேசப்படும் சொல்லாகவும் ஜலம் என்பது எழுத்து வழக்கிற்கு அதிகமாகப் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. மூன்றாவதாக உள்ள காற்று தமிழில் வளி, வாயு என்ற சொல்லாலும் பயன்படுத்துகிறார்கள், மலையாளத்தில் வாயு, காற்று என்ற இரண்டு சொற்களும் சூழலுக்கு ஏற்ப பயன்படுத்தி வருகின்றனர். நான்காவது நெருப்பு நெருப்பை, தீ என்றும், அக்னி என்றும் இருமொழிகளிலும் அழைப்பார். இறுதியாக உள்ள வானம் என்பதற்கு இணையான சொல்லாக மலையாளத்தில் ஆகாசம் என்பர். ஆகாசம் என்பது வடமொழிச்சொல் சொல்(தற்சமம்), இதைத் தமிழில் தற்பவப்படுத்தி ஆகாயம் என்று அழைக்கின்றனர்.

இரண்டு மொழிகளிலும் இச்சொற்கள் தினந்தோறும் பயன்படுத்தக்கூடிய பெருவழக்காக இருக்கின்றன. தமிழ் மலையாள மொழிகளில் இதுபோன்று

ஒவ்வொரு துறையையும் எடுப்போமானால் ஏராளமானப் பொதுச்சொற்கள் அப்படியே பயன்படுத்தப்பட்டு வருகின்றனர் என்பதைக் காணமுடிகின்றன.

## 2.5 தமிழ் மலையாள மொழிகளின் பொதுச் சொற்கள்

திராவிட மொழிகளில் மிகவும் நெருக்கமான உறவுடைய மொழிகளே தமிழ், மலையாளமாகும். இவ்விரு மொழிகளும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்புடையதால் இம்மொழிச் சொற்களும் இரு மொழியிலும் ஒரே போல் பொருளை வழங்கி வருகின்றன. திராவிடக் குடும்பத்தில் பல மொழிகள் இருப்பினும் தமிழ் மலையாள மொழிகள் நிலம், பண்பாடு, கலாச்சாரம், இலக்கியம் முதலானவைகளில் மிகுதியான ஒற்றுமையுடன் காணப்படுகிறது. அவற்றின் தொடர்ச்சியாக ஒரு பொருளைக் குறிக்கும் சொற்களும், தொடர்களும், வினைகளும், தமிழ் மொழியைப் போன்றே மலையாள மொழியிலும் காணப்படுகின்றன. இவ்விரு மொழிகளுக்குள்ளும் வழங்கும் பல துறைசார்ந்த சொற்கள் பொதுவாக ஒரே பொருளைத் தருகின்றன. அவற்றை இவ்வியலில் இருமொழிகளின் பொதுச்சொற்களாக விளக்கிக் காட்டப்படுகின்றன.

முதலாவதாக விலங்குகளை எடுத்துக்கொண்டால் தமிழ் மலையாள மொழிகளில் சொல்லாலும், பொருளாலும் ஒன்றுபட்டும், சில சொற்கள் உச்சரிப்பில் மட்டும் வேறுபட்டு ஒரேப் பொருளைத் தரக்கூடியவையாக இருக்கின்றன.

‘அனிமல்’ என்ற ஆங்கில வார்த்தை அனிமலே என்கிற இலத்தீன் வார்த்தையில் இருந்து பிறந்ததாகும். இது அனிமா என்னும் முக்கிய மூச்சு அல்லது ஆன்மா எனப் பொருள் கொண்ட வார்த்தையில் இருந்து தோற்றம் செய்யப்பட்டது. அன்றாட பேச்சுவழக்குப் பயன்பாட்டில் இந்த வார்த்தைப் பொதுவாக மனிதரல்லாத விலங்குகளைக் குறிக்கிறது.

விலங்கு ராச்சியம் (kingdom Animalia) என்னும் இந்த வார்த்தையின் உயிரியல் வரையறை மனிதனையும், உள்ளடக்கிய தாகவே இருக்கின்றது.

‘விலங்கு’ என்பதற்குத் தமிழில் ‘குறுக்காக வளர்வது’ என்ற பொருள் உண்டு. மனிதன் மட்டுமே நேராக வளர்கிறான், மற்ற விலங்குகள் எல்லாம் குறுக்காக வளர்கிறது என்ற அடிப்படையிலும், கால்களைப் பிணைக்கும் வகையில் பூட்டும்வளையம் குறுக்காக இருப்பதால் ‘விலங்கு’ என்ற சொல் உருவானது. விலங்கு என்ற சொல்லிற்கு இணையாகத் தமிழில் ‘கால்நடைகள்’ என்ற சொல்லையும் பயன்படுத்துகின்றனர். அதாவது

சிந்தனையிலும், நாகரீகத்திலும், பயன்பாட்டிலும் சிறந்து விளங்காதவர்களை விலங்கு என்றும் கால்நடைகள் என்றும் அழைத்து வருகின்றனர். இதன் அடிப்படையில்தான் விலங்குகளுக்குச் சிகிச்சை அளிக்கக் கூடிய கால்நடை மருத்துவமனைகள் உருவாயின என்பர். தமிழ் மலையாள மொழிகளில் விலங்கு என்பது பொதுச் சொல்லாகவே காலங்காலமாக வந்திருக்கின்றன என்பதை, க்ரியா அகராதியும் உறுதி செய்கிறது.

விலங்கு [1] (பெயர்) பொதுவாக மனித இனமும் தாவரமும்,
அல்லாத ஏனைய உயிரினம் (குறிப்பாக)
நான்கு கால்களுடைய, குட்டி போட்டு பால் தரும் இனம்;

விலங்கு[2] (பெயர்) (கைதியின் கை, கால்களைப் பிணைக்கும் வகையில்)
பூட்டும் அமைப்பைக் கொண்ட வளையம் கோர்த்த
சங்கிலி

விலங்கு[3] (பெயர்) இ, ஈ., உ ஆகிய உயிர் எழுத்துகளைச் சுட்டிக்காட்ட
உயிர்மெய்யெழுத்தின் மேலே அல்லது கீழே வளைவாகப்
போடப்படும் அடையாளக்குறி

தமிழில் விலங்கு என்பதைப் போல 'மிருகம்' என்ற சொல்லையும் கால்நடைகளுக்குப் பயன்படுத்தி வருகின்றனர். இருந்தாலும் மலையாளத்தில் மிருகம் என்ற ஒரு சொல்லையே கால்நடைகளுக்குக் காலங்காமாகப் பயன்படுத்தி வருகின்றனர். க்ரியா அகராதியின் இரண்டாவது பொருளான 'வளையம்' 'கோத்தச் சங்கிலி' என்பது விலங்கு என்ற சொல்லாலும் பயன்படுத்தி வருகின்றனர். இதனடிப்படையில் விலங்கு என்ற சொல் தமிழ் மலையாள மொழிகளுக்குப் பொதுச் சொல்லாக இருந்து வருகிறது.

**2.6 தமிழ் மலையாள மொழிகளில் வலங்குகள் மற்றும் பறவைகள் குறித்த பொதுச்சொற்கள்:**

இவ்விரு மொழிகளிலும் காலங்காலமாக விலங்குகள் மற்றும் பறவைகள் குறித்த பெயர்கள் ஒரேபோல் இருந்து வருவதை பெயர்களின் பயன்பாட்டை வைத்து உணரமுடிகிறது.

| **விலங்குகள்** | **பறவைகள்** |
|---|---|
| நாய் | வௌவால் |
| பன்றி | கோழி |
| சிங்கம் | குயில் |
| பூனை | கழுகு |

| | |
|---|---|
| யானை | பருந்து |
| கடுவா | கொக்கு |
| ஆடு | மைனா |

இது போன்று ஏராளமான விலங்குச் சொற்கள் பொதுசொற்களாக இருக்கின்றன. சில சொற்களில் சிறுசிறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதாவது யானை, பூனை போன்ற விலங்குப் பொதுச்சொற்களில் ஈற்று 'அ' கரம் தமிழில் 'ஐ'யானால் மலையாளத்தில் 'அ'வாக நிற்கிறது.

எ.கா அவை - தமிழ்

அவ - மலையாளம்

'ஐ' திராவிட 'ஐ' சமஸ்கிருத 'ஐ'யைப் போல 'அ இ' க்களின் சேர்க் கையல்லாது 'எ இ'-க்களின் சேர்க்கையால் உண்டானது. பண்டைய திராவிட 'அ' என்ற ஒலி, முதலில் 'எ' யாக மாறி மருவி 'ஐ' யாக மாறியது. மலையாளத்தில் 'மழ' என்பது தமிழில் 'மழை', என்று வருவதைக் காணலாம். தமிழின் ஓர் 'ஐ' காரத்தைத் தொடர்ந்து மற்றுமொரு 'ஐ'காரம் வந்தால் முதலாவதான 'ஐ' நெடிலாயினும் குறிலாகவே கொள்ளப்படும். 'உடைமை' என்ற சொல்லைச் சீர்பிரிக்கும்போது 'டை' என்பதிலுள்ள 'ஐ' குறிலாகவே ஏற்கப்படும். தமிழில் யானை என்பது இலக்கிய வழக்காகவும் ஆனை என்பது பேச்சு வழக்காகவும் இருக்கிறது. மலையாளத்தில் 'ஆனை' என்பதே வழக்கத்தில் இருக்கிறது. மேலும் தமிழில் சொல்லுக்கு முதலாக 'ஞ' வருமிடங்களில் எல்லாம் மலையாளமொழியில் 'ந' கரமே வருவது காண்கிறோம். தமிழில் 'நான்' என்பதை மலையாளத்தில் 'ஞான்' என்பதும் 'யான்' என்ற யகரத்தைக் கொண்டு பிறந்தனவே. இதேபோல தமிழில் 'நண்டு' மலையாளத்தில் 'ஞண்டு' ஆக மாறுகிறது. (2013:141)

மைனா, கடுவா போன்ற சொற்கள் மலையாளத்தில் 'அ' கரமாக(குறிலாக) குறுகி ஒலிப்பதைக் காணலாம்.

(எடு) கேரளா என்பதைக் 'கேரள' என்றும்

கலா – கல என்றும், குறுகி உச்சரிக்கவும் எழுதவும் செய்வார்கள்.

குரங்கு என்ற பொதுச் சொல்லை எடுப்போமானால் தமிழில் 'க' வல்லினமாக முடியக்கூடியது. மலையாளத்தில் 'ங' மெல்லினமாக முடிகிறது.

இவ்வாறாகத் தமிழ் மலையாள மொழிகளில் விலங்குப் பொதுச் சொற்கள் ஒன்றாக இருப்பதைப் போல விலங்குகளை இரண்டு விதமாக பிரிக்கின்றனர். நிலவாழ் உயிரினங்கள், நீர்வாழ் உயிரினங்கள் என்று இரண்டு நிலைகளில் பிரிக்கின்றனர். இதில் நிலவாழ் உயிரினங்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

**2.7 விலங்குகள் மற்றும் பறவைகள் குறித்த பொதுச் சொற்களும், பெயர்க் காரணமும்:-**

**2.7.1 நாய்:**

நாய்களுக்குத் தமிழில் பல பெயர்கள் உள்ளன. நாக்கை நீட்டித் தொங்கப் போட்டுக் கொண்டே திரிவதால் ‘நாய்’ என்னும் பெயர் தமிழில் தோன்றியது. நாயிற்கு, ஞாளி, ஞமலி என்பன நாயைக் குறிக்கும். சங்ககாலத் தமிழ்த் திசைச்சொற்கள்.(மு.வ. சொல்லின் வழக்கு)

நாய்கள், வீட்டிற்குப் பாதுகாவலாக இருக்க தமிழ் மற்றும் மலையாள மக்கள் இன்றும் வீடுகளில் வளர்த்து வருவதைப் பார்க்க முடிகிறது.

**2.7.2 பன்றி:-**

கோரைப் பல் இருப்பதால் பன்றி என்னும் பெயர் வந்தது என மு.வ. கூறுகிறார்.

**2.7.3 சிம்ஹம்/சிங்கம்**

சிம்ஹம் என்பது வடமொழிச் சொல் அதாவது தற்சமச் சொல் தமிழில் தற்பவமாக மாறிச் சிங்கம் என்றானது. மலையாளத்தில் அப்படியே வழங்கக் கூடிய பழக்கம் இன்றும் இருக்கிறது. தமிழில் ஆண் சிங்கத்திற்கு ‘அரிமா’ என்ற பெயருண்டு. குற்றாலக் குறவஞ்சியில் ஆளி என்ற சொல்லையும் ‘அரிமாக்கனைக் குறிக்க ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

**2.7.4 பூனை:-**

பூனை என்னும் விலங்கினைக் குறிக்க வெருகு, வெருக்கு, பிள்ளை, பூசை ஆகிய பெயர்கள் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளன. நாம் தற்போது பயன்படுத்திவரும் பெயரான பூனை என்ற பெயர் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்படவில்லை.

வெருகு, வெருக்கு ஆகிய பெயர்கள் இவ்விலங்கின் வெருவுதல் அதாவது அஞ்சுதல் பண்பினாலும், பிள்ளை என்ற பெயர் குழந்தையைப்

போல இரவில் ஓசையையெழுப்பும் பண்பினாலும், உருவானதென்றும், பூசை என்ற பெயர் பூப்போல பலமற்ற உடலினை உடையது என்ற பொருளிலும் ஏற்பட்டிருக்கலாம்.

பூசை என்னும் பெயரே பின்னாளில் பூஞ்சை என்றும், பூனை என்றும் மருவியிருக்க வேண்டும். பல்வேறு இந்திய மொழிகளில் பூனைகளைக் குறிக்கும் பெயர்கள் சங்க இலக்கியத் தமிழ்ப் பெயர்களை ஒட்டியே அமைந்துள்ளது. இந்தியில் பில்லி என்ற சொல் சங்க இலக்கியப் பெயரான 'பிள்ளை' என்ற பெயரில் இருந்து மருவியது. மலையாளத்தில் பூச்சா என்ற சொல் சங்க இலக்கிய பெயரான பூச்சை என்ற பெயரில் இருந்து மருவியது. எனலாம். இவ்வாறு தமிழில் பூனை என்றும் மலையாளத்தில் பூச்சை என்றும் உச்சரிக்கின்றன.

**2.7.5 கோழி:-**

இருமொழியிலும் கோழியைப் பொதுவாகக் 'கோழி' என்றே அழைக்கின்றனர். தமிழில் பேடு என்று பெண்கோழியையும், சேவல் என்று ஆண் கோழியையும் பெயரிட்டு அழைக்கின்றனர். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் சேவல் சண்டை நடைபெற்றமைக்கான சான்றாகச் சேவல் நடுகல் கிடைத்துள்ளது. பட்டினப்பாலை, திருமுருகாற்றுப்படை போன்ற பழந்தமிழ் நூல்களில் சேவல் சண்டை குறிப்பிடப்பட்டுள்ளன. கோழி என்ற பெயர் வரக்காரணம் அவை எழுப்பக்கூடிய ஓசையைப் பொருத்தே அமைந்திருக்கலாம்.

மலையாளத்தில் பெண்கோழியைப் பெடக்கோழி என்றும், ஆண் கோழியைப் பூவன்கோழி என்றும் அழைக்கின்றனர். தமிழில் பெட்டை, பேடு, பெட என்று அழைக்கின்றனர். பேடு என்பது அருகிய வழக்காக இருக்கிறது. பெட்டை மற்றும் பெடக்கோழி பேச்சுவழக்காக இருக்கிறது. இருமொழியிலும் நாட்டுகோழி என்று அழைப்பது இன்றும் வழக்கத்தில் உள்ளது.

**2.7.6 யானை:-**

'யானை' என்பதற்குத் தமிழ் மலையாள மொழிகளில் ' ஆனை' என்றே உச்சரிக்கின்றனர். எழுத்து வழக்காக இருக்கக்கூடிய 'யானை' தமிழ் பேச்சு வழக்கில் 'ஆனை' அதாவது யா-காரம் ஆகாரமாக மாறுகிறது. இதே நிலைதான் மலையாளத்திலும் 'ஆனை' என்பதற்கு 'ஐ' காரம் கெட்டு 'ஆன' என்று உச்சரிக்கின்றனர். இலக்கண நூலான இலக்கண

விளக்கத்தில் ஆனை என்றே பதிவு செய்திருக்கின்றனர். இதைத் தொடர்ந்து பெரும்பாலான நூல்களிலும் ஆனை என்றே பயன்படுத்தத் தொடங்கிவிட்டனர்.

"ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
மானவனுக்கு வகுப்பது பரணி"

இலக்கணவிளக்கம் - 839

சங்க இலக்கியங்களில் யானையை 70-க்கும் மேற்பட்ட பெயர்களில் குறிப்பிடுகின்றன. தமிழ் மலையாள பேச்சுவழக்கில் 'ஆனை' என்றே அதிகமாகப்பயன்படுத்தி வருகின்றனர்.

இதுபோன்று ஏராளமான விலங்குப் பொதுச்சொற்கள் தமிழ் மலையாள மொழிகளில் ஒன்றுபட்டு இருப்பதைக் காணமுடிகிறது. சில சொற்கள் உச்சரிப்பு முறையில் மட்டும் தமிழ் மலையாள மக்களிடையே சிறு வேறுபாடுகளில் காணப்படுகின்றன.

**2.8 தமிழ் மலையாள மொழியில் உணவு பொதுச் சொற்கள்:-**

உலகம் நீராலும் காற்றாலும் ஆனது. ஆனால் உயிர்கள் உணவால் மட்டும் ஆனவை. மனிதகுலம் தோன்றிய வினாடி முதல் இன்றுவரை நமது எல்லா தேடல்களுக்கும் அடிநாதமாக இருப்பது பசியும், ருசியும் மட்டும்தான். உணவு என்ற ஒன்று இல்லையென்றால் நாம் இருப்பது சாத்தியமில்லை. மனிதனின் வரலாறு என்பது உணவின் வரலாறோடு பின்னிப் பிணைந்து இருக்கிறது. முதலில் பசிக்காகச் சாப்பிட்டார்கள். பிறகு விளைந்ததைச் சாப்பிட்டார்கள். அதன்பின் விளைவித்துச் சாப்பிடக் கற்றார்கள். விதவிதமான உணவு வகைகள் ஊருக்கு ஊர், மாநிலத்திக்கு மாநிலம், தேசத்துக்குத் தேசம் மாறுபடும் என்றாலும் கேரள மற்றும் தமிழ்நாட்டு மக்கள் ஒன்றுபட்ட உணவுவகைகளைப் பழங்காலந்தொட்டு உண்டு வந்தனர் என்பதைப் பொதுச் சொற்களால் அறிய முடிகிறது.

உணவே மருந்து என்ற ஒப்பற்ற பழக்கம் நம் உணவு பழக்கத்தில் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. இதற்கு நம் சங்ககால இலக்கியங்களே சான்று. இதைப் பற்றி எட்டுத்தொகை, பத்துப்பாட்டு குறிப்பாகக் கலித்தொகை போன்ற நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழகத்தில் உள்ள சித்தர்கள் உணவுமுறைப் பற்றிக் குறிப்பிடுகையில் எது உனக்கு உணவாக இருக்கிறதோ அதுவே மருந்தாக இருக்க வேண்டும். எது உனக்கு மருந்தாக இருக்கிறதோ அதுவே உனக்கு உணவாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றனர். பண்டைய தமிழர்கள் (சேர, சோழ, பாண்டியர்) அவர்கள் வாழ்ந்த நிலத்திற்கு ஏற்ப உணவுமுறைகளை அமைத்துள்ளனர்.

தமிழ் மலையாள மக்களின் வழக்கத்திலுள்ள உணவு பற்றிய, பொது சொற்களை இங்கு காணலாம்.

**2.8.1 சோறு:-**

'சோறு' என்னும் சொல் தமிழ் மற்றும் மலையாள மொழியில் பொதுச் சொல்லாகவே இருக்கிறது. சோறு என்றால் பொதுவாகச் சமைக்கப்பட்ட உணவு என்று பொருள் கொள்கிறார்கள். உணவைக் குறிக்கும் 27 சொற்களில் சோறு என்பது ஒன்று எனச் சூடாமணி நிகண்டு வழியாக அறிய முடிகிறது.

சோறு - சொல் - நெல் - சொல்லுள்(நெல்லுள்) இருப்பது சோறு

சொல்வளம் : சோறு, சோறாக்கு, சோற்றுக்கற்றாளை சோளச்சோறு என விரியும்

சோறு என்பது அரிசியை அவித்துப் பதமான நிலையில் பெறப்படும் ஒரு உணவு வகையாகும். இதனைச் சாதம் எனக் குறிப்பிடும் வழக்கும் தமிழில் உண்டு. சேறு, சாறு, சாதம் (வடமொழி) என வடமொழியில் அழைக்கின்றனர். சிலர் சாதம் என்பது தமிழ்ச் சொல்தான் என்றும் வெந்நீரில் வேகும் அல்லது சாகும் அரிசிக்குச் சாதம் என்று பெயரிட்டனர். இதன் பொருட்டாகவே தமிழில் தயிர்ச்சாதம், புளிச்சாதம் போன்ற உணவு வகைகள் தோன்றியிருக்கும். தமிழர்களின் பாரம்பரிய உணவுகளில் சோறு முதன்மை உணவுகளில் ஒன்றாகும். பண்டையக்காலம் தொட்டே சோறு தமிழர்களின் வாழ்வின் ஒரு அங்கமாக இருந்து வந்துள்ளது. பல புராணங்களிலும் சோறு என்ற சொல் வெகுவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழரின் உணவுவகைகளில் சோறு ஒரு நாளைக்கு ஒரு நேர உணவாக எல்லாநாளும் உண்ணுதல் தமிழர் வழக்கமாகும். கறிகள் அற்ற சோறு, "வெறும்சோறு" என்று அழைக்கப்படும். சோறு சங்க இலக்கியத்தில் பயின்று வரும் சொல்லாகும்.

**ஏற்றுக உலையை ஆக்குக சோறே (புறம்-172)**

**அரிசி அமலை வெண்சோறு (சிறு:194)**

**ஊண்சோற்று அமலை பாண் கடும்பு அருந்தும் (புறம்(33,14)**

ஊண் என்னும் சொல் பழங்காலந்தொட்டுத் தமிழில் இருந்தாலும் மலையாளத்தில் மதிய உணவை ஊண் என்று அழைக்கின்றனர். ''ஊணு கழிச்சோ" ஊணு உண்டோ" எனச் சொல்வதைப் பார்க்க முடிகிறது. இன்று பிரியாணி என்று அழைக்கும் உணவு அன்று ஊன்சோறு என்று அழைக்கப்பட்டது. உணவு, உணா, உண்டி, ஊட்டு, ஊட்டம் போன்ற

அனைத்துச் சொற்களும் உள் என்ற மூலத்திலிருந்து உருவான சொல் உணவு, உண், உண்ணுதல் என்பது உட்கொள்ளுதல் என்ற பொருளில் அமைந்த சொல் (விக்கிபீடியா தமிழ்) மேலும்

சோறு – சோது - சாதம்

'ற' என்பது 'த' என்றாகும்

சோற்றுக்கு - சோத்துக்கு

விற்று - 'வித்து'

காற்று - காத்து இயல்பாக மாறும்

சங்க இலக்கியத்தில் பெருஞ்சோற்று உதியன் என்ற அரசன் தான் பெற்ற வெற்றியைத் தன் போர் வீரர்களுக்குச் சோறிட்டுக் கொண்டாடியுள்ளார். எனவே இவன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்று பெயர்பெற்றான். சேரநாடு என்பது இன்றைய கேரளத்தைக் குறிக்கும்

சோற்றின் வகைகள்:

- வரகுச் சோறு
- சாமைச் சோறு
- தினைச் சோறு
- அரிசிச் சோறு
- கம்பஞ் சோறு
- புளிச் சோறு
- தயிர்ச் சோறு
- பழஞ் சோறு (பழங்கஞ்சி)
- பழய சோறு
- தக்காளிச் சோறு
- எலுமிச்சைச் சோறு
- பருப்புச்சோறு

என்றெல்லாம் பல வகைகளில் பழங்காலத்தில் பயன்படுத்தி வந்தனர். இன்று சில உணவு பொருட்களின் உற்பத்தி குறைவானதால் அவை அருகிய உணவாகப் பயன்பட்டு வருகின்றன. பழைய சோறு என்பதை மலையாளத்தில் 'பழஞ்சோறு' "பழங்கஞ்சி" என்று அழைப்பார்கள்.

இவ்வாறு சோறு என்பது பொதுச் சொல்லாக இருந்தாலும் தற்காலத்தில் குழந்தைப் பேச்சுவழக்காகச் 'சோச்சி' 'ஆப்பி' என்ற வழக்கும் பயன்படுத்தப்பட்டு வருகிறது(1997:223)

சோறு என்பது தமிழக மற்றும் கேரளத்தில் பயன்பாட்டிலுள்ள பொதுச் சொல்லாக இருந்தாலும் உணவு சமைப்பதில் சில வேறுபாடுகள் காணமுடிகின்றன. அதாவது தமிழகத்தில் சோறு உண்டாக்கும்போது சோற்றில் உப்பிடக்கூடிய பழக்கம் இருக்கிறது. கேரளத்தில் சோற்றில் உப்பிடாமல் அப்படியே சமைப்பார்கள். இந்தச் செயல்பாடு இன்றுவரைத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இங்கு எடுத்துக் கூற வேண்டிய விஷயம் சாப்பாடு. சாப்பாடு என்பது தமிழ் சொல். தமிழர்கள் இந்தச் சொல்லை அகற்றி நிறுத்தமுடியாத சொல்லாகப் பயன்படுத்தி வருகின்றனர். அதாவது சாப்பிட்டாச்சா, என்ன சாப்பாடு, சாப்பிட வா, சாப்பிட்டுப் போ என்று வழக்கில் பயன்படுத்துகின்றனர். உணவு விடுதிகளில் 'சாப்பாடு ரெடி' என்றெல்லாம் எழுதியிருப்பதைக் காணமுடிகிறது. சாப்பாடு என்பதற்கு உணவு, போசனம், சோறு, உண்டி போன்றவைப் பயன்படுகின்றன.

மலையாளத்தில் 'சாப்பாடு' என்பதற்கு ஊண் என்றே பயன்படுத்துகின்றனர். இங்கு காலை உணவு சாப்பாடு என்பதற்குச் சமமாக மலையாளத்தில் 'காப்பி குடிச்சோ' என்று கேட்பார்கள். மதிய உணவு சாப்பிட்டாய என்பதற்கு 'ஊணு உண்டோ' 'ஊணு கழிச்சோ' 'சோறு' கழிச்சோ என்றெல்லாம் கேட்பார்கள். தமிழில் மூன்று நேரங்களில் உண்ணக் கூடிய உணவையும் 'சாப்டாச்சா' என்று கேட்கிறார்கள். இதற்குச் சமமாக மலையாளத்தில் 'ஆகாரம் கழிச்சோ' என்று கேட்கிறார்கள். இது வடமொழிச் சொல்லாக இருந்தாலும் மலையாளத்தில் தொடர்ந்து பயன்படுத்தி வருகின்றனர்.

இவ்வாறு பொதுச்சொல்லான சோறு பற்றிய தகவல்களை ஆய்வின் வழியாக அறிய முடிகின்றன.

**2.8.2 பிட்டு/புட்டு:-**

பிடிக்கப்பட்டதே பிட்டு ஆனது. உதிரியாக இருக்கும் மாவினைப் பிடித்துச் செய்யப்பட்டதால் பிட்டு எனப் பெயர் பெற்றது.

பிட்டு - என்பது தூயத் தமிழ்ச் சொல்

புட்டு - என்பது பேச்சு வழக்கு

‘இ’ கரம் உகரமாய்த் திரிவது மக்கள் வழக்கில் பெருவாரியான சொற்களில் காணப்படுகிறது.

கேரளாவில் புட்டு என்பதே பெருவழக்காகப் பயன்படுத்துகின்றனர். பழங்காலத்தில் ஒவ்வொரு சாதிக்கும் மதத்திற்கும் உணவுகள் தனியாக இருந்திருக்கின்றன. அந்த வகையில் ஈழவ சமுதாய உணவாகக் கேரளாவில் 19-ம் நூற்றாண்டில் புட்டு இருந்திருக்கிறது இன்றும் யாழ்ப்பாணத் தமிழர்கள் புட்டு என்றும், சிங்கள சகோதரர்கள் பிட்டு என்றும் அழைப்பது வழக்கம்.

பிட்டு என்னும் உணவு சிவபெருமானுக்குத் தொடர்புடையதாகப் பிட்டுக்கு மண் சுமந்த பெருமானாக அழைப்பார்கள். அதாவது சிவபெருமான் பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படிபட்ட திருநாள், ஆவணி மாதம், மூலம் நட்சத்திரம் ஆகும். அன்றைய தினம் சிவாலயங்கள் தோறும் பிட்டுக்கு மண் சுமந்த திருநாளாகக் கொண்டாடுவார்கள்.

**பிட்டு வகைகள்:**

அரிசிமாப் புட்டு
குருக்கன் புட்டு
வெள்ளைப் பிட்டு
கீரைப் பிட்டு
வெங்காயப் புட்டு
பிட்டுக் கலவை
அலுவாப் பிட்டு
ஆலங்காய்ப் பிட்டு
சீனிப்பிட்டு
மணிப்பிட்டு
பாற்பிட்டு
குரக்கன் பிட்டு
ஓடியற் பிட்டு
ஆட்டமாப்பிட்டு
கேழ்வரகுப் பிட்டு
கோதுமைப் பிட்டு

பழங்காலத்தில் பல்வேறு வகையான பிட்டுகள் உண்டாக்கப்பட்டிருந்தின என்பது அறியமுடிகிறது. தற்காலத்தில் கேரள

மற்றும் தமிழ்நாட்டில் அரிசிப் பிட்டும் கோதுமைப் பிட்டுமே அதிகமாக உணவிற்காகப் பயன்படுத்துகின்றனர்.

**2.8.4 இடியப்பம்:-**

தமிழில் ‘இடியாப்பம்’ என்றும் மலையாளத்தில் இடியப்பம் என்றும் கூறுவார்கள். இதுவும் அரிசி மாவினால் தயாரிக்கப்படும் ஒருவகை உணவாகும். இந்த உணவு இந்தியாவில் கேரளா மாநிலத்திலும், இலங்கையிலும் அதிக அளவில் உண்ணப்படுகிறது.

இடி என்பது உரலில் அரிசியை உலக்கையால் இடித்துப் பெறும் மாவாகும். மாவிடித்தல் சங்க காலம் தொட்டே நம்மிடம் இருந்திருக்கிறது.

“இடிகலப்பு அன்ன நறுவடி மாவின் வடிச்சேறு
விளைந்த தீம்பழத் தாரம்” (மலைபடு: 512)

இடித்தல் வினை மாவிற்கு மட்டும் பயன்படுவது அல்ல. மா இடிப்பது போல அவல் இடிப்பதும் உண்டு. இதுவும் உரலில் உலக்கையைக் கொண்டு செய்வதுதான்.

”பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர்
முறித்தும் பாசவல் இடிக்கும் இருக்காழ் உலக்கை”
- (அகம்-14,17,18)

அப்பம் என்பது சற்று குழியான தட்டில் ஊற்றி அப்புவது (அப்புதல்-தட்டையாக்குதல்). இதேபோல அப்பளிக்கும் இன்னொரு பொருள் அப்பளம் ஆனதை இங்கு எண்ணிப் பார்க்கலாம் ‘போட்டு அப்பிட்டாண்டா” என்னும் போது சப்பையாக ஆக்குவதைக் குறிக்கிறோம்.

அப்பம் என்பது நீராவியில் வேகவைத்த உணவுகளின் பொதுவான பெயராகும். (அப்பு என்றால் நீரைக் குறித்த சொல்.) இடித்தல்+இலாத+அப்பம் = இடி+இல் + அப்பம் = இடிலியப்பம் இடிலியப்பமே-> இட்டிலி = இட்லி என்றும் பின்ன சுருக்கமாகப் பெயர் பெற்றது.

இதனடிப்படையில் இடியப்பம் என்பது தமிழ் மலையாள மொழிகளில் பொதுச் சொல்லாகவே காலங்காலமாக இருந்து வருகிறது.

### 2.8.4 அப்பம் / ஆப்பம்:-

ஆப்பம் என்று தமிழகத்திலும் அப்பம் என்று கேரளத்திலும் பயன்படுத்தி வருகின்றனர்.

**அப்ப வகைகள்:-**

வெள்ளை அப்பம்

பாலப்பம்

முட்டை அப்பம்

இதில் வெள்ளையப்பமே இன்று அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். இந்த உணவு கேரளாவில் சற்று அதிகமாகவும், தமிழகத்தில் சற்றுக் குறைவாகவும் காணப்படுகிறது. ஆப்பம் பற்றிய கதைகளும் ஏராளமாக இருப்பதை அறிய முடிகிறது.

### 2.8.5 தோசை:-

தோசை என்பது மலையாளத்தில் 'தோச' என்று அழைப்பார்கள். தமிழ் நாட்டில் தோசை என்பது வடிவத்தில் பெரியதாகவும் கேரளத்தில் சிறியதாகவும் இருக்கும். தோசை என்பது இந்தியாவில்தான் முதன்முதலில் தொடங்கியதாகக் கருதப்படுகிறது. தோசையை, தோசை, தோச சக்குளி என்றெல்லாம் பழங்காலத்தில் அழைத்து வந்தனர்.

**பெயர் தோற்றம்:-**

தோய்தல் என்றால் மாப்புளித்தல், தோய் என்பது தோயை என்றாகி பின்னர்த் தோசை என்றாகியது. தோசைக்கல்லில் வட்டமாகத் தேய்த்துச் செய்யப்படும் உணவுப் பண்டமாதலால் தேய்+செய் என்ற சொற்களே மாறித் தோசை என்றாகியது என்பாரும் உள்ளனர். தோசையின் வகைகள் ஏராளமாக உள்ளன. ஆய்வின் சுருக்கம் கருதி சமகாலத்தில் பயன்படுத்தக்கூடிய வகையைமட்டும் அடையாளம் காட்டப்படுகிறது.

மசாலா தோசை

வெங்காய தோசை

நெய் தோசை(ரோஸ்ட்)

முட்டைத் தோசை

இந்த வகையான தோசைகளே தற்போது அதிகமாக உண்டாக்கப்பட்டுப் பயன்படுத்தி வருகின்றனர்.

### 2.8.6 உப்புமா:-

உப்புமா என்பது தென்னிந்தியாவைப் பூர்வீகமாகக் கொண்டது. உப்புமா இந்தியாவின் பிரபலமான சிற்றுண்டியாகும். உப்பும், மாவும் சேர்ந்த

கலவையே உப்புமா ஆகும். மிகக் குறைவான செய்பொருட்களைக் கொண்ட உப்புமா சுலபமாகத் தயாரிக்கப்படுவதாலும் சிறந்த சுவையுடையதாக இருப்பதாலும் பெரும்பான்மையான மக்களால் விரும்பப்படுகிறது. எழுத்துவழக்கில் உப்புமாவு என்றும் பேச்சுவழக்கில் உப்புமா, உப்பமா என்றும் கூறுவர். கேரள மக்கள் உப்புமாவுடன் பழத்தைச் சேர்த்து உண்பது வழக்கம்.

**மாற்றுப்பெயர்கள்:-**

உப்பிண்டி, உப்பிட்டு, காராபாத், உப்பீட், ருலான்வ

உப்புமா பெரும்பாலும் ரவை கொண்டு செய்யப்படுகிறது. அரிசி ரவை உப்புமா, கோதுமை ரவை உப்புமா, சேமியா உப்புமா, ஜவ்வரிசி உப்புமா, பிரட் உப்புமா, ஓட்ஸ் உப்புமா, இட்லி உப்புமா என பலவகை உப்புமாக்கள் உள்ளன.

**2.8.7 கறி:-**

பொதுவாகச் சோற்றுடன் உண்ணப்படும் குழம்பு, பிரட்டல், பருப்பு, கீரை, மீன்கறி போன்ற பல்வேறு பக்க உணவுகளைக் குறிக்கிறது. ஆங்கிலத்திலும் இது கறி(curry) என்றே கூறப்படுகிறது. இந்தச் சொல் தமிழில் இருந்து ஆங்கிலத்துக்குப் போன ஒரு சொல். கறி என்று சொல்வது தமிழில் அருகிய வழக்காகவும், மலையாளத்தில் முதன்மைச் சொல்லாகவும் பயன்படுகிறது. (wikipedia)

‘‘கறி’’ எனும் தமிழ்சொல் ஆங்கிலத்தில் மட்டுமின்றி இன்று உலகளாவிய நிலையில் பல்வேறு மொழிகளிலும் பயன்படும் ஒரு சொல்லாகும். இந்தக் ‘கறி’ எனும் உணவு பதார்த்தம் தமிழர்களின் அன்றாட உணவில் பிரதான இடம் வகிப்பதாகும். இந்தக் ‘‘கறி’’ அடுப்பில் வேகவைத்துப் பெறப்படுபவற்றை குறிக்கிறது.

மேலும் தமிழில் ‘கறி’ என்றால் விறகு கறியையும், விலங்குகளின் மாமிசத்தையும் ‘கறி’ என்று, அழைப்பார்கள். மலையாளத்தில் ‘கறி’ என்பதற்குச் சமமாக ‘இறைச்சி’ என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

கறி என்பதற்குத் தமிழில் மாமிசம், இறைச்சி, புலால் அசைவம் என்ற பொருளுண்டு.

### 2.8.8 பூரி:-

பூரி என்ற பெயர் சமஸ்கிருத வார்த்தையான 'புரிகா' என்பதிலிருந்து பெறப்பட்டது. இதன் அர்த்தம் 'நிரப்பப்பட்ட' என்பதாகும். இது தெற்காசியாவின் பெரும்பாலான மொழிகளில் ஒத்த பெயரிலேயே அழைக்கப்படுகின்றன ஆனால் தமிழ் மற்றும் மலையாளத்தில் உச்சரிப்பில் வேறுபடுகின்றன.

பூரி-பூரித்தல் என்ற வினை மூலம் வட்டமாகத் தேய்க்கப்பட்ட மாவானது கொதிக்கும் எண்ணெயிலிட்டதும் பெரிதாக உப்பி பூரிக்கிறது.

(எ.கா)

பூரணம் - முழுமை

பூரணமை - முழுநிலவு

பூரிப்பு, பூரித்தல் ஆகியன மூலம் பூரி என்ற சொல் உருவானது. இது போன்று ஏராளமான உணவு பொதுச்சொற்கள் ஒன்றுபட்டு இருப்பதை ஆய்வின் வழி அறியமுடிகின்றன. காலங்காலமாக ஒன்றுபட்டு உச்சரித்து வந்த பொதுச்சொற்கள் நிலத்தையும், மொழியையும் அடிப்படையாகக் கொண்டு தனி மாநிலமாகப் பிரிக்கப்பட்டபோது சூழலுக்கு ஏற்ப சிற்சில மாற்றங்கள் சொற்களின் உச்சரிப்பில் காணப்படுகின்றன. மற்ற நிலைகளில் ஒன்றுபட்டு இருப்பதையே காணமுடிகின்றன.

## தொகுப்புரை

தமிழ் மலையாளப் பேச்சுவழக்கில் பொதுச்சொற்களும் சொற்பொருளாய்வும் என்னும் இரண்டாவது இயல் தமிழ், மலையாள பொதுச்சொற்களை எடுத்துரைக்கிறது. இரண்டு மொழிகளிலும் பொதுவான சொற்கள் எல்லாத்துறையிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. இதன் காரணமாகக் கேரளா மாநிலத்தில் அமைந்துள்ள ஊர்பெயர்கள், இடப்பெயர்கள், மானுடப் பெயர்கள், பழங்காலந்தொட்டு ஒன்றுபட்டு வருவதைச் சேர அரசர்கள் வழியாக இவ்வியல் ஆராய்கிறது.

ஐம்பூதங்களான (நிலம், நீர், காற்று, தீ, வானம் எல்லாம் உலக மக்களுக்கு ஒன்றுபட்டாலும் இவற்றின் சொற்கள் தமிழ் மலையாள மொழிகளில் பொதுச்சொல்லாகவே பயன்பட்டு வருகின்றன என்பதை இவ்வாய்வில் அறியலாம்.

தமிழ் மலையாள மொழிகளில் விலங்குச்சொற்கள், காலங்காலமாகச் சொல்லும், பொருளும் ஒன்றுபட்ட பொதுச்சொல்லாகக் காணப்படுகிறது. சில சொற்கள் உச்சரிப்பில் மட்டும் மாற்றமடைந்து இருப்பதை இவ்வியல்

ஆராய்கிறது. மேலும் சொற்கள் காலப்போக்கில் மாற்றமடைந்து மலையாள மொழியில் வேறொரு பொருளைத் தருவதைச் சொற்பொருள் வாரியாக விளக்குகிறது.

இறுதியாக மனிதனின் உயிர்நாடியாகத் திகழக்கூடிய உணவு வகைகள் பயன்படுத்தும் முறையில் மாற்றமடைந்திருந்தாலும் இரண்டுமொழிகளிலும் பொதுச்சொல்லாகவே காணப்படுகின்றன. ஒவ்வொரு சொல்லும் எவ்வாறு பெயர்பெற்றது என்பதையும் இவ்வியல் விரிவாக ஆராய்கிறது.

# இயல் - 3

# தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்களும் அதன் தன்மைகளும்

கருத்துப்பரிமாற்றக் கருவியாக விளங்கும் மொழி தனிமனிதன், வட்டாரம், துறை, காலம், இடம் எனும் அடிப்படைகளில் வேறுபடுவதைப் போலவே சமுதாய வளர்ச்சி, பிறமொழி தாக்கம் ஆகியவற்றின் காரணமாகவும் புதவகைச் சொற்களைப் பெற்றுத் தொடர்ந்து, வளர்ந்தும் மாறியும் வரும் இயல்பினது. இந்தக் காரணங்களால் குறிப்பிட்ட காலம் சார்ந்த மொழி, பிறிதொரு காலம் சார்ந்தவருக்கும் குறிப்பிட்ட வட்டாரம் சார்ந்த மொழி, பிறிதொரு வட்டாரம் சார்ந்தவருக்கும் குறிப்பிட்ட துறை சார்ந்த மொழி, பிற துறை சார்ந்தவருக்கும் புரியாத பொதுமக்களுக்கும் சொற்றொகுதிகளைக் கொண்டதாக அமைந்துவிடுவது இயல்பு. தனி மனித மொழி காலந்தோறும் மாறியும் வளர்ந்தும் வருகையில் அது பிறிதொரு தனிமனிதரின் மொழியிலிருந்து வேறுபட்டதாகவும் மாறுட்டதாகவும் பயன்பாட்டு நெறிமுறைகளில் தனித்தன்மை வாய்ந்ததாகவும் அமைகின்றன.

மொழி மனித சமுதாயத்தை இணைக்கும் ஓர் ஒழுங்கான அமைப்பாகும். அந்த அமைப்பு ஒலிக்குறியீடுகளை அடிப்படையாகக் கொண்டது. ஒலி குறியீடுகளை நாம் சொற்களாக்கிக் கொண்டோம். சொல்லுக்கும் அது உணர்த்தும் பொருளுக்கும் தொடர்பு இல்லை. அனால் சொற்களுக்குப் பொருட்களைக் கற்பித்துக் கொண்டோம். மொழியைப் பேசுகின்ற மனிதன் பழக்கத்தால் சொல்லின் பொருளை அறிந்து கொள்கிறான். எனவே எந்த ஒரு மொழியும் ஒலியால் தான் உருவாகின்றன சிறப்படைகின்றன.

ஒலியின் வடிவமே பேச்சுமொழியாகவும், பேச்சுமொழியின் அடையாளமே எழுத்துமொழியாகவும் காட்சியளிக்கின்றன என்பதை அறியமுடியும்.

## 3.1 தமிழ் மலையாளமும், ஒலியொற்றுமையுடைய சொற்களும் :

மொழி மாறாமல் ஒரேநிலையில் இருப்பதில்லை. காலப் போக்கில் மாறுகிறது. ஒவ்வொரு மொழியிலும் வரிவடிவில் உள்ளதையே பெரும்பான்மை மக்கள் மொழி எனக் கருதுவதால் மொழியில் உண்டாகின்ற மாற்றங்களை அவர்கள் அறிந்துகொள்வதில்லை. பேச்சுமொழியை எழுதப்படும் மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இம்மாற்றங்களை எளிதில் கண்டுகொள்ளலாம். மொழியில் இலக்கணச் சொற்கள், ஒலி

இவற்றிற்கெல்லாம் மாற்றங்கள் ஏற்படலாம். ஆனால் பெரும்பான்மை மாற்றங்கள் ஒலிகளிலேயே நிகழ்கின்றன. ஒருவர் ஒரு மொழி பேசுவது என்பது இயல்பான ஒன்று. ஒருவரே பல மொழிகளில் பேசுதல் என்பது அவர்களுடைய கலாச்சாரப், பண்பாடு, நிலவியல் போன்ற கூறுகள் காரணமாக அமைகின்றன. பல நாடுகளில் ஒரு மொழி பேசுதலும் ஒரு நாட்டில் பல மொழி பேசுதலும் உலகியல் அடிப்படை. இரு மொழி பேசக்கூடியவர்கள் நில அமைப்பு முறையிலும். வணிகத்தின் பொருட்டும் இன்னும் பிற அடிப்படைக் காரணங்களாலும் இரு மொழியிலும் பயிற்சி உடையோர் ஆகின்றனர் (Billunguals). இது போன்ற பன்மொழி அறிஞர்களாகவும் மாற இந்தக் காரணிகள் முக்கிய காரணங்களாகத் திகழ்கின்றன. இந்நிலை மட்டுமல்லாமல் அரசியல், வாணிபம், தொழில், சமயம், படைச்செலவு, கல்வி முதலானவற்றால் பல மொழியினர் கலந்து வாழும் சூழ்நிலையும் ஏற்படும், இதனால் மொழிகள் பல நிலைகளில் கலப்படையும், கடன்பெறும், இருமொழிச் சாயல் இயல்பாக ஏற்படும் என்பது பொதுவான கருத்து. அவை பல நிலைகளில் வேறுபட்டும் காணப்படும். அதாவது குழந்தைகள், முதியவர்கள், இளைஞர்கள், பெண்கள், ஆண்கள் போன்ற அடிப்படையிலும் வயது அடிப்படையிலும், மதங்கள், ஜாதிகள் படித்தவர், படிக்காதவர்கள் இன்னும் இதுபோன்ற பல காரணங்களால் அந்தந்த நிலைகளுக்கு ஏற்ப மொழிகலப்பு ஏற்படும். இவை எல்லா மொழிகளுக்கும் பொருந்தும்.

கேரளா, தமிழ்நாடு என்ற இரண்டு மாநிலங்களும் திராவிடமொழியிலும், திராவிட நாடு என்ற அடிப்படையிலும் மிக நெருங்கிய தொடர்புடையது. இவ்விரு மாநிலங்கள் சேர, சோழ, பாண்டியர் ஆட்சி காலத்திலேயே எல்லா நாடுகளுடனும் எல்லைப் பங்கு வைத்துத் தொடர்பு கொண்டிருந்தது. சேரநாடு என்றாலே கொச்சி முதல் கரூர், கொங்கு பிரதேசம் முழவதும் பரவியிருந்தது என்பது இலக்கியங்கள் வாயிலாகவும் காப்பியங்கள் வாயிலாகவும் அறிய முடியும்.

இவ்விரு நாடுகளும் பழங்காலந்தொட்டே சொற்களையும், கலாச்சார பண்பாட்டையும் நிலம், நீர் போன்ற அத்தியாவசிய அடிப்படைத் தேவைகளையும் வழங்கிக் கொண்டு தாயும், சேயும் போல விளங்குகிறது என்பதற்குப் பல உதாரணங்களைக் கூறமுடியும். இந்த அடிப்படையில் பார்க்கும் போது தமிழ் மலையாள பேச்சுமொழியில் ஏராளமான ஒலியொற்றுமையுடைய சொற்கள் கலந்துள்ளன. அவற்றைத் தமிழ் மற்றும்

மலையாள மொழி மிகுதியாகப் பேசக்கூடிய கேரளத்தின் மாவட்டங்களான இடுக்கி, பாலக்காடு மற்றும் திருவனந்தபுரம் போன்ற பகுதிகளைக் கள ஆய்விற்காக எடுத்துக்கொண்டு அங்கு நிகழும் பேச்சில் ஒவ்வொருச் சூழலிலும் ஏற்படக்கூடிய மாற்றத்தை (மொழியில்) வகைப்படுத்துவதே இவ்வியலின் நோக்கம். இவ்வாய்வில் மிக அதிகமாகத் தமிழ்பேசக்கூடிய பகுதி என்பது இடுக்கிமாவட்டம். இம்மாவட்டத்தில் 1. தேவிகுளம், 2. உடுமன்சோலை, 3. பீரிமேடு (பீருமேடு) போன்ற (தாலுக்) வட்டத்தில் அதிகமாக தமிழ் பேசக்கூடிய மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இரண்டாவதாகப் பாலக்காடு மாவட்டத்தைக் கூறலாம். பாலக்காடு மாவட்டத்தில் சித்தூர் (தாலுக்) வட்டத்தில் தமிழ் பேசக்கூடிய மக்கள் அதிகமாக இருக்கின்றனர். வேறு சில பகுதிகளான கொடுவாயூர், கொல்லங்கோடு, மன்னாக்காடு போன்ற பகுதிகளிலும் தமிழர் தமிழ் பேசி வருகின்றனர். மூன்றாவதாகத் திருவனந்தபுரம் மாவட்டத்தில் உள்ள பாறசாலை என்ற (தாலுக்) வட்டத்தில் அதிகமான தமிழ் மக்கள் தமிழ் பேசி வாழ்ந்து வருகின்றனர். கேரளா மாநிலத்தில் இந்த மூன்று மாவட்டங்கள் அல்லாமல் கொல்லம், வயநாடு, பத்தனம்திட்டா போன்ற மாவட்டங்களிலும் குறுகிய அளவில் தமிழ் பேசக்கூடிய மக்கள் வாழ்கின்றனர். இந்த ஆறு மாவட்டங்களுக்கும் பொங்கல், தீபாவளி போன்ற பண்டிகைக்கு அரசு விடுமுறையை அளிக்கிறது. ஆனால் ஆய்வின் எல்லையைக் கருதி மிகுதியாகத் தமிழ் பேசக்கூடிய மூன்று மாவட்டங்களை மட்டும் எடுத்துக்கொண்டு ஒலியொற்றுமையுடைய சொற்கள் ஆராயப்பட்டுள்ளன. இம்மூன்று மாவட்டங்களிலும் பலவிதமான மாற்றங்கள் தற்கால பேச்சுமொழியில் காணப்படுகின்றன. இம்மாவட்டங்களில் வாழக்கூடிய சிறுவர் முதல் முதியவர் வரை பேசக்கூடிய மொழியில் இருமொழி கலப்பு இயல்பாகக் காணப்படுகின்றன.

இருமொழி கலப்பு எழுத்து, சொல், பொருள் அடிப்படையில் மாற்றம் ஏற்படுகிறது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது எழுத்தை ஆய்வு செய்வது என்பது சிக்கலான ஒன்று. இரு மொழியிலும் எழுத்து வடிவம் வேறு வேறு என்பதும் கூட இதற்கு ஒரு காரணமாகும். அதனால் எழுத்து அடிப்படையில் ஒலியொற்றுமையுடை சொற்களைத் தேர்வு செய்வது என்பது கடினமான ஒன்று.

இவ்வாய்வில் ஒலியொற்றுமையுடைய சொற்களைத் தேர்வு செய்வதில் ‘சொல்’ முக்கிய காரணியாகத் திகழ்கிறது. காரணம் தொல்காப்பியர் கூற்றுப்படி

‘‘எல்லா சொல்லும் பொருள் குறித்தனவே’’

-(தொல்-சொல்-155- சேனா).

தொல்காப்பிய உரியியலில் தற்காலத்தில் கட்டமைக்கப்படும் அகராதிகளில் பொருள் உணர்வதற்குக் கடினமாக அமைந்த சொற்கள் வெளிப்படையாகப் பொருள் தெரியும், அனைத்துச் சொற்களும் அகராதிச் சொற்களாக lexical unit இடம்பெறும். ஆனால் தொல்காப்பியம் காலச் சூழலில் அகராதி என்னும் கருத்தாக்கம் கடினச் சொற்களுக்கு மட்டும் பொருள்தருவதாய் இருந்துள்ளது என்ற பெ. மாதையனின் கருத்து இங்கு ஒத்து நோக்கத்தக்கது (2014:13)

‘‘வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன’’

- (தொல்-சொல்-298-சேனாவரையர்)

### 3.1.1 ஒப்புருச் சொற்கள் இனம் பிரித்தல் :

‘‘தடவுங் கயவும் நளியும் பெருமை

- (தொ-சொ-320-சேனா)

இவற்றுள்

தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்-(சொல்-321 சேனா) கயவன் கிளவி மேன்மையும் ஆகும்-(சொல்-322-சேனா) தொல்காப்பிய உரியியலில் அமைந்துள்ள மேற்கண்ட நூற்பாக்களில் முதல் நூற்பா தட, கய, நளி என்ற மூன்றும் பெருமை என்னும் பொருளுடையன என்று விளக்குகிறது. இரண்டாம் நூற்பா ‘தட’ என்று சொல்லுக்குப் பெருமை என்பதனோடு தொடர்பில்லாத ‘கோட்டம்’ என்னும் பொருள் உள்ளமையைக் காட்டுகிறது. அது போலவே ‘கய’ என்ற சொல்லுக்கும் பெருமை என்பதனோடு தொடர்பில்லாத ‘மென்மை’ என்னும் பொருளும் உள்ளமை அதற்கடுத்த நூற்பாவழிப் பெறப்பட்டுள்ளது. தொடர்ந்து ‘நனி’ என்ற சொல் உணர்த்தும் ‘செறிவு என்ற பொருளும் தொகுக்கப்பட்டுள்ளது. தட, கய, நளி என்ற சொற்கள் உணர்த்தும் வெவ்வேறு வகை பொருள்களை ஒரே நூற்பாவில் வைக்காது பிரித்து வைத்துள்ளமை ஒப்புருச் சொல் பகுப்பாகக் கொள்ள இடமளிக்கிறது.

இவ்வாறு ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் நிரந்தரமானது இல்லை என்பதை இவை உணர்த்துகின்றன.

### 3.1.2 தமிழ் மலையாள பொருள் ஒற்றுமையுடைய சொற்கள்.

தமிழ் மலையாள மொழிகள் திராவிட குடும்பத்தைச் சார்ந்த திராவிட மொழிகள் என்பதால் இரண்டு மொழியிலும் உள்ள சொற்கள் ஒன்றுபட்டு இருப்பதைப் போன்று இவ்விரு மொழியின் பொருளும் பல நிலைகளில் ஒத்துப் போவதைக் காணமுடிகிறது. இந்த நிகழ்வு பழங்காலந்தொட்டே நிகழ்ந்து வருகின்றன என்பதை அகராதி போன்ற நோக்கு நூற்களை வைத்து உணர முடிகின்றன.

1. தமிழ் காற்று (பெயர்) 1. உலகில் உள்ள உயிரினங்கள் உயிர்வாழ சுவாசிக்கும், பூமியைச் சுற்றி நிறைந்திருக்கும், கண்ணுக்குப் புலப்படாத வாயுப் பொருள்: air; wind, influence,

(எ.கா) அவர் காற்று உனக்கும் அடித்துவிட்டதா? (1992;410)

மலையாளம் -காற்று (பெயர்) - 1. சலிக்குந்ந வாயு, வாயுவின்றே சலனம், பஞ்ச பூதங்களில் ஒன்று, சுவாசம், பிராணன் சப்ததாராவலி – (2010;566)

**2.** தமிழில் விதி - பெயராகவும், வினையாகவும் வரும்

விதி[1] – (பெயர்) - கட்டணத்தை அதிகார பூர்வமாக அறிவித்தல்

விதி[2] – (வினை) - மனிதனால் மாற்ற முடியாத நியதி. ஊழ்
(எ.கா) விதியை மதியால் வெல்லலாம் (1992;1258)

மலையாளம் - விதி-(பெயர்)-தலயெழுத்து, தெய்வகல்பிதம், நியமம், சட்டம் ஒருக்கம், நியாயதிபண்டெ திருமானம், சிருஷ்டி (2010: 1768)
எ.க : அயோத்யா விதியை ஸ்வாகதம் செயயுந்நு

இவ்வாறு தமிழ் மலையாள மொழிகளில் பொருள் ஒன்றுபடுவதை ஏராளமாகக் காணமுடியும்.

### 3.1.3 பேச்சுமொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்களும், பொருள் வேற்றுமையும்:

எல்லையோர மாவட்டங்களான இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற பகுதிகளில் வாழக்கூடிய மக்கள், அவர்கள் பேசும்போது மொழியில் ஒலியொற்றுமையுடைய சொற்கள் இருந்தாலும் கால மாற்றத்தினால் ஏராளமான சொற்கள் பொருள் மாற்றம் நிகழ்ந்திருக்கின்றன என்பதைக்

காணமுடியும். அதாவது ‘தை’ என்ற சொல்லை எடுப்போமானால் இந்தச் சொல் மூன்று மாவட்டங்களிலும் வாழக்கூடிய தமிழர்கள் (தை-என்றால்) சூழலுக்கு ஏற்றாற்போல் பொருளை வழங்கி வருகின்றனர். அதாவது பெயராக வரும்போது தை என்றால் மாதத்தையும், வினையாக வரும்போது துணியைத் தைத்தல் என்ற பொருளிலுமே வழங்கி வருகின்றனர். இந்தப் பயன்பாடு இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மூன்று மாவட்டங்களிலும் ஒரே மாதிரியாக வழங்கி வருகின்றனர். தமிழ் லெக்ஸிகன் போன்ற பழமையான அகராதியில் ‘தை’ – என்றால் சிறிய செடி என்ற பொருள் 5-வது பொருளாக இருந்து வந்தது. ஆனால் க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் இந்தப் பொருள் இல்லாமல் இருப்பதைக் காண முடிகின்றன.

மலையாளத்தில் ‘தை’ என்றால் வினையாக மட்டும்தான் வருகின்றது ‘தை’ என்பதற்குச் சிறிய செடி என்ற பொருளையே கேரளா முழுவதுமாக வழங்கி வருகின்றனர். குறிப்பாகக் கூற வேண்டுமானால் தமிழில் தை மாதம் என்பது 10-வது மாதமாகவும் கேரளாவில் 6-வது மாதமாகவும் (மகர மாசம்) வரிசைப்படுத்தப்பட்டுள்ளனர். கேரளத்தில் காலத்தை அறிய கொல்லம் ஆண்டு முறையைப் பயன்படுத்தி வருகின்றனர். இதை மலையாள ஆண்டு என்றும் அழைப்பர்.கி.பி 823ல் இந்த ஆண்டு தொடங்கியதாக நம்புகின்றனர். இந்த மகரமாதத்தின் தொடக்கம்தான் சபரிமலையில் ஐயப்பவிளக்கு, மகர விளக்கு என்ற சொல்லக்கூடிய ‘மகரஜோதி’யாகக் கொண்டாடுகின்றனர். இதே மாதத்தைத்தான் வடஇந்தியாவில் ‘மகர சங்ரமம்’ என்று கொண்டாடி வருகின்றனர் (சூரியன் இடம் பெயர்வகை குறிப்பது)

தமிழில் ‘தை’ என்பது தமிழர்களுக்கு மிகவும் முக்கியமான மாதங்களுள் ஒன்று. காரணம் நமது நாட்டில் பொதுவாக எந்த ஒரு நல்ல செயலையும் தைமாதத்தில் தொடங்குவதுதான் வழக்கம். ஆடி மாதத்தில் விதைத்த நெல்லானது தை மாதத்தில்தான் அறுவடை செய்யப்படுகிறது. எனவே இது அறுவடை மாதம் என்று அழைக்கப்படுகிறது. இம்மாதத்தில்தான் அறுவடையால் மகிழ்ச்சி மிகுந்த மக்கள் தங்கள் கடவுள்களுக்கு நன்றி தெரிவிக்கும் விதமாக இம்மாதத்தில் பல்வேறு விழாக்களைக் கொண்டாடுகின்றனர். பல்வேறு வழிபாடு முறைகளும் இம்மாதத்தில் பின்பற்றப்படுகின்றன. இம்மாதத்தைத் ‘தமிழர்’ திருநாளாகத் தமிழர்கள் வாழும் பல நாடுகளிலும் கொண்டாடி வருகின்றனர்.

தை – (பெயர்) - தை பிறந்திருச்ச இனி வழி பிறந்திடும்

தை – (வினை) - துணியை வேகமாகத் தை என்றாள் அக்கா

தை என்பதற்கு க்ரியா அகராதி தரும் விளக்கம்

தை[1] - துணி, துணியைத் தைப்பது

- உண்டாக்குதல்
- அம்பு, முள் போன்ற கூரிய நுனியை உடைய பொருள்
- இணைத்தல்

தை[2] பத்தாவது தமிழ் மாதத்தின் பெயர் (2008 : 769)

**மலையாள பொருள்:**

தை[1]

- இளம், சிறிய, அழகுள்ள
- பூத்துக் காய்க்குந்நதினு முன்புள்ள விருக்ஷம்
- மகரமாசம்

தை[2] - இளம் ப்ராயத்திலுள்ள தெங்கு

(எ.கா)- ஜீன் - 5-நு தை நடனம்

இவ்வாறு தமிழ் மலையாள மொழிகளை ஒப்புமைச் செய்து பார்க்கும்போது 'தை' என்பதற்குச் செடி என்ற பொருள் பழங்காலத்தில் தமிழில் இருந்து இருக்கிறது. அது அருகிய வழக்காகப் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். மலையாளத்தில் 'செடி' என்ற பொருளில் முதன்மைப் பொருளாகவும், 'இளம' ப்ராயத்திலுள்ள 'தெங்கு' என்ற புதுப்பொருளையும் மலையாள அகராதியின் வழி காணமுடிகிறது.

### 3.1.4 விடை :

வினை, பெயர் என்ற இரண்டுநிலைகளிலும் தமிழில் வரும். தமிழில் விடை என்ற சொல் விடயம் அதாவது பதில் (answer) என்ற பொருளில் பெரும்பாலும் பயின்றுவருவதைக் காணமுடியும். விடை என்ற சொல் தமிழைப் பொருத்தவரையில் விடைத்தல், புடைத்தல் மற்றும் தற்காலமாக ஒரு நிலையிலிருந்தோ, ஒரு செயல்பாட்டிலிருந்தோ, ஒரு நிகழ்ச்சியிலிருந்தோ தற்காலமாக விடைபெறுவதைக் குறிக்கிறது. இத்தகைய நிலை பேச்சுவழக்கிலும் இன்றுவரைக் காணமுடிகிறது. இதே சொல் சூழற்கொள்கையைப் பொருட்டு மாணவர்கள் மத்தியில் ஆசிரியர் கூறும்போது 'விடை சொன்னார்' என்றால் கேள்விகளுக்குப் பதில் கொடுத்தார் என்றும், மேடை பேச்சின் போது 'விடை பெற்றார்' என்றால் மேடையில் பேசிக்

கொண்டிருந்தபோது இடையில் அக்கூட்டத்தை விட்டுச் சென்றார் என்ற நிலைகளில் பொருள் அமைகின்றது. தமிழைப் பொறுத்தவரையில் ‘விடை’ என்ற சொல் மேடைப் பேச்சுகளில்தான் அதிகமாகப் புழக்கத்தில் இருப்பதைக் காணமுடியும்.

விடை என்ற சொல் இலக்கியங்களில் பல இடங்களில் பயிற்று வருகிறது என்றாலும் பொரும்பாலும் விடை-பதில் என்ற பொருளையே உணர்த்துகிறது. தொல்காப்பியம் - (பொருள் - 393) நூற்பாவில் விடை என்பதற்குச் சொல்லுதல் என்ற பொருளில் அமைகிறது.

தற்கால க்ரியா அகராதி விடை என்பதற்கு

விடை[1] (வினை) - பேச்சுவழக்கு

(விடைக்க, விடைத்து) 1. புடைத்தல் அல்லது (மூக்கைப் புடைத்தல்)

2. கோபத்தால் மூக்கு விடைத்தது

3. இரண்டு வார்த்தை புகழ்ந்து சொன்னால் விடைத்துக் கொள்வான்

விடை[2] (பெயர்) - (கண்டறிந்து வெளிப்படுத்தும்) முடிவு; அவன் போட்ட விடுகதைக்கு என்னால் விடை சொல்ல முடியவில்லை

உங்கள் வினாவிற்கு என் விடை இதுதான் என்ற நிலைகளில் பொருள் அமைகின்றன என்பதைத் தற்கால அகராதிகளின் மூலம் அறியமுடியும். (2008; 1256) இதே சொல் தமிழக மற்றும் கேரள எல்லையோர மாவட்டங்களான இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற இடங்களிலும் பொது வித்தியாசத்தைக் காணமுடியவில்லை என்பதைப் பேச்சு வழக்கின்போது உணரமுடிகின்றன.

(எ.கா.) என் விடுகதைக்கு விடை தெரியுமா

விடை தெரியாம முளிக்கிறான்

என்ற நிலைகளில் பயன்படுத்தி வருகின்றனர்- இதில் விடுகதைக்கு விடை சொல்வது என்பது காலங்காலமாக இதே பொருளில் தான் எழுதியும் பேசியும் வருகின்றனர் என்பதை இலக்கியம் மற்றும் பேச்சுவழக்கு மூலம் காணலாம்.

மலையாளத்தில் ‘விடை’ என்ற சொல் மலையாளிகளுக்குத் தவிர்க்க முடியாத சொல்லாகப் பேச்சு வழக்கில் பயன்பட்டு வருகிறது என்பதை அவர்களுடைய பயன்பாட்டின் வழி அறியமுடியும். அதாவது தமிழில் அதிகமாகப் பயன்பட்ட பொருளான ‘தற்காலமாக விடை பெறுவது’

புடைத்தல் போன்றவை மலையாளத்தில் சில குறிப்பிட்ட இடங்களில் மட்டும் பயன்படுத்தி வருகின்றனர். ஆனால் ‘விடை’ என்பதற்கு நீத்தார், இவ்வுலகை விட்டு மறைந்தார், இறந்தார், இறைவனோடு சேர்ந்தார் என்ற பொருளிலும் பயன்பட்டு வருகின்றன. அதாவது ‘கவியத்ரி வடவாங்கி’ என்றும் சுகிதகுமாரி விட பறஞ்ஞு’ என்றெல்லாம் மலையாள பேச்சு வழக்கில் பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணலாம். விடை என்ற சொல்லிற்கு மலையாள அகராதியான சப்ததாராவலி கூறும் பொருள் விளக்கம்.

விடை[1] - (பெயர்) - 1. யாத்ரானுவாதம், போகானாயி வாங்குந்ந, அனுவாதம்,

2. யாத்ரபறயல், விட கொள்ளுக

விடை[2] - (பெயர்) - விடவு

தமிழ் மொழியில் விடை என்பது பெயர் மற்றும் வினை வடிவங்களைப் பெற்றுவருகிறது. மலையாள மொழியில் இச்சொல் பெயரில் மட்டும் பயன்பட்டு வருகிறது. தமிழ் மலையாள மொழிகளில் ஒரு சொல் பல பொருள் தரக்கூடிய சொல்லாகவும் விளங்குகிறது. மலையாள மொழியில் ‘ஐ’ காரம் மொழிக்கு முதலிலும், இடையிலும் மட்டும்தான் இடம்பெறும், இறுதியில் இடம்பெறாது என்பதை’விட’ என்ற சொல் உணர்த்துகிறது. விடை என்ற சொல் இருமொழி சமூகத்திலும் பெரும்பான்மையாகப் பேசி அகராதிகளில் இடம்பெற்றிருக்கிறது என்பதை முதற்பொருளாக வருவதை வைத்து உணர முடியும்.

**3.1.5 மடி - (வினை)**

‘மடி’ என்னும் சொல் தற்கால தமிழ் மற்றும் மலையாளத்தில் ஒலியொற்றுமையுடைய சொல்லாகக் காணப்படினும் பொருள் வேறுபாட்டில் மாற்றம் உடையதாகும். தமிழில் ‘மடி’ என்றால் மடித்தல், மடக்கு என்னும் செயலைக் குறிக்கின்றன. அதாவது பேப்பரை மடித்தல், வேட்டியை மடக்கிக் கட்டுதல், பாயை மடக்கி வை, என்ற தொடர்நிலையில் மடி என்னும் சொல் ஏதாவது ஒரு பொருளை முழுமையாக மடித்து வைக்க என்னும் பொருளில் வருகிறது. பொருள்களை அடிப்படையாக்கிக் கொண்டே பொருள் நிலையில் ‘மடி’ என்னும் சொல் பயன்பாட்டில் உள்ளது.

மலையாள மொழியில் ‘மடி’ என்னும் சொல் முற்றிலும் வேறுபட்ட பொருளான ‘சோம்பேறி’ சுறுசுறுப்பில்லாதவன், என்னும் பொருளைக் குறிக்கிறது. அதாவது ‘எனிக்கு பயங்கர மடியா’, ‘அவனு பயங்கர மடியா’

என்றவாறு மலையாள மொழியில் சாதாரணமாகப் பயன்பாட்டில் உள்ளவையாகும். இவ்விரு மொழிகளிலும் ‘மடி’ என்றால் ‘தாயின் மடி’ என்ற பொருளிலும் பயன்படக்கூடிய நிலை இருக்கிறது. இவ்வாறு இருமொழியிலும் வழங்கும் மடி என்ற சொல்லின் பொருள் மாற்றத்திற்கான காரணங்களையும், பொருள் மாற்றத்தையும் ஆராய வேண்டிய அவசியத்தை உணர்த்துகிறது. சங்க இலக்கியத்தில் ‘மடி’ என்னும் சொல் பல இடங்களில் பயின்று வருவதைக் காணலாம் . உதாரணமாக

(எ.கா)

அவன் மடிமேல் வலந்தது பாம்பு

பரி-(4-43)

மடியிலான் செல்வம் போல் மரன் நந்த – அச்செல்வம்-

கலி-(35-1)

துறை போகு அறுவைத் தூ மடி அன்ன

நற்றி-(70-2)

இங்கு பரிபாடலில் - மடி என்பதற்கு வயிறு

கலித்தொகையில் - மடி - சோம்பல்

நற்றிணையில் - மடி - புதியது,

மடி - என்பதற்குச் சங்க இலக்கியத்தில் உள்ள ஒவ்வொரு நூலிலும் பொருள் மாறுபடுவதை அறியமுடியும். சமகாலத்தில் உள்ள க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் ‘மடி’ என்பதற்கு 5 விதமான பொருள்களை முன்வைக்கிறது.

1. மடி (வினை) – (உ.வ) 1. உயிர் இழத்தல் இறத்தல்
(மடிய, மடிந்து) (தாவரங்கள்) அழிதல், நாசமாதல்
2. (செத்து, மாண்டு ஆகிய வினையெச்சங்களோடு இணைந்து வரும்போது) வீழ்தல்
(எ.கா) 1. பஞ்சத்தால் மாண்டு மடிகின்றனர்.

2. மடி (வினை) – படிதல், மடங்குதல்
(மடிய, மடிந்து) போர்வையை மடித்திருந்தனர்

3 மடி (வினை) நீண்டிருக்கும் அல்லது விரிந்திரிருக்கும் ஒன்றை
(மடிக்க, மடித்து) அதன் மீதாகவே படியும்படி செய்தல்
(தாளை நான்காக மடித்து வெட்டு)

4. மடி (பெயர்) 1. தொடைப்பகுதி, வயிற்றுக்குக் கீழ் பகுதி

2. பை போன்று இழுக்கப்படும் இடுப்பு ஆடைப் பகுதி

3. பசு, நாய் போன்ற பாலூட்டி வகைப் பெண் விலங்குகளுக்கு வயிற்றின் கீழ்பகுதி காம்புகளுடன் தொங்கும் உறுப்பு

5. மடி (பெயர்) (சமூக வழக்கு)

1. (குளித்து விட்டு, துவைத்த ஆடை அணிந்து) பிறரால் தொடப்படாமல் இருப்பதால் பெறுவதாக நம்பப்படும் சடங்கு ரீதியான தூய்மை

தமிழ் மொழியில் ’மடி’ என்னும் சொல் பேச்சுவழக்கு இலக்கிய வழக்கு, அகராதி வழக்கு என்ற நிலைகளில் ஒப்பு நோக்கும்போது பலவிதமான பொருள்களை முன்வைக்கிறது. ஓவ்வொரு பொருளும் காலம், நேரம், சூழல், பயன்பாடு, இடம், போன்ற பல்வேறு காரணங்களால் ஒரு பொருள் வழக்கற்றதாகவும், ஒரு பொருள் பெருவழக்காகவும் நிலைப் பெற்று இருக்கிறது என்பதைக் காரணங்களாகக் கூறமுடியும்.

மலையாள சப்ததாராவலி அகராதியில் ‘மடி’ என்னும் சொல்லுக்கு ஏழு பதிவுகளைத் தருகின்றன.

**மடி - (பெயர்)**

1. மனசுகேடு, வேலை செய்யான் கழியுகயில்லெந்நுள்ளபாவம், அலசத,
2. உத்சங்கம்(ரெண்டு தடியுடெயும் முன்பாகம்)
3. சம்சயம்
4. லஜ்ஜ
5. வஸ்தரம் தரிக்கும்போல் இளியில் நிந்நு வெளியிலேகிடக்குந்ந தும்பு
6. மடக்கு, மடங்க,
7. அகிடு(பழமொழி) மடி குடி கெடுக்கும், மடியில் கனமுண்டெங்கிலே வழியில் பயமுள்ளு (2010;1533)

தமிழ் மலையாள அகராதிகளைப் பார்க்கும்போது மடி என்பதற்குத் தற்கால க்ரியா அகராதியில் காணப்படாத பொருளான “சோம்பேறி’ என்ற பொருள் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது. சங்க இலக்கியச் சொற்கள் மலையாள மொழிக்கு வரும்போது முதன்மை பொருளாக மாறுவதை ஆய்வின் வழியாக அறிய முடிகிறது. தமிழ் க்ரியா

அகராதியில் இல்லாத பொருள்களான சம்சயம், லஜ்ஜ போன்றவை மடி என்னும் சொல்லிற்குப் புதிய பொருளாக மலையாள அகராதியில் காணமுடிகிறது. இந்தச் சொற்கள் மலையாள மக்களிடத்தில் அருகிய வழக்காகப் புழக்கத்தில் இருக்கிறது.

**3.1.6 விவசாயி - (பெயர்)**

விவசாயி என்ற சொல் தமிழ் மலையாள மொழிகளில் ஒத்தசொற்களாகக் காணப்படினும் இதன் பொருள் மாறுபாட்டால் வேறுபடுகிறது என்பதைத் தமிழ் மலையாள மக்களின் பேச்சுவழக்கு வழியாக அறியலாம். தமிழ் மொழியில் 'விவசாயி' என்றால் நிலத்தில் உழுது விவசாயம் அல்லது வேளாண்மை செய்பவர்கள்-பண்டைத்தமிழகத்தில் 'உழவர்' என்ற சிறப்பு பெயர் மிகவும் உயர்ந்தவர் பெறும் மட்டமாக மதிக்கப்பட்டது. 'சுழன்றும் ஏர் பின்னது உலகு' என உழவுத் தொழில் பாராட்டப்பட்டது. இந்தியாவில் யார் விவசாயி என்பது மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் வரையறை செய்யபட்டுள்ளது. விவசாயிகளில் பல்வேறு பிரிவினர் உள்ளனர். இவர்களில் ஒரு வகைதான் பிரதானமான விவசாயி என்பவர். அதாவது எவர் ஒருவர் ஆண்டொன்றுக்குக் குறைந்தது 183 நாட்கள் விவசாயத்தில் ஈடுபடுகிறாரோ அவர்தான் முக்கியமான விவசாயி ஆவார். இவர்தான் முழுமையாகத் தன்னுடைய தொழில், வாழ்வாரத்தில் மற்றும் வருமானத்தில் விவசாயத்தைச் சார்ந்திருப்பவராகக் கருதப்படுகிறார். எவரொருவர் ஆண்டொன்றுக்கு 3 முதல் 6 மாத காலம் விவசாயத்தில் ஈடுபடுகிறாரோ அவர் பகுதி நேர விவசாயி ஆவார். இவர்களுக்கு அடுத்து விவசாயத் தொழிலாளர்கள் என்ற பிரிவினர் உள்ளனர். மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் புள்ளி விவரங்களில் விவசாயிகளின் எண்ணிக்கை வீழ்ச்சியடைந்து வருகிற அதே நேரத்தில் விவசாயத் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. விவசாயிகள் நாளடைவில் குறைந்தால் விவசாயி வீழ்ச்சியடைவதைப் போல 'விவசாயி' என்ற சொல்லும் பயன்பாட்டில் மாற்றம் ஏற்படும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மலையாளத்தில் 'விவசாயி' என்ற சொல் எதிர்மறையான பொருளை உணர்த்துவதைக் காணமுடியும். அதாவது 'விவசாயி' என்பதற்குப் பொருளாதாரத்தில் உயர்ந்தவன் தொழிலதிபர், முதலாளி, வேலைத்தருபவன் என்ற பொருள்களைத் தாங்கித் தற்காலத்தில் பயன்பட்டு வருகிறது.

மலையாளம்: (எ.கா) சௌதியில் மலையாளி விவசாயி மரிச்சு

(சௌதியில் மலையாளி தொழிலதிபர் இறந்துவிட்டார்)

தமிழ்: நா ஒரு சாமானிய விவசாயி

நானும் ஒரு விவசாயி தான்

என்று கூறுவதைப் பயன்பாட்டில் காணமுடியும். விவசாயி' என்பதற்கு மலையாளத்தில் 'க்ரிஷிக்காரன்' என்ற சொல் ஒரே பொருளில் உழைக்கக்கூடிய மற்றும் பயிர் விளைவிக்கக்கூடியவர்களைக் குறிக்கிறது. விவசாயி என்பதற்குத் தற்கால தமிழ் அகராதி தரும் விளக்கம்;

விவசாயி - (பெயர்)

1. விவசாயம் செய்பவர்
2. பயிரிடும் தொழில் செய்பவர் –(2008;1272)

விவசாயி என்பதற்கு மலையாள சப்ததாராவலி தரும் விளக்கம்:

விவசாயி-(பெயர்)

1. விவசாயம்- நடத்துந்நவன்
2. உத்ஸாஹசாலி
3. க்ரிஷி கைத் தொழில் முதலாய நிர்மானஜோலிகளில் ஏற்பெட்டு ப்ரவர்த்திக்குந்நவன்(விவசாயி) (2010:1824)

இங்குத் தமிழ் மலையாள தற்கால அகராதிகளைப் பார்க்கும் போது 'விவசாயி' என்பதற்குத் தகுந்த பொருள் பேச்சுவழக்கில் பரவலாகப் பயின்று வந்து அதன்பிறகு அகராதிகளில் முதன்மைப்பொருளாக இடம்பெற்றிருக்கிறது என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது. தமிழில் விவசாயி என்பது கிராமத்தைச் சார்ந்து செய்யக்கூடிய தொழிலாகவும், மலையாளத்தில் விவசாயி என்பது நகரத்தை மையமிட்டு அமையக்கூடிய தொழிலாக இருப்பதையும் அறிய முடிகிறது. தமிழில் வேலை செய்பவரையும் மலையாளத்தில் வேலை வாங்குபவரையும் 'விவசாயி' என்று குறிக்கக்கூடிய நேர் எதிர் பொருளாக இவ்விரு மொழிகளில் இச்சொல் பயின்று வருகிறது.

**3.1.7 வேலை (பெயர்)**

'வேலை' என்னும் சொல் சமகால தமிழ் மலையாள பேச்சுமொழிச் சொற்களாகக் காணப்படினும் பொருள் வேறுபாட்டில் மாற்றம் உடையதாகும். வேல் - கூரிய கருவி என்று பழங்காலத்தில் வாணிபர்கள் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேல்பிடித்த தடியர்களை அல்லது அடியாட்களைப் பணியில் வைத்தனர். அதன்காரணமாக வேலை என்ற சொல்

காலவெள்ளத்தில் நிலைநின்றது எனலாம். ‘வேலை’ என்பதற்குத் தமிழ் பேச்சு மொழியில் பணி, தொழில், உத்தியோகம், போன்ற நிலைகளில் பயன்பட்டு வருகின்றன என்பதை அறிய முடியும்.

**3.1.7.1 வேலை என்ற சொல்லைப் பயன்படுத்தும் முறை:**

**வேலை**

வேலைப்பாடு, வேலைவெட்டி, வேலைசெய், வேலை வாங்கு, வேலைவை, வேலைவளர், வேலையிழ, வேலைதேடு, வேலைபார், வேலையாள், வேலைக்காரன், வேலைக்காரி, வேலைவாய்ப்பு, வேலையில்லாத் திண்டாட்டம், வேலைநாள், வேலைநிறுத்தம், வேலைநேரம், வேலைத்திறன், வேலைகாட்டு, வேலைத்தனம், வேலைப்பளு, கைவேலை, மரவேலை, பூவேலை, கூலிவேலை, வீண்வேலை, வெட்டிவேலை, ஏமாற்றுவேலை, வெளிவேலை, கடன்கார வேலை என்ற நிலைகளில் ‘வேலை’ என்ற சொல் பகுதி ஒத்த சொற்களாகப் பயன்பட்டு வருவதை தமிழ்மொழியில் காணமுடியும்.

மலையாள மொழியில் ‘வேலை’ என்னும் சொல் வழிபாடு சம்பந்தபட்ட கலாச்சாரப் பொருளாக மாற்றம் அடைகிறது. அதாவது கோவில் திருவிழா என்பதற்குச் சமமாக மலையாளத்தில் பயன்படுத்துகின்றனர். ‘நென்மாற வேலத் தொடங்கி, நென்மாற என்ற ஊரில் கோவில் திருவிழா தொடங்கியது, என்றும் ‘சிட்டிலஞ்சேரி வேல கமிட்டி’—என்றால் சிட்டிலஞ்சேரி கோவில் திருவிழா குழு—என்ற நிலைகளில் பயன்பட்டு வருவதைத் திருவிழா காலங்களில் அதிகமாகக் காணமுடியும். தமிழ் பேச்சுவழக்கில் உள்ள வேலை என்பதற்குச் சமமாக ‘ஜோலி’ என்ற சொல்லை மலையாள மக்கள் பயன்படுத்தி வருவதை உணர முடியும்.

சங்க இலக்கியத்தில் ‘வேலை’ என்ற சொல் பரிபாடலில் பயன்றுவந்துள்ளது என்பதைக் காணலாம்.

> ‘‘மாலைத் தலைநிறையால் தண்மணல்
> ஆர்வேலை மாத்திரைசெல் யாறு’’

பரிபாடல்-(19-18)

பரிபாடல் என்ற சங்கஇலக்கிய எட்டுத்தொகை நூலில் வேலை என்பதற்கு ‘அவர்கள் ஆரவாரிக்கும் முழக்கம்’ என்ற பொருள் தருகிறது. இந்தப் பொருள் மலையாள மொழியுடன் ஒத்துவருவதைக் காணமுடிகிறது.

திருவிழா என்றால் அனைவரும் ஒன்றுகூடிப் பல நிகழ்ச்சிகளில் பங்குபெற்று அதன்மூலம் உண்டாகக் கூடிய ஆரவாரத்தை வேலை என்ற சொல்லுடன் தொடர்புபடுத்திப் பார்க்க இயலுகிறது.

க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் வேலை என்றச் சொல்லிற்குப் பதினொன்று வகையான பொருளைப் பதிவுகளாக வரிசைப்படுத்தியுள்ளனர்.

வேலை(பெயர்)

1. நிறைவேற்ற, மேற்கொள்ள, செய்ய வேண்டியிருக்கும் செயல்
   (எ.கா)வீட்டில் நிறைய வேலை இருக்கிறது.
2. இயக்கம்
3. செயல்
4. பணி-கோயில் கட்டும் வேலை நடந்துவருகிறது
5. அலுவலகம், தொழிற்சாலை, முதலியவற்றில் ஊதியம் பெற்றுக்கொண்டு ஒருவர் மேற்கொள்ள வேண்டிய பொறுப்பு
6. (நிறுவனம், அலுவலகம் முதலியவற்றில் உள்ள) குறிப்பிட்ட பணிக்கான இடம்
   (எ.கா) எங்கள் தொழிற்சாலையில் வேலை காலி இல்லை
7. குறிப்பிடப்படும் தொழில்:
   (எ.கா) ஆணி இல்லாமல் தச்ச வேலை எப்படி நடக்கும்
8. தொழில் அறிவு – (skill)
   நெசவு வேலைத் தெரிந்தவன்
9. விரும்பத் தகாத அல்லது தேவையில்லாத ஒன்றைச் செய்யும் வழக்கம்
10. விரும்பத் தகாத அல்லது முறையற்ற செயல்
11. ஒரு பொருளின் மீது விசை செயல்படுவதால் ஏற்படும் இயக்கத்தின் அளவு (work in physics) (2008:1311)

க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் கூறப்பட்டுள்ள பொருள் தமிழ் பேச்சுவழக்கில் தொடர்ந்து பயன்படுத்தி வரக்கூடிய பதிவுகளாகவே பதிவு செய்யப்பட்டுள்ளன. சூழல், இடம், செயல்பாடுகளைப் பொறுத்துச் சிற்சில வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம்.

மலையாள சப்ததாரவலி அகராதியில் வேலை என்னும் சொல்லுக்கு இரண்டு பொருள் பதிவுகளாக இடம் பெற்றுள்ளன என்பதை அறிய முடியும்.

வேல[1](பெயர்) - 1, ஜோலி, தொழில், அத்வானம், ப்ரயாசம், கேஷ்த்ர உல்சவம், வேலாளி

வேல்[2] (பெயர்) - காலம், சமயம், சந்தர்பம், ஏற்றம், ஒழுக்கு, சமுத்ரம், சமுத்ரதீரம், ஆற்றுமட்டம், அதிரு, அரிகு, வாக்கு, ராஜபோஜனம், சுகமரணம், மோண(வேலா)

தமிழ் மலையாள ஒலியொற்றுமையுடைய சொற்களைச் சங்க இலக்கியம் முதல் தற்கால அகராதிகள் வழி ஆராயும் போது 'வேலை' என்பதற்குப் பொருள் இரண்டு மொழிகளிலும் ஒன்றுபட்டு இருக்கிறது. தற்கால பேச்சுமொழியில் தமிழில் வேலை என்பதற்கு வேலையையும், மலையாளத்தில் சங்க இலக்கிய பொருளுடன் ஒத்திருக்கும் 'கேஷ்த்ர உல்சவம்' முதன்மைப் பொருளாக மலையாள மக்களிடம் நிறைந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

**3.1.8 தடவு - (வினை)**

சமகால தமிழ்மொழியில் 'தடவு' என்னும் சொல் நீவுதல் என்னும் பொருளில் வழங்கி வருகிறது. அதாவது காயப்பட்ட இடத்தை நன்றாகத் தடவு, என்றும் தோசைக்கு எண்ணெய் தடவு என்ற நிலைகளில் தமிழ் மக்கள் அதிகமாகப் பயன்படுத்தி வருகின்றனர். அதே வேளையில் மலையாள மொழியில் 'தடவு' என்பதற்கு ஜெயில், குற்றவாளி, தண்டனை அனுபவிக்கக்கூடியவன் என்ற பயன்பாட்டில் வருகிறது. அதாவது அவன் எங்கே என்று கேட்கும் போது 'அவன் தடவில் கழியுந்நு, அவன் ஜெயிலில் இருக்கிறான் என்ற சொற்றொடர்களில் மலையாளத்தில் தடவு பயின்று வருகிறது. சங்க இலக்கியத்தில் இச்சொல் குறுந்தொகையில் பதிவாகி இருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

மடவ மன்ற, தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய

- குறு-(66-1)

தொல்காப்பியத்தில்

தடவுங் கயவும் நளிவும், பெருமை

-தொல் - சொல் -320 சேனா

தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்

-(தொல் - சொல் -321 சேனா)

தொல்காப்பியத்தில் ஒரு இடத்தில் 'பெருமை' என்ற பொருளிலும் வேறொரு இடத்தில் தொடர்பில்லாத 'கோட்டம்' என்ற பொருளையும் உணர்த்துகிறது. குறுந்தொகையில் பெருமை என்ற பொருளையே

உணர்த்துகிறது. இரண்டையும் ஒப்புமை செய்து பார்க்கும் போது கோட்டம் என்பது அருகிய வழக்காக இருக்க வாய்புள்ளது என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.

க்ரியா அகராதியில் தடவு என்பதற்குச் சில பொருள்களை முன்வைக்கிறது.

தடவு (வினை) - (உடம்பில்) (1) ஒரு பகுதியின் மீது கையை
(தடவ, தடவி) மென்மையாக நகர்த்துதல்
(2) (கை, கால் முதலியவற்றால்) தொட்டுப் பார்த்தல் (இருளில் காலால் தடவிப்பாாத்து அடி எடுத்து வைத்தார்)
(3) (ஒரு பரப்பில் எண்ணெய் முதலியவை) பூசுதல்; தேய்த்தல்;

மலையாள அகராதி சப்ததாரவலி தடவு என்பதற்கு இரண்டு விதமான பொருள்களை முன் வைக்கிறது.

தடவு[1](பெயர்)
1. தடசம், விக்னம்
2. செறுக்கல், தடுக்கல்
3. (நியமம்) அதிகாரம் உபயோகிச்சு வெக்தியுடையோ வெக்திகளுடையோ சஞ்சாரத்தையும், ப்ரவர்த்தனத்தையும் நிரோதிக்கல்
4. ஜெயிலில் அடைக்கல்
5. காலதாமசம்
6. பயற்றில் எதிராளியுடெ ஆக்ரமணம் செருக்குந்த முற
7. மதில்
8. ஆவ்ருத்தி

(பழமொழி ) – தல்லுகொண்டால் தடவு படிக்கும்.

தடவு[2](வினை) – தடவுக, (பே.வ) தடவும் பிழிச்சிலும். (2010:992)

இச்சொல் தொல்காப்பியம், சங்க இலக்கியம் மற்றும் தற்காலம் என்ற நிலைகளில் பயின்று வந்தாலும் காலந்தோறும் ஒரு பொருளில் வழங்கி வரவில்லை என்று ஆய்வில் தெளிவாகிறது. ‘பெருமை’ என்ற பொருள் பெரும்பான்மையாகவும். கோட்டம் அருகிய வழக்காகவும் இருந்திருக்கிறது. தொல்காப்பியத்தில் ‘கோட்டம்’ என்ற பொருள் பயன்பாட்டில் இருப்பதைப் போல மலையாளத்திலும் அருகிய வழக்காக ‘மதில்’ என்ற பொருளில்

பயன்பட்டு வருகிறது என்பதை உணர முடியும். இச்சொல் தமிழில் வினைவடிவத்தையும் மலையாளத்தில் பெயர் மற்றும் வினை வடிவம் என இரண்டையும் பெற்று வருகிறது. மலையாளத்தில் பெயர் மற்றும் வினை வடிவம் என இரண்டையும் பெற்று வருகிறது. மலையாளத்தில் தடவு என்பதற்குக் கூடுதல் பொருள்களைச் சப்ததாரவலி அகராதி மூலம் அறிய முடிகிறது.

**3.1.9 குட்டி - (பெயர்)**

தமிழ் மலையாள பேச்சுமொழிகளில் 'குட்டி' என்ற சொல் அன்றாட பயன்பாட்டில் உள்ள பெருவழக்கு சொல் எனலாம். இச்சொல் வீட்டிற்குள்ளேயும், (மலையாளம்), வீட்டிற்கு வெளியேயும் (தமிழ்) வளர்க்கின்ற குழந்தைகளையும், விலங்கினங்களையும் குறிக்கக்கூடிய சொல்லாக இரண்டு மொழிகளிலும் இருக்கிறது. குட்டி என்பது தமிழ் மொழியில் பாலூட்டிகளின் குட்டிகளைக் பெரும்பான்மையாகக் குறித்தாலும் இச்சொல்லின் பயன்பாடு தமிழ்மொழியில் பல நிலைகளில் உள்ளது.

அதாவது குட்டி

குட்டிப்பிசாசு, கடாக்குட்டி, ஆட்டுக்குட்டி, நாய்க்குட்டி, புலிக்குட்டி, பூனைக்குட்டி, எலிக்குட்டி, முயல்குட்டி, கடைக்குட்டி, குட்டியானை, குட்டித்தொல்காப்பியம், நரிகுட்டி, குட்டிக்கரணம், குட்டிக்கலகம், குட்டிக்கிழங்கு, குட்டிச்சாத்தான், குட்டிச்சுவர், குட்டித்தக்காளி, குட்டித்திருவாசகம், குட்டிப்பல், குட்டிப்பாடம், குட்டிவிரல், குட்டிவிளா, பிள்ளைகுட்டிக்காரன் என்ற பலநிலைகளில் இச்சொல் பயன்பாட்டில் உள்ளது.

தமிழில் குட்டி என்ற சொல்லைப் பெயரிலும் அதிகமாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். குறிப்பாக ஆண்மகனைக் குறிக்க பயன்பட்டதாகப் பிங்கலநிகண்டின் வழி அறிய முடிகிறது. குட்டியப்பன், குட்டியாத்தாள், மணிகுட்டி, குட்டிமணி, போன்ற பெயர்களை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

மலையாளத்தில் 'குட்டி' என்ற சொல் பிள்ளைகளைக் குறிக்க அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். அதாவது ஒருவருக்குக் குழந்தைப் பிறந்தால் முதலில் கேட்பது ஆண் பிள்ளையா, பெண் பிள்ளையா என்பதற்குச் சமானமாக உங்களுக்கு 'ஆண் குட்டியானோ', பெண் குட்டியானோ' என்றும், குட்டி 'எவிடெ படிக்குந்நு', 'குட்டி எங்கோட்டு போவுவ', 'குட்டிக்குச் சுகானோ' என்ற நிலைகளில் மலையாள மக்களிடத்தில் பயன்பாட்டில் இருக்கிறது.

இச்சொல் தொல்காப்பியம் மற்றும் தமிழ் இலக்கியங்களில் பல நிலைகளில் பயன்று வந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது

முங்கா வெருகு எலி மூவரி அணிலொடு
ஆங்கு அவை நான்கும் குட்டிக்குரிய

(தொல். பொ. மரபி – 1505)

குட்டியும் பறழும் கூற்று அவண் வரையார்

(தொல். பொ. மரபி – 1509)

தொல்காப்பியத்தில் குட்டி என்பதற்குப் பறழ், குருளை, இளமை என்ற பொருள்களையே வழங்குகின்றன. க்ரியா அகராதியில் குட்டி என்பதற்கு இரண்டு விதமான பொருள்களைப் பேச்சுமொழியின் அடிப்படையில் விளக்குகிறது.

குட்டி[1](பெயர்) - 1.(நாய், புலி போன்ற) பாலூட்டி இனத்தைச் சேர்ந்த சில விலங்குகளுக்கு அல்லது பாம்பு போன்றவற்றுக்குப் பிறக்கும் இளம் உயிர்

2. சிறுமி (இந்தக் குட்டிக்குப் பத்து வயது இருக்குமா?

3. இளம் பெண் (தகுதியற்ற வழக்கு)

4. குழந்தைகளைப் பிரியத்துடன் அழைப்பதற்குத் தனியாகவோ பெயருடன் இணைத்தோ பயன்படுத்தப்படும் ஒரு சொல் (பேச்சு வழக்கு).

மலையாள சப்ததாராவலியில் குட்டி என்பதற்குத் தரும் பொருள்;

குட்டி - (பெயர்) 1. செறிய (அல்லது) சிறிய 2. ப்ராயம் குறைந்த குஞ்சு, பைதல், பாலன், பாலிக.

2. ப்ராய பூர்த்தியாவாத்த குஞ்சு(பசு, பன்றி (or) பண்ணி, பட்டி துடங்கிய சந்துகளுடெ).

3. சந்தானம்

4. பால்யம்

5. வித்யார்த்தி

6. வலிப்பத்தில் வித்தியாசமுள்ள ரண்டெண்ணத்தில் செறுதினெ குறிக்கான், உபயோகிக்குந்த பதம்

குட்டி என்ற சொல் பழங்காலந்தொட்டு (தொல்காப்பியம் முதல் சமகால அகராதிகள்) இன்று வரை பெரிய அளவில் பொருள் மாற்றம்

ஏற்படாமல் இலக்கியம் மற்றும் பேச்சுவழக்கில் பயன்பட்டு வருகிறது. இந்தச் சொல் இரண்டு அகராதிகளிலும் ஒரே மாதிரியான பொருள்களை அடுக்கியிருந்தாலும் தமிழில் - பாலூட்டிகளுடைய குட்டிகளையும், மலையாளத்தில் மனிதர்களுடைய குழந்தைகளையும் குறிப்பதே முதன்மைப் பொருளாகத் திகழ்கிறது.

### 3.1.10 மக்கள் (பெயர்)

'மக்கள்' என்னும் சொல் தமிழ் மற்றும் மலையாளத்தில் ஒலியொற்றுமை உடைய சொற்களாகக் காணப்படினும் பொருள் வேறுபாட்டு அடிப்படையில் வேறுபாடு உடையதாகக் காணப்படுகிறது. தமிழில் 'மக்கள் என்றால் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பவர்களைக் குறிக்கிறது. 'மக்கள்' என்ற சொல் பன்மை விகுதியைப் பெற்று வருவது போல பல மனிதர்களைக் குறிக்கக்கூடிய சொல்லாகத் தமிழில் இருக்கிறது.

மலையாளத்தில் 'மக்கள்' என்றால் ஒரு நபரையோ அல்லது இரு நபரையோ 'மக்கள்' என்று அழைத்து வருகின்றனர். அதாவது 'என்டெ மக்களா' என்பதற்கு என்னுடைய மகளா என்ற பொருளிலும், 'என்டெ பெண் மக்கள் எவிடெ' என்பதற்கு என்னுடைய பெண் மகள் எங்கே என்ற பொருளிலும் பயன்படுத்தி வருகின்றனர். மக்கள் என்பதற்கு இணையான மலையாளச் சொல் 'ஜனங்கள்' என்ற நிலையில் மலையாளத்தில் பயன்படுத்தி வருகின்றனர். அதாவது 'ஈ வழி ஜனங்கள் உபயோகிக்கட்டெ' இந்த மொழியை மக்கள் பயன்படுத்தட்டும் என்ற நிலையில் பயின்று வருகிறது. இந்த பயன்பாட்டைப் தொடர்ந்து தான் மலையாள மக்கள் 'பெண்'(Singular) என்ற ஒரு நபரை அழைக்க 'பெங்கள்' என்ற சொல்லைப் பயன்படுத்திவருகின்றனர் என்பதை உணர முடிகிறது. அதாவது என்டெ பெங்கள் எத்தியோ என்னுடைய மனைவி வந்துட்டாளா என்று பன்மை விகுதியைச் சரளமாகக் கேரள நாட்டில் பயன்படுத்துகின்றனர்.

### 3.1.11 தாத்தா (பெயர்)

தாத்தா என்பது தமிழ் உறவுப் பெயர்களுள் ஒன்று. தமிழ் மலையாள மொழிகளில் தாத்தா என்ற சொல் இன்றும் அதிகமாகப் புழக்கத்தில் இருப்பதைக் காணமுடியும். இருப்பினும் தாத்தா என்ற சொல் தமிழில் பழங்காலத்தொட்டு சமகாலம் வரை ஒரே பொருளில் இருந்து வருவதை அகராதி மற்றும் இலக்கியத்தின் வாயிலாக உணர முடிகின்றது.

‘தாத்தா’ என்பதற்கு (1) தாய் அல்லது தந்தையின் தந்தை, (2) வயதானவர் (3) கிழவர் என்ற பொருளுண்டு.

மலையாளத்தில் ‘தாத்தா’ என்பது உறவுச் சொல்லாக இருந்தாலும் சில குறிப்பிட்ட மதம் சார்ந்த (இஸ்லாம்) மக்களிடத்தில் முற்றிலுமாக எதிர்மாறான பொருளை வழங்குவதை அறியலாம். மலையாள மக்களில் அதிகமானோர் (1)அப்பூப்பன், (2) வயோவிருத்தன் (ப்ராதேசிகம்) என்ற பொருளிலும் இஸ்லாம் மதத்தில் (1) மூத்த சகோதரி – (முதலில் பிறந்தவள்) (2) ஜேஷ்ட்டண்டெ பார்ய – (அண்ணனுடைய மனைவி) (3) பராயம் கூடுதலுள்ள ஸ்த்ரீ – (வயதான பெண்). என்ற பொருள்களில் வருகின்றன. தமிழிலும், மலையாளத்திலும் அதிகமாகப் பயன்பாட்டில் உள்ள சொல் ஒரு குறிப்பிட்ட பிரிவினரிடையே எதிர்மாறான பொருளைத் தருவது வியப்பாக உள்ளது.

### 3.1.12 அவசரம் (பெயர்)

இச்சொல் தமிழிலும், மலையாளத்திலும் அடிக்கடிப் பயன்படுத்தப்படும் ஒரு சொல். ஆனால் இரண்டு மொழிகளிலும் இருவேறுபட்ட பொருள்களில் பயன்பட்டு வருவதைக் காணலாம்.

தமிழில் வேகம், பரபரப்பு, உடனடி ஆகிய பொருள்களில் இச்சொல் வழக்கத்தில் உள்ளது. அவசரச் சட்டம், அவசரக் குடுக்கை. அவசரசிகிச்சை, அவசரமாகச் செல்ல வேண்டும் என்றெல்லாம் சொல்வதுண்டு. இச்சொல் வாய்ப்பு – மலையாள மொழிக்கு வரும்போது பெரும்பாலும் ‘வாய்ப்பு’ என்ற பொருளில் வழங்கப்படுகிறது. சில இடங்களில் ‘நேரம்’ என்ற பொருளையும் தரும் அதாவது ‘கிட்டிய அவசரம் பாழாக்கருது’ என்றால் கிடைத்த வாய்ப்பைப் பாழாக்கி விடாதே என்று பொருள். ‘இனியொரு அவசரம் தராமோ? கிட்டுமோ? இனியொரு வாய்ப்பு தருவீர்களா! கிடைக்குமா என்றெல்லாம் வரும். மலையாளத்தில் பொருத்தமற்ற நேரத்தில் என்று பொருள்படுகிறது. நிலையான ஒரு கொள்கையின்றி நேரத்துக்கும், சூழலுக்கும் ஏற்ப மாறுபவனை அவசரவாதி என்பார்கள்.

### 3.1.13 கவலை (பெயர்)

கவலை என்றால் முதலில் வருவது துக்கம், சங்கடம், கவலைக் கிழங்கு, ஒருவகைக்கிழங்கு – (குறுந்-233). ஆற்றிடைக் குறை என்ற பொருளிலும் (குறுந்-263)-ல் வருவதுண்டு. மரக்கிளையையும் இவ்வாறு சொல்வர். ஆயினும் பல வழிகள் ஒன்று சேரும் இடம் (சந்தி, சந்திப்பு) என்ற

பொருளில் குறுந்தொகையிலும்(12), அகநானூற்றிலும் (193) இடம்பெறுவதை அறிய முடியும்.

மலையாளத்தில் இச்சொல் பெருவழக்காக உள்ளது. நாற்சந்தியை நால்கவல என்கிறார்கள். இதுபோன்ற சந்திப்புகளில் வழிப்பறியில் ஈடுபடுவோரைச் கவலச்சட்டம்பி என்பர். இத்தகைய சட்டம்பிகளின் விளையாட்டம் நடக்கிற இடங்களைச் சட்டம்பிக்கவல எனக் குறிப்பிடுவர்.

இடைவிடாமல் சத்தம் போட்டுப் பேசுபவரைப் பார்த்து ‘நின்றெ கவலப் பிரசங்கம் நிறுத்து’ என்பது பரவலாகச் சொற்பொழிவு நிகழ்த்துபவரைக் கூறக்கூடிய வார்த்தையாக இன்று பரவலாகப் பயன்படுத்துவதைக் காணலாம்.

**3.1.14 தூங்கு** – (ஏவல் (வினை) - தமிழ்

(தூங்க, தூங்கி)

தூங்கல் – (பெயர்) மலையாளம்

தூங்குக – செயப்படுபொருள் குன்றிய வினை (மலையாளம்)

தமிழ் மலையாள மொழிகளில் தூங்கு என்றச் சொல் ஒன்றுபட்டிருந்தாலும் வினைவடிவத்தில் மாற்றம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. தமிழில் தூங்கு என்பது ஏவல் வினையாகவும் மலையாளத்தில் தூங்கல், தூங்குக என்பது பெயர் மற்றும் செயப்படுபொருள் குன்றியவினையாகவும் வருகிறது. அதேபோல் பொருள்மாற்றத்தில் தமிழில் சங்க காலம் முதல் 1. தூக்கம் கொள்ளுதல், உறங்குதல் (2) செயல்படுதலோ அல்லது பயன்படுதலோ இல்லாமல் இருத்தல் சும்மா இருத்தல் என்ற பொருளில் வருகிறது.

அருள்வயினாற் றூங்கு மணிகையாற் றாக்கி – பரிபாடல்- (8–88)

ஒங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின் - நற் - (87–2)

தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவி - குறுந் - (235–2)

மலையாளத்தில் தூங்கு அல்லது தூங்கல் என்பதற்கு முற்றிலுமாக வேறுபட்டுக் பொருள் இருப்பதை உணர முடிகின்றது. அதாவது தூங்கிகிடக்குந்ந அவஸ்த (கயறில் தூக்குப்போட்ட நிலை)

1. ஞானுகிடக்குக -
2. பாரமுள்ளதாயிருக்குக - (சுமையாக இருப்பது)
3. உறங்குக - (உறங்குவது) மயங்குக – (மயங்குவது)
4. க்ஷீணிக்குக - (சோர்வு)

5. மனஸ்தளருக - (மனது தளர்வது) ஆஸ்ரயிக்குக (நம்பி இருப்பது)
6. குனியுக - (குனிந்து இருப்பது), அடிமைப் போன்ற பொருள்களில் பயின்று வந்தாலும் தூங்கு என்பதற்குத் தற்கால மலையாளப் பேச்சுமொழியில் ‘உயிர்துறப்பது’ என்பதே மிகுதியாகப் பயன்பட்டுவருகிறது.

**3.1.15 விளி- (வினை)**

விளி ஒரு தமிழ்ச்சொல். ‘அழைப்பு’ எனப் பொருள்படும். சத்தமாக அழைத்தல் என்றால் இன்னும் பொருத்தமாக இருக்கும் ஒலி அல்லது குரல் என்ற பொருளிலும் வரும்.

‘‘வேற்றுமை தாமே ஏழென மொழிப; விளி

கொள்வதன்கண் விளியொடு எட்டே’’

எனத் தொல்காப்பியத்தில் இச்சொல் வருகிறது.

‘விளி அறிய ஞமலி குரைப்ப’(அகம் 140)

‘பகடுதுறை ஏற்றத்து உமண்விளி(அகம் 173)

‘நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்(நற்-218)

‘‘குறுநரி நெடுங்குரல் கூவிளி கேட்டு’’ சிலம்பு-(10:235)

இவ்வாறு இச்சொல் தமிழ் இலக்கியங்களில் பயன்று வருகிறது.

மலையாள மொழியில் இச்சொல்லின் பயன்பாடு என்பது சர்வசாதாரணமாகப் பயன்படுத்தக் கூடிய நிலையாக உள்ளது.

கல்யாணவிளி - திருமண அழைப்பு
கூக்குவிளி - கூவி அழைத்தல்
கொலவிளி - ஆக்ரோஷ ஒலி
சரணம்விளி - தெய்வ வழிப்பாட்டின் போது நடைபெறுவது
சீத்தவிளி - கெட்டவார்த்தைகளால் அழைத்தல்
சூளம்விளி - இரயில் புறப்படுமுன் எழுப்பும் ஒலி
நிலவிளி - சத்தம் போட்டு உரக்க எழுவது
புலவிளி - மரணத்தின் 16 - ஆம் நாள் சடங்கிற்கு அழைத்தல் (புலை-தீட்டு)
பூவிளி - ஓணத்தின் வருகையை அறிவித்தல்
மரணவிளி - அச்சத்தால் அழைத்தல்
வெல்லுவிளி - அறைகூவல், சவால்

- ஞான் அவனெ வெல்லுவிளிக்குந்நு

லேலம்விளி - ஏலம்விடுதல்

இவ்வாறு மலையாளத்தில் பலவாறாகப் பயின்று வருகிறது. தமிழில் இச்சொல் அருகிய வழக்காகத் தற்போது இருந்து வருகிறது. திருவனந்தபுரம் போன்ற மாவட்டத்தில் சற்று அதிகமாகப் பேச்சுவழக்கில் இடம் பெறுகிறது.

**3.1.16 பிழச்சு:**

தமிழில் பிழைச்சுவிட்டான் என்றால் - எங்காவது சென்று வாழ்ந்துகொள் எனப்பொருள்படும், மேலும் உயிர்ப் பெற்றால் என்றும் வரும். அதே சொல் மலையாளத்தில் வரும்போது (பார்ய பிழச்சு) – அதாவது மனைவி கெட்டுப் போனால் என்று பொருள்படும். 'எவிடெயெங்கிலும் செந்நு பிழச்சு போ' எங்காவது சென்று கெட்டுப்போ எனப் பொருளாகிவிடும். 'பிழை' பெயர்ச்சொல்லாக வந்தால் தவறு எனப்பொருள்படும். அதுவே வினைச்சொல்லாக வந்தால் 'வாழ்' எனப்பொருள்படும். மலையாள மொழியிலும் அப்படித்தான். ஆனால் 'வாழ்' என்ற பொருளில் அருகியே வருகின்றது. மலையாளத்தில் தவறு என்ற பொருளில் பெயர்ச்சொல்லாக வரும் 'பிழை' வினைச்சொல்லாகவும் திரிந்து வரும் அவன் பிழச்சு – அவன் தவறு செய்து விட்டான். இவ்வாறு பெயர், வினை அடிப்படையிலும் பொருள்மாற்றம் நிகழ்கிறது எனலாம்.

பிழை$^1$(வி) – தப்பி பிழைத்தல், உயிர் பிழைத்தல்

பிழை$^2$(பெ) – தவறு, குற்றம் (2014:970)

இவ்வாறு தமிழ் மலையாள மொழிகளின் வினைவடிவங்கள் அடிப்படையிலும் பொருள் மாற்றம் நிகழ்கிறது என்பதை உணர முடிகிறது.

**3.1.17 அச்சன் - (பெயர்)**

அச்சன் என்னும் சொல் தமிழ் மலையாள மொழிகளில் மலையாள மொழிக்கு முக்கியத்துவம் வாய்ந்த சொல்லாக இருக்கிறது. காரணம் தமிழ் மொழியிலோ, அகராதிகளிலோ 'அச்சன்' என்ற சொல் எங்கும் பதிவாகவில்லை. திருவாசகத்தில் அச்சன் என்ற சொல் திசைச்சொல்லாக அதாவது பிறமொழிச்சொல்லாக மு.வ.அவர்கள்(2017:113) அடையாளப் படுத்தியுள்ளார். தமிழ்மொழியில் இச்சொல் இல்லாவிட்டாலும் கேரள, தமிழக எல்லையோர மக்களுக்கு அச்சன்' என்பது பேச்சுமொழிச் சொல்லாக

இருக்கிறது. தமிழில் அச்சன் என்பது கிறிஸ்தவ சமூகத்தைச் சார்ந்த ஆண்களை(பாதிரியார்) அச்சன் என்று அழைப்பது வழக்கம். அதாவது அச்சன் பள்ளியில் இருக்கிறாரா என்றும் அச்சன் எப்போ வருவார் என்றெல்லாம் பேச்சுமொழியில் இயல்பாக பேசுவது வழக்கம். தமிழ் கிறிஸ்தவர்கள் இச்சொல்லை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர்..

மலையாளத்தில் இச்சொல் இரண்டாவது நிலையில் இருக்கிறது எனலாம். மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற நிலைகளில் பிதாவாக இருக்கக்கூடிய அச்சன் எல்லாக் குடும்பங்களிலும் பயன்படுத்தக்கூடிய சொல்லாகக் கேரளத்தில் இருந்து வருகிறது. அச்செனு விளிக்கு, அச்சன் வந்நோ, அச்சன் எவிடெ எனப் பல நிலைகளில் பெருவாரியாகப் பயன்படுத்தபடுகிறது. அம்மாவிற்கு இணையாகப் பயன்படுத்தக் கூடியச் சொல். இச்சொல்லில் இருந்துதான் எழுத்தச்சன்' என்ற சொல் மலையாள மொழியின் தந்தைக்கு உருவாகிறது.

இதன் தொடர்ச்சியாகக் கேரள மாநிலத்தில் உள்ள கொல்லம் மாவட்டத்தில் ‘அச்சன் கோவில்’ உள்ளது. இவையெல்லாம் அச்சனை முன்வைத்து எழுந்ததாகக் கூற முடியும். இச்சொல்லில் இருந்து தான் அப்பாவின் மூத்த சகோதரனைக் குறிக்க வலியச்சன் என்றும் இளைய சகோதரனைக் குறிக்க செறியச்சன் என்றும் தாத்தாவைக் குறிக்க முத்தச்சன் என்றும் அழைகின்றனர். இவையெல்லாம் அச்சன் என்ற சொல்லிலிருந்து உருவானதாகக் கூற முடியும்.

அச்சன் என்பதற்குச் சப்ததாராவலியில் கீழ்கண்ட பொருட்கள் பதிவுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

அச்சன் (பெயர்) 1). பிதாவ்

- தாதஸ்து ஜனக பிதா(அமரகோசம்)
- (தாதன், ஜனகன், பிதாவ் இவ மூன்றும்/மூனும் அச்சன்டெ பேரு. ராஜாக்கன்மாரோடு அச்சனு ‘தந்தபுழவன் எந்நு வேணம் பறயான்)

2) தெளிவோடு கூடியவன்

3) யஜமானன்

4) அம்மயுடெ சகோதரன் (எந்நும் சிலர் பறயுந்நு) அச்சனு, குரு எந்நும் பேருண்டு. ஜனிப்பிக்குக, படிப்பிக்குக, சோறுக்கொடுத்து வளர்த்துக. (2010:54)

### 3.1.18 பூரம் - (பெயர்)

பழங்காலத்தில் தமிழ் மலையாள மொழிகளில் பூரம் என்னும் சொல் நட்சத்திரமாக வழங்கப்பட்டு வந்தது. இன்று மலையாள மொழியில் வேறொரு பொருளை உணர்த்துவதாக அமைகின்றது. தமிழில் பூரம் என்பது வானியலிலும் சோதிடத்திலும் இராசிக் சக்கிரத்தில் சொல்லப்படுகின்ற இருபத்தேழு நட்சத்திரக் கோணப் பிரிவுகளுள் 11- வது பிரிவு ஆகும். சிங்கராசியில் அமைந்துள்ள நட்சத்திரங்களில் இதுவும் ஒன்று. இந்திய பஞ்சாங்க முறையில் சந்திரன் பூமியைச் சுற்றி வரும்போது பூர நட்சத்திரக்கோணப் பிரிவுக்குள் இருக்கும் காலம் பூர நட்சத்திரத்துக்கு உரிய காலம் ஆகும்.

மலையாளத்தில் பூரம் என்பதற்கு நட்சத்திரம் என்ற பொருள் இருந்தாலும் அதைவிட பேச்சுமொழியில் பூரம் என்ற சொல் திருச்சூர் மாவட்டத்தில் நடக்கக் கூடிய வடக்கன் நாதன் கோவில் திருவிழாவைக் குறிக்கக் கூடிய சொல்லாக மாறியிருக்கிறது. கலாச்சார பாரம்பரியத்துடன் உறவு கொண்டுள்ள இந்தத் திருவிழா தேவி (பெண்கடவுளர்) மற்றும் சாஸ்த (சிவன் மற்றும் விஷ்ணுவின் தெய்வீகக் கலவை) கோயிலோடு வரம்பிற்குட்பட்டதாக இருக்கிறது. அருகாமையிலுள்ள கோயில்களில் பத்து கடவுளர்கள் திருச்சூரின் குலதெய்வமான சிவனுக்குத் தங்கள் மரியாதையை ஊர்வலமாக வந்து செலுத்துகின்றனர். இத்தகைய மாற்றத்தின் காரணமாகத் தற்கால மலையாள அகராதியான சப்ததாராவலியில் பூரம் என்பதற்குத் ‘‘திருவிழா’’ என்றபொருளையே முதன்மைப் பொருளாக வரிசைப்படுத்தியுள்ளது (2010;1402) தமிழில் ‘பூரம்’ என்பதற்குத் தற்கால அகராதியான க்ரியாவில் ஒரே ஒரு பொருளைக் காணமுடிகிறது. அதாவது

பூரம்.பெ (சோதி) இருப்பத்தேழு நட்சத்திரங்களில் பதினொன்றாவது (2008:1006)

மலையாளத்தில் பூரம் என்பதற்கு மூன்றுவிதமான பதிவுகளைச் சப்ததாராவலியில் காணமுடிகிறது.

| | |
|---|---|
| பூரம்[1] (பெயர்) | 1 ஒரு உல்சவம் (பூரக்களி), படயணி<br>2. (சோதிடம்) பதினொன்னாமத்தெ நட்சத்திரம் பூரத்ரயத்திலொந்நு (சை), பூரம் கொள்ளுக கோஷிக்குக, (பூர்வ-பல்குநீ) |
| பூரம்[2] (பெயர்) | 1. பூரணம், நிறப்பு 2. மாதளம் 3. ஒரு பலகாரம் 4. கயம் 5. வெள்ளப்பொக்கம் 6. ஒழுக்கு 7. புண்ணின்டெ உணக்கம் 8. கூட்டம்(பூகம்) 9. கர்பூரம்(பூர) |

பூரம்[3] (பெயர்) பழுதார, செதும்பூரம், பாறுகாலி(2010:1402)

### 3.1.19 சிகரம் (பெயர்)

சிகரம் என்பதற்குத் தமிழ் மலையாள மொழியில் இருவேறுபட்ட பொருள் காணப்படுவதைப் பேச்சு வழக்கு வழியாக அறியமுடிகிறது. தமிழில் சிகரம் என்றால் மலையுச்சி என்றும் கோபுரத்தின் உச்சி என்றும் பொருள் வழங்குவதைக் காலங்காலமாக அறியமுடிகிறது. மலையாளத்தில் சிகரம் என்பதற்கு மரக்கொம்பு என்ற பொருள்ளும சமகாலத்தில் வழங்கி வருகிறது. அதாவது மரத்தினுடைய வண்ணம் சூடிய கிளையைக் குறிக்கிறது. 'மரத்தின்டை சிகரம் வீணு ரெண்டு பேர் மரிச்சு' என்று இயல்பாகப் பேசுவது கேரளத்தில் காணமுடிகிறது.

க்ரியா அகராதியில் 'சிகரம்' என்பதற்குக் கீழ்க்கண்ட விளக்கங்களைக் கூறுகிறது;

சிகரம் (பெ). 1. மலையின் பிற பகுதிகளைவிட உயரமாக இருக்கும் பகுதி மலை உச்சி
2. சிறப்பான பகுதியாக அமைவது, உயர்ந்த நிலை, உச்சம்
3. கோபுரத்தின் உச்சிப் பகுதி
4. (இலங்) திருவிழாக்காலத்தில் கோயிலின் முன் பக்கத்தில் உயரமாகப் போடப்படும் பெரிய பந்தல் (2008:571)

சப்ததாராவலியில் 'சிகரம்' என்பதற்குக் கீழ்கண்ட பதிவுகளை வரையறுக்கிறது.

சிகரம் (பெயர்)

1. கொடுமுடி
2. விருக்ஷ தலப்பு
3. வாளின்டெ வக்கு
4. கூர்த்த அட்டம்
5. குடும
6. கக்ஷம்
7. முல்லமொட்டு
8. ரோமாஞ்சம்
9. மாணிக்கியம்
10. (நாடிசாஸ்த்திரம்) ஒரு ஹஸ்தமுத்ர (சுண்டாணிவிரல் நிவர்த்தி மற்று விரலுகள் மடக்கிப்பிடித்தல்) (2010:1856)

## 3.2 எல்லையோர மாவட்ட பேச்சுமொழியின் தனித்தன்மைகள் :

கேரளத்தின் பகுதிகளை வடக்கன் கேரளம், தெக்கன் கேரளம், மத்திய கேரளம் என்று வகைப்படுத்துவர். இப்பகுதிகளில் பேசும் மலையாள பேச்சு மொழி பல நிலைகளில் மாறுபட்டுக் காணப்படுகின்றன. அவ்வகையில் தமிழக எல்லையோர பகுதிகளான பாலக்காடு, இடுக்கி, திருவனந்தபுரம் என்னும் மாவட்டங்களில் பேசும் பேச்சுமொழிகளில் காணலாகும் பல்வேறு தனிப்பட்ட கூறுகளைச் சொல், தொடர் நிலையில் இப்பகுதியில் காணலாம்.

### 3.2.1 பாலக்காடு மாவட்ட மலையாள பேச்சுமொழியில் காணலாகும் தனித்தன்மை வாய்ந்த சொற்கள்

| சொற்கள் | | வாக்கியம் |
|---|---|---|
| ⇒ ஞுங்கள் | - நிங்க, ஞுங்க | 1. ஞுங்க பொயிட்டு வரா |
| ⇒ எனிக்கு | - எக்கி | 2. க்கு அவிடெ வரை போணம் |
| ⇒ எவிடெ | - எவிடி | 3. எவிடெக்காணு போணது |
| ⇒ தவி | - கயில்/கரண்டி | 4. கயில் எடுத்திட்டு வா |
| ⇒ ஒழிக்குக | - வீழ்த்துவ | 5. அது இங்கோட்டு வீத்து |
| ⇒ பழங்கஞ்சி | - வெள்ளச்சோறு | 6. ஆ வெள்ளச்சோரிங் எடுக்கு |
| ⇒ அதிலூடெ | - அதீக்கூடி | 7. நமுக்கு அதீக்கூடி போகாம் |
| ⇒ போகருது | - போண்ட | 8. நீ அங்கோட்டு போண்ட |
| ⇒ மாறால | - வாறாமல | 9. ஆ வாராமல தூத்துகளய் |
| ⇒ ஜீல் | - ஈள் | 10. ஈளு கொண்டு அடிக்கு |
| ⇒ ஈர்க்கில் | - ஈள்கோல் | |
| ⇒ வராந்த | - கோலாயி | 12. அச்சன் கோலாயில் இரிப்புண்டு |
| ⇒ முகம் | - மொக்று(ற்) | 13. நின்ற மெகறு பொட்டிக்கும் |
| ⇒ உரும்பு | - மீறு(ற்) | 14. இவிடெ நல்ல மீறு ஆணல்லோ |
| ⇒ பப்பாய | - ஓமக்காய | 15. இந்நு ஓமக்காய் உப்பேரி வய்காம் |
| ⇒ புலர்ச்செ | - பெலச்சக் | 16.பெலர்ச்ச ஞான் கொச்சிக்கு போகும் |
| ⇒ சந்தியா | - மோந்தி | 17. நேரம் மோந்தியாயி |
| ⇒ வழக்கு | - வக்காணம் | 18. இனி வக்காணமாந்நும் வேண்ட |

⇒ வாங்குக - வேடிக்குவ 19. அரி வேடிச்சோண்டு வா

⇒ போகான் பரஞ்சு - புகான் பரஞ்சு 20. அம்மா போகான் பறஞ்

⇒ எந்தா மோனெ 21- எந்தாடா உண்ணியே நோக்குந்நே

⇒ முகம் - மோந்த - மீடு - மொத்தி 22. வெல்லம் மொத்திக்குடிச்சு

⇒ கம்மி-தோனெ 23. தோனெ ஒழிக்கு

**3.2.2 இடுக்கி மாவட்ட மலையாளப் பேச்சுமொழியின் தனித்தன்மைகள்:**

⇒ ஞுங்கள் - ஞுங்க வந்நு

⇒ நம்மள் - நம்ம - நம்ம போகுந்நு

⇒ கம்மி - இச்சிரி, இத்திரி - எனிக்கு இச்சிரி மதி

- எனிக்கு இத்திரி மதி

⇒ எவிடி - எவிடெ - நீ எவிடெ போயி

⇒ சோறுகழிச்சோ - சோறு திண்ணோ

⇒ ராவிலெ - காலத்து - ஞான் காலத்து வந்நு

⇒ அவளுடெ - அவக்கடெ - ஞான் அவக்கடெ வீட்டில் போயி

⇒ போகுந்நு - போந்நு - இந்நலெ அவிடெ நிந்நு போந்நு

⇒ கப்ப - மரச்சீனி - இந்நல மரச்சீனி கழிச்சு

⇒ கப்ப - கொள்ளி - நாளெ கொள்ளி புழங்ஙாம்

**3.2.3 திருவனந்தபுரம் மாவட்ட மலையாளப் பேச்சுமொழியின் தனித்தன்மைகள்:**

| சொல் | | வாக்கியம் |
|---|---|---|
| ⇒ திருவனந்தபுரம் | - திரோந்தரம் | - ஞான் திரோந்திரம் போகுந்நு |
| ⇒ எந்த | - எந்தர் (எந்துரு) | - நீ எந்தரு நோக்ணு |
| ⇒ பழங்கஞ்சி | - பழஞ்சி | - ராவிலெ பழஞ்சி குடிக்காம் |
| ⇒ மாறால | - வல | - ஆ வலயங்கு தூத்துகள |
| ⇒ குட்டி | - அப்பி | - எந்தரு அப்பி செய்யுனெ |
| ⇒ இந்நலெ | - நேற்று | - அவன் நேற்று வந்நு |

⇒ ரோகம் - தீனம் - நிநக்கு எந்ரு தீனம்

⇒ முகம் - மூஞ்சி - நிண்டெ மூஞ்சி பொட்டிக்கும்

⇒ ஸ்கூல் - பள்ளிக்கூடம் - பள்ளிக்கூடம் போவுநில்லே

⇒ நாரங்கவெள்ளம் - போஞ்சிவெள்ளம் - நமுக்கு போஞ்சிவெள்ளம் குடிக்காம்

⇒ அம்மா - தள்ள - நிண்டெ தள்ளயோடு பறய்

⇒ தேஷ்யம் - கலிப்பு - அவன் கலிப்பில் நிக்காணு

⇒ ஸஹோதரி - ஒடப்பிறணோள் - நின்டெ ஒடப்பெறனோள் எவிடெ

⇒ ஸஹோதரன் பாரிய - மயினி - நிண்டெ மயினியெ ஞான் இந்நல கண்டாயிருந்நு

⇒ எணீட்டு(எணீற்று) - எழிச்சு - நீ எழிச்சு வா

⇒ அதே - தண்ணெ - நாளெ கர்த்தால் ஆணெந்நு கெட்டு தண்ணெ

⇒ தமாச - வளிப்பு - நல்ல வளிப்பு தண்ணெ

⇒ அஹங்காரம் - மொட - அவன் பயங்கர மொடயா

⇒ அமர்த்தி - பிதுகி - அதெடுத்து பிதுகி வச்சு

⇒ மோசம் - அய்யம் - அய்யம் பரிபாடியாயி போயி

⇒ ஒருபாடு - தோனே - தோனெ சோறுண்டாயிருந்நு

⇒ ஆண்குட்டிகள் - பயலுகள் - பயலுகள் அவிடெ ஓடிக்களிக்குந்நு

இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற பகுதிகளில் உள்ள மலையாள மக்கள் மேல் குறிப்பிட்ட சொற்களை இரண்டு விதமாகச் சூழலுக்குத் தகுந்தாற் போல பயன்படுத்தி வருகின்றனர். நாளடைவில் இந்தச் சொற்களில் ஒரு வடிவம் மொழிகலப்பினால் செயலிழந்தோ அல்லது அருகிய பேச்சுவழக்காகவோ மாறுவதற்கு வாய்ப்புள்ளது. இந்தச் சொற்களின் வடிவம் மற்ற இடங்களுக்கு இடம் பெயரவும் வாய்ப்புள்ளது. தற்காலத்தில் இவ்விரு வடிவங்களை மலையாள மக்கள் பேச்சுவழக்கில் பயன்படுத்தி வருகின்றனர் என்பதை ஆய்வின் வழி அறிய முடிகிறது.

**3.3 பேச்சுமொழி மாற்றத்திற்கான காரணம்:**

அறிவியல் தாக்கத்தினால் உலகமே தலைகீழாக இயங்கிக் கொண்டு இருக்கக்கூடியச் சூழலில் மொழிகளும், பலநிலைகளில் எழுத்தாளர்களின் அறிவியல் போக்கிற்கிணங்க வலம்வந்துக் கொண்டிருக்கின்றன. மொழியின் கலவை அல்லது மாறுபாடு என்பது

பலநிலைகளில் இருந்தாலும் பெரும்பாலான மொழிகள் சமூக மனித புழக்கத்தின் காரணமாகவே மாற்றமடைகிறது எனலாம். பேசுதல், கேட்டல், புரிதல் போல எழுதுதல், படித்தல், புரிதல் ஒரு நிலைதான். இந்நிலையானது உலகின் பெரும்பாலான பகுதிகளுக்கு இல்லாமலே போனது. காரணம் முன்பேசி மறைந்த பலமொழிகளின் எழுத்துவடிவங்கள் உள்ளது. இருந்தாலும், இன்று பேசப்பட்டு வருவனவற்றில் ஆயிரக்கணக்கான மொழிகள் எழுத்துருவம் பெறாத நிலையில் உள்ளன. ஆகவே எல்லாமொழிகளும் பேசபட்டு வருவன, எழுதபட்டு வருவன என்றில்லை. உலகில் பேச்சுமொழியே முந்தியது. 21 – ம் நூற்றாண்டு வரை ஏராளமான இலக்கியங்களைச் செந்தமிழில் இலக்கியவாதிகள் எழுதியிருந்தாலும் கூட அவர்கள் அன்றாடம் உறவாடுவதற்கு இன்றும் பேச்சு மொழியே முன் நிற்கிறது. பேச்சை எழுத முடியாத நிலைமாறி இன்று பேச்சை அவ்வாறே எழுதும் கலைவளர்ந்துள்ளது. அவ்வாறு உறவாடும் போது சில வேளைகளில் சொற்களோ, சில எழுத்துகளோ திரிந்து வர இடமுண்டு அவை எவ்வாறெல்லாம் திரிந்து வருகிறது என்பதை மொழியியல் அடிப்படையில் விளக்கலாம்.

மொழி என்பது மனித எண்ணத்தின் உருவமாகவும், பிற உயிர்களிடம் இல்லாததும் மனிதர்களிடம் மட்டுமே சிறப்பாக இருக்கக்கூடியதுமான ஒன்று. மொழியை அதன் தன்மையைப் பொருத்து மூன்றுவிதமாகப் பிரிக்கலாம். அதாவது மொழி (பேச்சு எழுத்து, சைகை இவற்றில் அதிகமாகப் பேசப்படுவது வாய்மொழி என்றே கூற முடியும் காரணம் மற்ற இரண்டும் குறிப்பிட்ட நபர்களால் மட்டுமே கையாள முடியும் அதாவது, புத்தக – textbook மொழியைப் படித்தவர்கள் மட்டுமே கையாள முடியும். மூன்றாவது நடிப்பு (Sign) இது அதிகப்படியாக விலங்கினங்களுக்கிடையே நிகழக்கூடியதாகும்.

### 3.3.2 பேச்சுமொழி மாறுபாட்டிற்கான காரணங்கள்:

தமிழ் மலையாள இலக்கிய, இலக்கணங்களில் மனிதனுடைய வளர்ச்சிநிலையைப் பிறப்பு முதல் இறப்பு வரைப் பல பருவங்களாகப் பிரித்து இருப்பது நாம் அனைவருக்கும் அறிந்த ஒன்றே. இவ்வாறு பிரிப்பது உலகநியதிக்கு உகந்ததாகவும், மொழி மாறுபாட்டிற்கான காரணமாக அமைகிறது எனலாம். மொழியை மனித சமூகத்தில் மட்டுமே பலவிதமாகப் பயன்படுத்துகின்றனர் அதாவது ஜாதி,மதம், ஆண், பெண் பாகுபாடு, தொழில்,

வயது, நிலவியல் பின்னணி, தனிமனித மாறுபாடு முதலானவைகள் சமுதாயத்தில் மொழியை வடிவமைக்கின்றன. இவைகளின் காரணமாகப் பலநிலைகளில் பேச்சுமொழி நாளுக்குநாள் மாறுப்பட்டுக் கொண்டும் இருக்கிறது.

### 3.3.3 பேச்சுமொழியும் இலக்கணமும்:

இலக்கண அறிவு பேச்சுமொழியிலும் முக்கிய பங்கு வகிக்கிறது. எடுத்துக்காட்டாக வாழைப்பழம் என்பதனையும், வாழைபழம் என்பதனையும் எடுத்துக்கொள்வோம். வாழைப்பழம் என்று ஒற்று மிகுந்திருந்தால் வாழையினது பழமென்று பொருள்படும். வாழைப்பழம் என்றால் வாழையும், பழமும் என்று பொருள் விளங்கும். இதுபோன்ற சின்னஞ்சிறு வேறுபாட்டிற்குப் கூட இலக்கணம் துணைச்செய்யும்.

### 3.3.4 பேச்சுமொழி மாறுபாட்டிற்கான வகைப்பாடுகள்:

சமூகச் சூழலாலும், மொழிக்கலப்பாலும் பேச்சுமொழியில் பல மாற்றங்கள் எற்படுகின்றன. மொழியியலாளர்கள் பேச்சுமொழியில் காணலாகும் பொருள் மாற்றத்திற்கான காரணங்களைப் பல நிலைகளில் வரையறுக்கின்றனர். பேச்சுமொழியின் பொருள் மாற்றத்திற்கான காரணங்களை மொழியியலாளர்களின் வகைப்பாட்டின்படி ஒலிப்புமுறை வேறுபாடு, ஒலியனியல் வேறுபாடு, உறுபனியில், மொழியின் சொற்கள் பற்றிய வேறுபாடு, சொற்பொருள் மாறுபாடு, சொல்லிணைவு, தொடரியில் வேறுபாடு எனப் பின்வரும் பகுதியில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

#### 3.3.4.1 ஒலிப்புமுறை மாறுபாடு (Pronounciation Variation)

கேரளாவில் பழங்குடிமக்கள் பல மாவட்டங்களிலும் பரவலாகக் காணப்படுகிறார்கள். அவர்களில் வயநாடு பகுதியில் வாழக்கூடிய ‘இருளர்’ என்ற மக்கள் ‘போனெ’ என்ற வாக்கு ‘போ’ என்று உச்சரிக்கிறார்கள்.

இதே போன்று கேரளாவில் உள்ள இடுக்கி மாவட்டத்தில் ‘உக்காரு’ என்பதற்குப் பதிலாக ‘இரு’ என்று உச்சரிக்கப்படுகிறார்கள் இதுபோன்ற மாற்றங்களை ஒலிப்புமுறை மாறுபாடு எனலாம்.

(எ.கா) தமிழ், மலையாளம்

‘இங்கே’ என்ற சொல் கன்னியாகுமரி மாவட்டத்தில் ‘இஞ்ச’ என்றும் தஞ்சாவூர் பகுதியில் ‘இங்க’ என்றும் திருநெல்வேலி பகுதியில் ‘இங்கனெ’ என்றும் ராமநாதபுரத்தில் ‘இங்கிட்டு’ என்று வழங்கப்படுவது நாம் அறிய முடியும்.

ஓர் உயிரினத்தையோ, தாவரத்தையோ, அல்லது ஏதாவது ஒரு பொருளையோ குறிப்பதற்கான பெயர்கள் தமிழகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் மாறுபடுவது உண்டு. அதேநேரம் எழுத்துவழக்கு என்பது அனைத்துப் பகுதியினரும் உள்வாங்கிக் கொள்வது போன்று இருக்கும் ஆனால் பேச்சுமொழியைப் பொறுத்தவரை அப்படி அமைய வாய்ப்பு இல்லை.

### 3.3.4.2 ஒலியனியல் வேறுபாடு (phonemic variation)

ஒலியியல் வேறுபாடு என்பது சொல்லில் முதலிலோ அல்லது இறுதியிலோ, இடையிலோ மட்டும் மாறுபட்டுப் பயன்பட்டு வருவது ஒலியனியல் வேறுபாடு எனப்படும்.

எடுத்துகாட்டு:

‘மழ’ என்ற வாக்கில் ‘ழ’ என்ற எழுத்தை ‘ய’ வாக மாற்றி ‘மய’ என்று புதிய ஒரு சொல்லாய்ப் கூறுவதும், ‘மழ’ என்ற அர்த்தத்தில் தான் வடக்கன் கேரளத்தில் பயன்படுத்தி வருகின்றனர்.

தமிழ்நாட்டில் ‘மகன்’ என்ற சொல்லில் ‘க’ வை மாற்றி’ய’ வாக உச்சரிப்பார்கள் அதாவது மயன் என்று பேசி வருகின்றனர். (சென்னை வாழ் மக்கள்) இதே போன்று கேரளாவில் உள்ள தமிழர் வாழும் பகுதியான இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற இடங்களில் தமிழில் இவ்வாறு கூறுகின்றனர்.

அன்பு - அம்பு
ஒன்று - ஒன்னு
இரண்டு - ரெண்டு
பழம் - பயம்(சென்னை)
இழு - இசு (வட ஆர்க்காடு)
திருவிழா - திருவிஷா- (தென் ஆர்காடு)
பழம் - பளம் - (தென்மாவட்டம், இலங்கை)

### 3.3.4.3 உருபனியல் (morphology):

ஒரு சொல்லை இரண்டு விதமாகக் கூறினாலும் பொருள் மாறுபடாத நிலையை உருபனியல் எனலாம். அதாவது மலையாளத்தில் ‘அம்மையுடை’ என்பதை மாற்றி ‘அம்மையின்டெ என்று கூறினாலும் பொருள் வேறுபடுவதில்லை இதனை உருபனியல் வேறுபாடு என்பர்.

தமிழில் ‘என்னுடையது’ என்றாலும் ‘என்னது’ என்றாலும் பொருள் வேறுபாடு இல்லாமல் இருப்பதைக் காணமுடியும்.

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| அவனுடையது - அவனுது | அயாளுடை, அவன்டை அங்ஙயுடை |
| உறவினருடையது - சொந்தக்காரருடையது | |
| மனிதனுடையது - மாந்தனுடையது | |

### 3.3.4.4 மொழியின் சொற்கள் பற்றிய வேறுபாடு (lexical variation)

ஒரே பொருளைக் குறிக்கக்கூடிய ஒன்று வேறு வேறு பெயரில் அறியப்படுவது எடுத்துக்காட்டு

**பட்டி:** வடகேரளத்தில் ‘பட்டி’ என்றால் பெண்நாயை மட்டும் குறிக்கிறார்கள். அதே வேளையில் தெக்கன் கேரளத்தில் இரண்டு வகையான நாய்களையும் குறிக்கிறார்கள். மேலும் வட கேரளத்தில் ஆண்பட்டியை ‘நாய்’ என்று தான் கூறுவார்கள்.

இதேபோல தமிழில் மண்ணெண்ணை என்றால் தேவிகுளம் பகுதியில் தெரிவதில்லை. சீமை எண்ணெய் என்று கூறினால் தான் தெரியும். அதே போல் மாடு என்றால் சில பகுதிகளில் எல்லாவிதமான மாடுகளையும் கூறிக்கக் கூடிய வழக்கம் இருக்கிறது. சில பகுதிகளில் மாடு என்றால் பசுமாட்டையும், எருமை என்றால் எருமை மாட்டையும் குறிக்கும். இடுக்கி (வட்டவடை), பாலக்காடு.

### 3.3.4.5 சொற்பொருள் மாறுபாடு (semantic variation)

ஒரு சொல்லுக்கு இரு வேறுபட்ட பொருள் காணப்படுவது சொற்பொருள் வேறுபாடு என்பர்.

(எ.கா)

தொண்டு 1- தேங்காய் சிரட்டி (மலையாளம்)
2. சிறிய வழி

குண்டு 1- அணிகுண்டு (தமிழ்)

2. தடித்த குண்டான நபர்

படி - படித்தல்

Padi - அளவு கோல்

கம்பு - உணவு

- கோல்

### 3.3.4.6 சொல்லிணைவு (collocattion)

ஒரு செயலைப் பல்வேறு விதமாக் கூறுவது சொல்லிணைவு என்பர்: (எ.கா)

மலையாளத்தில் பூவைப் பறிப்பதற்குப் பலவிதமான சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.

பூ பொட்டிக்குக ( Poo pottikkuga)

பூ இறிக்குக (poo irikkuga)

பூ பிச்சுக (Poo Pichuga)

பூ நொட்டுக (Poo Nottuga)

பூ பறிக்குக (Poo Parikuga)

எல்லாம் ஒரே செயலைக் குறிப்பது.

**தமிழில்:**

தரிசு நிலத்தை உழுது விதை விதைப்பதற்கு வேண்டிப் பயன்படுத்த கூடிய சொற்கள் அதாவது

காடு கொத்தியாச்சா

காடு வெட்டியாச்சா

காடு உழுதாச்சா

காடு கீரியாச்சா

### 3.3.4.7 தொடரியல் வேறுபாடு (Syntax Variation)

தொடரியல் வேறுபாட்டில் செயபடுபொருள், எழுவாய், பயனிலையை மாற்றி எழுதினாலும் பொருளில் எவ்விதமாற்றமும் ஏற்படாது. தமிழில் ‘அம்மா முருகனை வீட்டிற்கு வருமாறு கூறினாள்’ இதனை மாற்றிக் கூறினாலும் பொருள் வேறுபடாது அதாவது ‘முருகனை அம்மா வீட்டிற்கு வருமாறு கூறினாள்’ இதே போன்று மலையாளத்தில்

அம்மா வீட்டிலேக்கு வந்நு

Amma Veettilekku vannu -என்பதை

வீட்டிலேக்கு அம்மா வந்நு

Veettilekku Amma vannu

என்று கூறினாலும் எந்தவித பொருள் மாற்றமும் ஏற்படாது இவ்வாறு பேச்சுமொழி மாற்றத்திற்கான காரணங்களை மொழியியல் அடிப்படையில் விளக்கமுடிகிறது.

### 3.4 பேச்சுமொழியின் செல்வாக்கு:-

இலக்கணத்தை எடுத்துக்கொள்வோமானால் பொதுமக்களின் பேச்சில் உள்ள இலக்கணக்கூறுகளே நாளடைவில் வெற்றி பெறுதல் காணலாம். எடுத்துக்காட்டாக வெறும்பெயர்ச் சொல்லாக வழங்கும் மரம், ஆடு, மாடு முதலியவற்றை ஒருமை என்றும், ‘கள்’, விகுதி சேர்ந்த மரங்கள், ஆடுகள், மாடுகள் முதலியவற்றை பன்மை என்றும் அறிஞர் வகுத்தனர். பேசும் பொதுமக்களோ பன்மையாகக் குறிக்கும் சொற்களைக் கூட கீழ்க்கண்டவாறு பயன்படுத்தினர். அதாவது

⇒ புத்து மரம்

⇒ ஏட்டு ஆடு

⇒ ஏழு மாடு

⇒ ஐந்து நாள்

என்று ‘‘கள்’’ விகுதி சேர்க்காமலே பன்மைப் பொருளில் வழங்கினர். பொதுமக்களின் முறையே மொழியில் வேரூன்றி நின்றதை கண்ட தொல்காப்பியனார். அஃறிணைப் பெயர் சொற்கள் பண்மைப் பொருளை உணர்த்தும்போது ‘‘கள்’’ விகுதி பெற்று நிற்றலும் உண்டு(பெறாமல் நிற்பது பெருபான்மையாக இருக்கிறது) என்று விதியும் வகுக்க நேர்ந்தது. ஆகவே பேச்சுமொழி செல்வாக்கு மிகுந்தது என்பதும் அதன் செல்வாக்கு மொழியின் இலக்கணத்திலும் காணப்படும் என்பது தெளிவாகும்.

### 3.5 மலையாள மொழியின் வினைச் சொற்களின் தன்மை:-

மலையாள மொழியில் திராவிட மொழிகளைப் போல வினைகளில் உள்ள பால் காட்டும் விகுதிகள் இல்லை என்பது மற்ற திராவிட மொழிகளுக்கும் மலையாளத்திற்கும் உள்ள பெரிய வேறுபாடு ஆகும். அதாவது வருகிறேன், வருகிறான், வருகிறது முதலிய பல

வினைவாய்ப்பாடுகளுக்கு ஈடாக மலையாளத்தில் பால்விகுதி அற்ற ''வருந்நு'' என்ற ஒன்றே உள்ளது. தமிழில் வெளிப்படையாக வரக்கூடிய வினை மலையாளத்தில் மயக்கத்தை ஏற்படுத்துகிறது. இதனைத் தமிழோடு ஒத்த இனமொழி என்று கூறுவதைவிட தமிழின் கிளைமொழி என்று கூறுவதே சிறந்தது என்று கால்டுவெல் போன்றோர் கருதுகிறார். மலையாளத்தின் பழைய இலக்கியம் தமிழிலக்கியம் போலவே உள்ளது. தமிழர்க்கு விளங்கும் மொழியாகவே பழைய மலையாளம் உள்ளது. மலையாளத்தின் முதல் இலக்கியமாகிய இராமசரிதம் தமிழ் ஒலியாகிய தமிழிலக்கியம் போலவே புதிய மலையாள இலக்கியத்தில் தமிழ் எழுத்துக்களாகிய பன்னிரண்டு உயிரும் பதினெட்டு மெய்யுமெ மிகுதியாக உள்ளன. கிரந்த எழுத்தை ஒட்டி மலையாளத்திற்கு எழுத்துக்கள் அமையவே பிற்காலத்தில் மற்ற ஒலிகளும் மிகப் பயின்று கலப்புற்றன அதோடு வடசொற்களும் கணக்கின்றிக் கலந்தன. இந்த மாறுதல் எல்லாம் 18, 19 ம் நூற்றாண்டுகளில் ஏற்பட்டவைகள் என்று கூற முடியும்.

### 3.6 மரூஉ சொற்கள்

நீண்ட சொற்களைக் சுருக்கி ஒலிப்பது உலகமொழிகள் எல்லாவற்றிலும் உள்ளது. சோழநாடு, அதன் தந்தை முதலியவற்றைப் பழங்காலத்தில் சோனாடு ஆந்தை முதலிய வடிவங்களாக்கி ஒலித்தனர். இக்காலத்திலும் ஆய்விட்டது, போய்விட்டது என்பவற்றை ஆச்சுது, போச்சுது என ஒலிக்கின்றனர். இவ்வாறு சொற்களின் வடிவு குறுகுதலை மரூஉ என்பர் இலக்கண நூலார்.

ஒலிக்கும் முயற்சியில் இரு குறுக்குவழி எனலாம் பேச்சுமொழி காலம் என்னும் ஓர் அளவு கருவி உடையது. ஒலிப்பதற்கு மிக்க நேரம் ஆகும். சொற்களைக் குறைந்த நேரத்தில் ஒலிக்கத் தக்கனவாக மாற்றுதலால் மரூஉ என்பது பயனுள்ள முயற்சி சிக்கனமாகக் கருதப்படுகிறது.

**ஊர் பெயரில் மரூஉ**

திருவனந்தபுரம் - Trivandrum

வண்டி பெரியாறு - பெரியாறு

போடிநாயக்கனூர் - போடி

**பெயரில் மரூஉ**

மணிகண்டன் - மணி

நரேந்திர மோடி - மோடி

### 3.7 பழக்கம் உடைய சொல்:-

பலமுறை வழங்கத்தக்க உடைய சொல் நீண்ட ஒலிகளால் ஒலிக்க வேண்டுவதாக இருக்கலாம், ஆயினும் பலமுறை வழங்கும் காரணத்தினாலேயே அது நாளடைவில் குறுகிய வடிவுடையதாக ஆகிவிடும். ஒரு சொல் எவ்வளவுக்கு எவ்வளவு மிகுதியாகப் பேச்சில் பயில்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அது குறுகிய வடிவம் பெறும். என்றோ தேவைப்படும் பொன்னாங்கண்ணி, கரிசலாம்கண்ணி முதலிய கீரைகளுக்கு நீண்டு ஒலிக்ககூடிய பெயர்கள் அமையலாம், ஆனால் நாள்தோறும் தேவைப்படும் வாழையிலைக்கு நீண்ட பெயர் வைத்தாலும் அது நிலைக்காது. (எ.கா)

இருக்கிறது, போய்விட்டது, ஆய்விட்டது, இருக்குது (இருக்கு) போச்சு ஆச்சுது(ஆச்சு) எனவே ஒரு சொல்லின் பயிற்சி மிகுதியை ஒட்டி அதன் வடிவம் குறுகும் எனக்காணலாம்.

### 3.8 காரணமுடைய சொற்கள்:

எல்லா சொற்களும் காரணம் அற்ற அறிகுறிகள் என்று கூறிவிட முடியாது. காரணம் ஒரு சில சொற்கள் சில காரணத்தோடு அமைவதுண்டு. எடுத்துக்காட்டாக அச்சமும் வியப்பும் மூலம் தோன்றுவது.

மூச்சை உள்ளே இழுத்தலும் - ஆ, ஒ, ஆ, ஓ, ஆஹா

தினமும் வெறுப்பும் கொள்ளும் போது<br>மூச்சை வெளியே விடுதலும் உண்டு } - சீ சே ப்பூ

உலகமொழிகள் பலவற்றிலும் உணர்ச்சிக் குறிப்புகளாக உள்ள இத்தகைய சொற்கள் காரணத்தோடு அமைந்திருக்கக் காண்கிறோம்.

### 3.9 காரணமில்லாச் சொற்கள்:

பெரும்பான்மையான சொற்கள் காரணமின்றி அமைக்கப்பட்டவை எந்த ஒரு தெளிவும் இல்லாமல் கண்மூடித்தனமாகச் சில சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதாவது நாற்காலி என்னும் சொல் காரணத்தோடு அமைக்கப்பட்டதாகத் தோன்றும். ஆயின் அதுவே எருமையைக் குறிக்கவோ, குதிரையைக் குறிக்கவோ வழங்கியிருப்பினும் பொருத்தமாகவே தோன்றும் தவிர அதின் உறுப்புகளாக உள்ள நால் (நான்கு) என்னும் சொல்லும கால் என்னும் சொல்லும் எக்காரணம் பற்றி அமைக்கப்பட்டன என்பது தெரியாது.

அதுபோல ‘‘நாய்’’ என்ற சொல் நா என்பதன் அடியாகப் பிறந்தது என்று காரணம் காணும்போது அழகுபட உள்ளது. ஆனால் அதன் அடிச் சொல்லாகிய நா என்பதற்குப் பொருட்காரணம் கூற முடியாது. இவ்வாறு பலச் சொற்கள் காரணமின்றி அமைந்து வழக்கில் வாழ்வு பெற்றுள்ளன எனலாம். இதனாலேயே தொல்காப்பியர்

‘‘மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா’’

(தொல்:சொல்:உரி:877)

இன்ன சொல்லுக்கு இன்ன பொருள் என்பதற்குத் காரணம் தெளிவாகவோ வெளிப்படையாகவோ இருக்காது என்பது தொல்காப்பியரின் கருத்தாக இருக்கிறது.

### 3.10 தமிழ் பேச்சுமொழியில் பிழையாக உச்சரிக்கப்படும் எழுத்துக்கள்

பேச்சுமொழி நாளுக்கு நாள் மாறுபாடு அடைவது உச்சரிப்பின் மூலம்தான் உச்சரிப்பு சொல்பவர்களுக்கு ஏற்றாற்போல் இருக்க வேண்டும் என்பதில்லை. கேட்பவருடைய நிலையைப் பொருத்து சில எழுத்துக்கள் மாறி ஒலிக்கும். ஒலி மனிதனின் உடலை ஓட்டி அமைவதாகும். நா முதலிய உறுப்புகளின் அசைவையும் மாறுதல்களையும் ஓட்டிப் பலவகை ஒலிகள் அமைகின்றன. சொல்லிலக்கணமும் சொற்றொடரிலக்கணமும் உடலியலோடு தொடர்பு இல்லாதவை அவை உள்ளத்தின் போக்கை ஓட்டி அமைவனவாகும். உள்ளம் பலவகையாய் மாறும் இயல்பினது போல ஒலிகளும் கேட்கும் திறனைப் பொருத்து பொறுத்து எழுதவேண்டி வரும். அத்தகைய மயக்கம் தரும் ஒலிகளை உன்னிப்பாகக் கையாண்டால் பேச்சுமொழி சிறந்து விளங்கும்.

#### 3.10.1 ல ள ழ வேறுபாடு

| | | |
|---|---|---|
| இலை | - | மரம், செடி, கொடியின், இலை |
| அலகு | - | பறவையின் மூக்கு |
| இளை | - | இளைத்தல் |
| அளகு | - | பெண்மயில் |
| அழகு | - | கவின், வனப்பு, எழில் |
| இழை | - | நூல் |
| தலை | - | ஓர் உறுப்பு |

| | | |
|---|---|---|
| தளை | - | விலங்கு |
| தழை | - | தழைத்தல் |
| வலி | - | வலிமை |
| வளி | - | காற்று |
| வழி | - | பாதை |

### 3.10.2 ர ற ஒலி வேறுபாடு

| | | |
|---|---|---|
| அரி | - | திருமால், சிங்கம், காய்களை அரி |
| அறி | - | அறிந்து கொள் |
| கறி | - | உணவுக்குச் சேர்த்து உண்பது, இறைச்சி |
| கரி | - | அடுப்புக்கரி |
| உரவு | - | வலிமை |
| உறவு | - | சுற்றம் |
| திணை | - | ஒழுக்கம் |
| தினை | - | உணவு |

### 3.10.3 ந, ண, ன, ஒலி வேறுபாடு:

| | | |
|---|---|---|
| ஆணி | - | இரும்பால் ஆன ஆணி |
| ஆனி | - | தமிழ் மாதம் |
| முந்நாள் | - | மூன்று நாள் |
| முன்னால் | - | முந்தைய நாள் |

இவ்வகையான எழுத்துக்களைப் பேச்சுமொழியிலும் கடைபிடிக்க வேண்டும் என்பது மொழியின் தேவையாக அமைகிறது.

## 3.11 ஒலியொற்றுமையுடைய சொற்களின் ஒற்றுமையும் வேற்றுமையும்

- தமிழ் மலையாள இறந்தகால வினைவடிவங்கள் இருமொழியிலும் ஒன்றுபட்டுள்ளது. (எ.கா) அவன் வந்தான்

  அவன் வந்நு
- இரு மொழிகளிலும் பொதுச்சொற்கள் அதிகமாக இருப்பதைக் காணமுடிகிறது.
- பெயர் மற்றும் வினை வடிவங்களில் ஒரு சில சொற்கள் ஒன்றுபட்டும், வேறுபட்டும் வருகிறது.

  (எ.டு) குட்டி–பெயர் ( தமிழ், மலையாளம்)

  தடவு–தமிழில் (வினை), மலையாளம் (பெயர் மற்றும் வினை)
- தமிழ் மலையாள மொழியில் ஒரு சொல்லுக்குப் பல்வேறு வகையான பொருள் இருப்பினும், ஒரு மொழியில் முதன்மைப் பொருளும்,

மற்றொரு மொழியில் அகராதியின் இரண்டாம், மூன்றாம் பொருளும் பயன்பாட்டில் இருப்பதைக் காணமுடிகிறது.

- இரண்டு மொழிகளிலும் வேர்ச்சொல் ஒன்றுபட்டும், பொருள் வேறுபட்டும் காணப்படுகிறது.

  (எ.கா) வேல் - வேர்ச்சொல் வேலை – (தமிழ்), வேல– (மலையாளம்)

- தமிழில் விரிந்த பொருளாக வரும்சொல் மலையாளத்தில் குறுகிய பொருளாக வருகிறது.

| | | |
|---|---|---|
| (எ.டு) நாடு | - | இந்திய (தமிழ்) |
| நாடு | - | மாவட்டம், பஞ்சாயத்து (மலையாளம்) |
| மக்கள் | - | அதிகமான (தமிழ்) |
| மக்கள் | - | இரண்டு குழந்தையை அல்லது ஒரு குழந்தையை (மலையாளம்) |

- வடமொழிச்சொற்கள் இரண்டு மொழியிலும் ஒன்றுபட்டும் பொருள் அடிப்படையில் வேறுபட்டும் காணப்படுகிறது.

  (எ.கா) புருஷன், சம்சாரம், பத்தி

- தமிழ் அகராதியில் இல்லாத சொல் தமிழ் பேச்சுவழக்கில் இருக்கிறது. (எ.கா) அச்சன்.

**தொகுப்புரை**

தமிழ் மலையாள பேச்சுமொழிச் சொற்களின் தன்மைகளைப் பற்றி இவ்வியல் எடுத்துக்கூறுகிறது. ஒலியொற்றுமையுடைய சொற்கள் இருமொழியிலும் காணப்படுவதால் அவைகளில் பெயர் மற்றும் வினை அடிப்படையில் (அகராதிகளை முன்வைத்து) எவ்வாறு மாற்றம் நிகழ்கிறது என்பதை இவ்வியல் ஆராய்கிறது.

தமிழ் மலையாளப் பேச்சுமொழிச் சொற்களைப் பொருள் அடிப்படையில் விளக்கி அச்சொற்கள் தொல்காப்பியம் முதல் சங்க இலக்கியங்களில் பயின்று வரும் விதத்தை எடுத்துரைக்கிறது. மேலும் அச்சொற்களுக்கு அகராதிகள் தரும் பொருள்களை வரிசைப்படுத்தி அவற்றோடு ஒப்பிட்டும் பேச்சுவழக்கில் பயின்றுவரும் முதன்மைப் பொருள் அகராதிகளில் எவ்விதத்தில் அமைந்துள்ளன என்பதையும் இவ்வியல் ஆராய்கிறது.

இரு மொழிகளிலும் சொற்கள் ஒன்றாக இருப்பதையும் பொருள்வடிவில் நேர்- எதிராக அமைவதையும் காணமுடிகின்றன அதாவது (கழிவு–என்ற

சொல்லுக்குத் தமிழில் - குப்பை என்ற பொருளிலும் மலையாளத்தில் கழிவு – என்பதற்கு அறிவு என்ற பொருளையும் வழங்குகிறது)

மலையாளச் சொற்களின் பொருள் பெரும்பாலும் தமிழில் பயன்படுத்தப்பட்ட இலக்கியவழக்காகவும், அருகிய வழக்காகவும் இருந்தவை மலையாளத்தில் முதன்மைப்பொருளாக இடம் பெறுகிறது என்பதை இவ்வியல் ஆராய்கிறது.

(எ.கா)

மடி - சோம்பேறி (இலக்கிய வழக்கு–கலி (35-1)

பட்டி - நாய் (அகராதி, பிங்கலம்) அ.வ

தை - சிறயசெடி (க்ரிய அகராதி ) அ.வ

இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மாவட்டங்களில் பேசக்கூடிய மலையாள பேச்சுமொழியில் சிற்சில மாற்றங்கள் இருப்பதை அவர்கள் பயன்படுத்தும் சொற்களின் தனித்தன்மையை வைத்து அறியமுடிகிறது.

(எ.கா) ஞங்கள் - நிங்க (பாலக்காடு)

ஞங்கள் - ஞங்க (இடுக்கி)

குட்டி - அப்பி (திருவனந்தபுரம்)

பேச்சுமொழி மாற்றத்திற்கான காரணங்களை மொழியியல் அடிப்படையில் வகைப்படுத்தி ஏழு நிலைகளில் ஆராய்கிறது. அதாவது ஒலிப்புமுறை மாறுபாடு, ஒலியனில் மாறுபாடு, உருபனியல், மொழியின் சொற்கள் பற்றிய வேறுபாடு, சொற்பொருள் மாறுபாடு, சொல்லிணைவு, தொடரியல் வேறுபாடு, போன்ற நிலைகளில் இவ்வியல் ஆராய்கிறது. மேலும் பேச்சுமொழியில் பன்மைச் சொற்கள் ஒருமைச்சொற்களாகப் பயன்படுகிறது என்பதையும் ஆராய்கிறது. (எ.கா) பத்து மரம், பத்து ஆடு.

மலையாள மொழியின் வினைவடிவம், மொழியில் ஏற்படும் மரூஉ சொற்கள், காரணமுடைய, காரணமில்லாச் சொற்கள் போன்றவற்றை ஆராய்ந்து இறுதியாக பெச்சுமொழியில் (உச்சரிப்பில்) தவறாகப் பொருள் ஏற்படக் காரணமான சில எழுத்துக்களை எடுத்துக்காட்டுடன் இவ்வியல் ஆராய்கிறது.

## இயல் - 4

## தமிழ் மலையாளப் பேச்சுமொழியில் ஒலியொற்றுமை பொருள் வேற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் ஆய்வு

தமிழும் மலையாளமும் திராவிட மொழிகளுள் நெருங்கிய தொடர்புடைய மொழிகள். தமிழில் அருகி வழங்கும் சங்கத் தமிழ்ச்சொற்கள் பல இன்றும் மலையாள மொழிப் பயன்பாட்டில் உள்ளன. எனவே மலையாளமொழி சங்கத்தமிழ்ச் சொற்களின் பாதுகாப்புப் பெட்டகமாக விளங்குகிறது என்று கூறினால் அது மிகையன்று. இத்தகைய நெருங்கிய தொடர்புடைய இவ்விருமொழிகளுக்கான சொற்கள் இரு மொழியிலும் ஏராளமாக உள்ளன. அவற்றை ஒலியொற்றுமையுடைய சொல் அடிப்படையில் தேர்வுசெய்து அவை சூழலைப் பொறுத்து இருமொழியிலும் எவ்வாறெல்லாம் மாற்றத்தையும் பயன்பாட்டையும் கொடுத்து வருகிறது என்பதை இவ்வியல் ஆராய்கிறது.

தற்காலத்தில் கட்டமைக்கப்படும் பொருள் உணர்த்துவதற்குக் கடினமாக அமைந்த சொற்கள், வெளிப்படையாகப் பொருள் தெரியும் சொற்கள், என அனைத்துச் சொற்களும் அகராதிகளின் பொருள் உணர்த்தும் பகுதியில் இடம்பெறும். ஆனால் தொல்காப்பியர் காலச்சூழலில் அகராதி என்னும் கருத்தாக்கம் கடினச் சொற்களுக்கு மட்டும் பொருள் தருவதாய் இருந்தமையைத் தொல்காப்பிய நூற்பா எடுத்துக்காட்டுகிறது.

''வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன''

(தொ-சொல்-298)

எல்லோருக்கும் வெளிப்படையாகப் பொருள் தெரியக்கூடிய சொற்களை எடுத்துக் கூறவேண்டியதில்லை. மாறாக வெளிப்படையாக் பொருள் தெரியாத கடினமான உரிச்சொற்களை மட்டும் தேர்வு செய்து அவற்றிற்கு விளக்கம் கொடுக்க வேண்டும் என்கிறார் தொல்காப்பியர். உரிச்சொற்களையே தொல்காப்பியர் அருஞ்சொற்கள் என்று கூறுகிறார்.

## 4.1 ஒப்புருச் சொற்களை இனம் பிரித்தல்

சொல்லின் வடிவால் வேறுபட்டு ஒப்புமையுடைய பொருளை உருவாக்கும் சொற்கள் ஒப்புருச்சொற்கள் ஆகும். ஒரே பொருளில் வரும் வெவ்வேறு வடிவுடைய இச்சொற்கள் தனக்கேயுரிய தனித்த பொருளையும் கொண்டிருக்கும்.

''தடவுங் கயவும் நனியும் பெருமை'' (சொல்- 320 (சேனா)

அவற்றுள்

தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும் - (சொல் - 321)
கயவென் கிளவி மென்மையும் ஆகும் - (சொல் - 322)
நளியென் கிளவி செறிவும் ஆகும் - (சொல் - 323)

தொல்காப்பிய உரியியலில் அமைந்துள்ள மேற்கண்ட நூற்பாக்களில் முதல் நூற்பா, தட, கய, நளி என்ற மூன்றும் பெருமை என்னும் பொருளுடையன என்று விளக்குகிறது. இரண்டாம் நூற்பா ''கட'' என்ற சொல்லுக்குப் பெருமை என்பதனோடு தொடர்பில்லாத 'கோட்டம்' என்னும் பொருள் உள்ளமையைக் காட்டுகிறது. அது போலவே 'கய' என்ற சொல்லுக்கும் பெருமை மற்றும் தொடர்பில்லாத 'மென்மை' என்னும் பொருள் உள்ளமையையும் அதற்கடுத்த நூற்பாவழிப் பெறப்பட்டுள்ளது. தொடர்ந்து 'நளி' என்ற சொல்லுக்குச் 'செறிவு' என்ற பொருளையும் உணர்த்துகிறது. தட, கய, நளி என்ற சொற்கள் உணர்த்தும் வெவ்வேறு வகைப் பொருட்களை ஒரே நூற்பாவில் வைக்காது பிரித்து வைத்துள்ளமை ஒப்புருச் சொல்லின் பகுப்பாக முடிகின்றது.

தொல்காப்பிய உரியியலில் மட்டுமல்லாது சொல்லதிகார இடையியலிலும் பொருளதிகார மரபியலிலும் சொற்பொருளை விளக்கும் தன்மையில் சில நூற்பாக்கள் இடம் பெற்றுள்ளன. இடையியலில் உம், ஒ, ஓ உள்ளிட்ட இடைச்சொற்களின் பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மரபியல் சொல் வழங்கும் பயன்பாட்டுச் சூழலைக் கருத்தில் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இதில் சொல் வழங்க வேண்டிய முறையினையும் சொற்களுக்கு மரபாகப் பயின்றுவரும் பொருள்களையும் தொல்காப்பியர் தொகுத்துள்ளார்.

### 4.1.1 சொற்பொருள் விவரிப்பு – முறைகள்:

'எல்லா சொல்லும் பொருள் குறிக்தனவே'

(சொல்-155 -சேனா)

பொருளை வெளிப்படுத்தியும், தன்னை வெளிப்படுத்தியும் வருதல்

(சொல்-156 சேனா)

தன்னால் உணர்த்தப்படும் பொருளை நேரடியாகவும், குறிப்பாகவும், வெளிப்படுத்துதல் (சொல் -157 சேனா)

இவை அனைத்தும் சொல்லுக்குரிய அடிப்படைப் பண்புகள் எனத் தொல்காப்பியரால் குறிக்கப்பட்டவை. சொல் குறித்துத் தொல்காப்பியர் தந்துள்ள இவ்விளக்கங்களில் பொருள் என்பதே மிக முக்கியமான கூறாக இடம் பெற்றுள்ளன. இது சொல்லுக்கும் அது உணர்த்தும் பொருளுக்குமான மிக நெருக்கமான தொடர்பைக் காட்டி நிற்கின்றது. நெருக்கமான இத்தொடர்பின் காரணமாகச் சொல்லுக்கும் பொருளுக்குமான உறவு சொல்லானது பொருளை வெளிப்படுத்தும் முறைமைகளை அறியலாம்.

எல்லா சொல்லும் பொருள் குறத்தனவே - (சொல் -155, சேனா) இவற்றில் பெயர், வினை, இடை, உரி எனச் சொற்கள் நான்கு வகைப் படும். அவை அனைத்தும் பொருள் குறித்தே வரும் (பொருளற்ற எழுத்துக்களின் கூட்டம் சொல்லாகக் கருதப்படுவதில்லை)

**சொற்கள் பொருள் உணர்த்தும் முறை :-**

பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர்

- (சொல்-156- சேனா)

இவற்றில் சொற்கள் தம்மையும் உணர்த்தும், தம்மின் வேறாகிய பொருளையும் உணர்த்தும் என்பது இந்நூற்பாவின் வாயிலாக அறிய முடிகிறது.

### 4.1.2 சொற்கள் பொருள் உணர்த்தலின் வகைகள்

"தெரிபுவேறு நிலையிலும் குறிப்பில் தோன்றலும்
இருபாற்று என்ப பொருண்மை நிலையே"

(சொல்-157-சேனா)

இவற்றில் சொற்கள் பொருள் உணர்த்துகின்ற போது

1. வெளிப்படையாகவும் அத்தன்மையின்றி பொருளை விளக்கும்
2. சொல்லோடு கூடிய குறிப்பாலும் பொருளை வெளிப்படுத்தும்

இவ்வாறு கூறப்பட்ட இரு வகையிலும் சொற்கள் பொருள் உணர்த்தும் என்று சொல்லுவர் புலவர்.

(எ.கா) அவன், இவன், உவன், வந்தான், சென்றான், இச்சொற்கள் உயர்திணை ஆண்பால்

ஒருவர் வந்தார் - என்பதில் ஒருவர் என்பது ஆண்பால், பெண்பால் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது. சொல் உணர்த்தும் பொருளை எவ்வாறு விளக்க வேண்டும் என்பதையும் தொல்காப்பியரால் சொல்லிலக்கணப் பரப்பினுள் பேசப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

**4.1.3 சொல் - பொருள் - தொடர்பு :**

சொல் குறிப்பிட்ட ஒரு பொருளை உணர்த்துவதற்குக் காரணம் என்ன என்பது பற்றியும் சொல்லுக்கும் அது உணர்த்தும் பொருளுக்கும் இடையே அமையும் உறவு பற்றியும் சிந்தித்த தொல்காப்பியர்.

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" – (சொல் 314-சேனா) என்ற நூற்பாவின் வழிச் சொல் குறிப்பிட்ட ஒரு பொருளை உணர்த்துவதற்குரிய காரணத்தைக் கண்டறிவது கடினமான பணி என்றே கூறுகிறார்.

சொல் ஒரு பொருளை உணர்த்துவதற்குக் காரணம் உண்டு என்பதும் அக்காரணம் எளிதில் புலனாகாது என்பதும் தொல்காப்பியர் மற்றும் உரையாசிரியர்களின் கருத்துக்களாக உள்ளன.

**4.1.4 பொருள் விளக்க முறைமைகள் :**

தொல்காப்பியத்தில் உரியியலின் முதல் இரண்டு நூற்பாக்களிலும், இறுதி எட்டு நூற்பாக்களிலும் உரிச்சொற்களின் பொருளை விளக்கும்போது சிந்திக்க வேண்டிய சிலவற்றைத் தொகுத்துள்ளார்.

"மெற்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியாள் புணர்த்தனர் உணர்த்தல்
தக்க மரபின் தோன்றுமன் பொருளே"

-(சொல்-389-சேனா)

உரியியலின் பிற்பகுதியில் அமைந்துள்ள இந்நூற்பா உரிச்சொற்களுக்குரிய பொருளை விவரிக்கும் முறையைக் குறிக்கிறது. இந்நூற்பா உரையில் “பொருண் மேற் சொல்லப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும் முன்னச்சொல் பின்னைச்சொல் நோக்கி அதற்கு இயைந்த மொழிநாடி அவற்றோடு புணர்ந்து உணர்த்துக என விளக்கியுள்ளார்.

வழக்கில் இல்லாத சொற்களுக்கான பொருளை வழக்கிலுள்ள சொற்களைக் கொண்டு விளக்க வேண்டும். பொருள் விளக்கம் செய்யப்பெற வேண்டிய சொல்லின் முன்னும் பின்னும் வருவனவற்றையும் ஆராய்ந்து பொருள் விளக்கம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யும்போது ஒத்தமொழியால் (ஒரு பொருட் பலசொல்) அச்சொல்லை விளக்கவேண்டும். இதுபோன்றவை தொல்காப்பியர் தரும் விளக்கங்கள். தொல்காப்பியர் சொன்ன இவ்விளக்கங்கள் உரிச்சொல்லின் பொருள் விளக்கத்திற்கு மட்டுமல்லாமல் எல்லாச் சொற்களின் பொருள் விளக்கத்திற்கும் பொருந்தும்படி உள்ளன.

### 4.1.5 தமிழ்ச் சொற்பொருள் விளக்க மரபு

தமிழ்ச் சொற்பொருள் விளக்க மரபு தொல்காப்பியத்திலிருந்தே தொடங்குகிறது. சொற்களுக்கானப் பொருளை விளக்கும் பண்பு தமிழின் முதல் நூல் எனக் கருதப்படும் தொல்காப்பியத்திலேயே காணக்கிடைக்கின்றது. தமிழில் காணப்படும் இச் சொற்பொருள் விளக்க மரபை இலக்கண நூல்களில் அமைந்துள்ள உரியியல் மரபு, நிகண்டு மரபு, அகராதி மரபு, என்ற வரிசையில் அணுகுவது பொருத்தமாக அமையும். சொல்லின் பொருளை விளக்குதல் அடிப்படைக் கோட்பாட்டில் உருப்பெற்ற உரியியல்கள், நிகண்டுகள் அகராதிகள் என்னும் இவற்றின் வரிசையில் சொற்பொருள் விளக்குவதை ஒரு கூறாகக் கொண்ட இலக்கண இலக்கிய உரைகளை இணைத்துப் பார்ப்பது பொருத்தமுடையதாகாது. இருந்தபோதிலும் தமிழ் இலக்கண இலக்கிய உரைகளில் காணப்படும் சொற்பொருள் விளக்கங்கள் மேற்சொன்ன இலக்கண உரியியல்கள் நிகண்டுக்கள் அகராதிகள் ஆகியவற்றோடு ஒப்பவைத்து எண்ணத்தகும் வகையில் அமைந்துள்ளன என்பதும் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று.

தொல்காப்பிய உரைகளில் உரையாசிரியர்களால் செய்யப்பட்ட சொற்பொருள் விளக்க முறைகளைப் பார்ப்பதற்கு முன் தொல்காப்பிய உரியியலிலும், இளம்பூரணர் காலத்திற்குமுன் தோற்றம் பெற்று விட்ட திவாகரநிகண்டிலும் சொற்பொருள் விளக்கங்கள் எவ்வாறு செய்யப்பட்டுள்ளன எனப் பார்ப்பது தமிழ்ச் சொற்பொருள் விளக்க மரபை ஒன்றாகப் புரிந்து கொள்ள உதவும்.

### 4.1.6 சொல்வகைப்பாடு பற்றித் தொல்காப்பியர்

பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லி னாகும் என்மனார் புலவர்.

- (சொல் -156 சேனா)

சொல் என்பது வடிவம், பொருண்மை என்ற இரு கூறுபாடுகளையும் கொண்டுள்ளதாகத் தொல்காப்பியம் கூறுகிறது. இங்குப் பொருண்மை என்பது சொல் உணர்த்தும் பொருள் சொன்மை என்பது சொல்லின் இலக்கண வகைபாடு. சொல்லிலக்கணமும் இவ்விரு தன்மைகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. பெயரியல், வினையியல், வேற்றுமையியல் உள்ளிட்டவை சொல்லின் வடிவத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து விளக்க உரியியல் சொல் உணர்த்தும் பொருளை விளக்குவதாக அமைக்கப்பட்டுள்ளது. சொல் உணர்த்தும் பொருளைத் தெரிந்துகொள்ள அதன் இலக்கணச் செயல்பாடும் சொல்லின் இலக்கண வகையை முடிவு செய்ய அதன் பொருண்மையும் இன்றியமையாதவை என்பதைத் தமிழ் மரப்பிலக்கணங்கள் உணர்த்தி நிற்கின்றன.

### 4.1.7 சொற்பொருள் சிந்தனைகள் தொல்காப்பியர் வழி

‘பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே’

(சொல்-391)

பொருளுக்குப் பொருள் எனப் பார்க்க நேரின் அது வரம்பற்றதாகத் தொடரும். இதன் மறுதலையாக, பொருள் கொள்தல் என்பதே ஒரு சாத்தியமற்ற நிகழ்வு எனக்கூறலாம். அப்படியெனில் பொருள் கொள்ளுதல் என்பது ஒரு குறிப்பிட்ட அல்லது நமக்குத் தேவையான இடத்தில் பொருள் கொள்வதை நிறுத்திக் கொள்வதன் மூலமே, ஒரு சொல்லிற்கான பொருளைப் பெறமுடியும் ஒரு சொல்லிற்கான பொருள் என்பது முழுமுதலானதில்லை. சார்புத்தன்மை வாய்ந்ததே. பொருளை அறிதல் என்பது தோராயமான நிகழ்வு.

அல்லது பொருள் என்பது ஒரு சொல்லின் பண்பாக இருப்பதில்லை. அது ஒரு வகை அறிதலினால் உருவாகிறது. அடிப்படையில் சொற்களுக்குப் பொருள் இல்லை. பொருள் என்பது ஒன்றைப் பொருள் கொள்ள முனையும்போதே உருவாகிறது.

“மொழிப் பொருள் காரணம் விழிப்பத் தோன்றா” (சொல் -394)

மொழிப் பொருளுக்கான காரணம் தெளிவாகவோ வெளிப்படையாகவோ தோன்றுமாறில்லை என்று இதனைப் பொருள் கொள்ளலாம். இதில் மேற்கூறிய கருத்து வலிமை அடைகிறது. ஒரு சொல்லிற்கான பொருளை அறிய முடியும். ஆனால் அதற்கான காரணம் வெளிப்படையாகத் தோன்றாது. காரணத்தை அறிவது என்பது சொல்லின் உள்ளார்ந்த அமைப்பை அறிவதன் மூலமே சாத்தியம்.

‘எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே’

(சொல் - சூத் - 155)

இதனைச் சொற்கள் பொருள் குறித்து வருபவையே தவிர பொருளை (அர்த்தத்தை) ஏற்று வருவதில்லை. சொற்கள் அர்த்தத்தைக் குறிப்பால் மட்டுமே உணர்த்துபவை என்பதாகப் பொருள் கொள்ளலாம். அடிப்படையில் சொற்களுக்குப் பொருள் இல்லை. பொருள் என்பது சொற்களின் இடுகுறித்தன்மையால்தான் (ஸ்விஷ் மொழியியலாளர் பெர்டினாண்ட் சசூர் சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் (அர்த்தத்திற்கும்) இடையில் உள்ள உறவு இடுகுறித்தன்மை (arbitrary கொண்டது என்கிறார்). பொருள் என்பது சொல்லின் தன்மையால் அடையப்பெறுவதாகும்.

“பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும” (சொல்-156)

சொல்லிற்குப் பொருண்மை என்றும் சொன்மை என்றும் இரண்டு பண்புகள் இருக்கின்றன. இது சொல் என்பதின் உள்ளார்ந்த அமைப்பை விளக்க முனைகிறது. அதாவது சொல்லானது பொருண்மை என்கிற பொருள் சார்ந்த பண்பும் சொன்மை என்கிற ஓசை சார்ந்த பண்பும் கொண்டிருப்பதாக இதனை விளக்க முடியும். சசூர் முன்வைத்த குறிப்பான (significer) மற்றும் குறிப்பீடு (signified) என்பதைத் தமிழவன் சொன்மை. பொருண்மை என்று தொல்காப்பியக் கருத்தாக்கத்துடன் இணைத்து முதன் முதலாகத் தமிழில் விளக்கியுள்ளார். தொல்காப்பியம் குறித்தத் தமிழவனின்

குறியியல் ஆய்வுகள் முக்கியமானவை. அதாவது நவீன மொழியியலில் கூறப்படும் சொல் என்பது குறிப்பான் மற்றும் குறிப்பீடு ஆகிய இரண்டு பண்புகளுக்கு ஒப்பானதாக இதனைக் கருதலாம். சான்றாகக் 'காகம்' ஒரு பறவை என்பதை 'காகம்' என்கிற சொல்லின் பொருண்மைப் பண்பாகவும் கா (ககரநெடில்) க(ககர) குறில் ம்(மகர ஒற்று) ஆகிய மூன்றும் மூன்று ஓசையாகச் சேர்ந்து ஒலிப்பதைச் சொன்மை என்று கூறலாம். இந்தச் சொன்மை ஒரு பொருண்மையைக் குறிப்பதால் மட்டுமே பொருள் உண்டாகிறது. இதனை இந்த வரிசையில் ஒழுங்கமைத்து ஓர் ஓசையை உருவாக்குவது, அச்சொல்லை உருவாக்கிய சமூகமே இந்தச் சொல்லை இந்த முறையில் அறிந்து கொள்வது என்பது ஒரு சமூக அமைப்பில் உருவாகி வரும் பொது அறிதல் முறையாகும்.

'இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி' – (சொல் -2971)

பொருள் ஓசையினால், குறிப்பினால், பண்பினால் என்ற மூன்று விதமாக தோன்றலாம். அதாவது ஓசையாக (இசை போன்றவற்றை இதனுடன் ஒப்பிடலாம்), குறிப்பால் (நாட்டியம் மற்றும் பாவனைகள்) மட்டுமின்றி குறித்தல் தன்மையையும் குறிப்பதாகக் கொள்ளலாம், தோன்றலாம். அடுத்து பண்பினால் (ஒரு பொருளினுடைய தோற்றம் குணம் முதலியவற்றில்) தோன்றலாம். (குறிப்பு மனத்திற் குறித்துணரப்படுவது பண்பு – பொறியாலுணரப்படும் குணம்') – என்று சேனாவரையர் கூறுவர்..

## 4.2 சொற்பொருள் உறவும் சொல்வகைப்பாடும்

பொருள் - என்பதற்குச் சென்னைப்பல்கலைக்கழக அகராதியில் 1. வஸ்து 2. சொற்பொருள் 3. விஷயம் 4. உண்மைக்கருத்து 5. காரியம் 6. தத்துவம் 7. மெய்மை 8. நன்கு மதிக்கப்படுவது 9. கல்வி 10. அறிவு 11. கொள்கை 12. அறம். 13. பயன் 14. மோட்சம் 15. கடவுள் 16. திரவியம் 17. பலபண்டம் 18. பொன் 19. புத்திரன் 20. தந்திரம் 21. கணங்கு 22. உவமேயம் 23. உறுதி 24. அருத்தாபத்தி 25. அகமும் புறமுமாகிய திணைப்பொருள் 26. அர்த்தசாஸ்திரம் 27. தலைமை எனப் பலபொருட்கள் தரப்பட்டுள்ளன. இப் பல்பொருட்களில் உலகப் பொருள் (வஸ்து) சொற்பொருள், உண்மைக் கருத்து என்பன குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பொருள்கள் சொற்பொருள் பற்றிய சிந்தனை உருவாக அடிப்படையாய்

அமைவனவற்றுடன் கருத்து, உலகப் பொருள் எனும் இரண்டும் முக்கிய பங்கு பெற்றுள்ளன. இவை சொற்பொருள் கோட்பாடு பற்றி ஆராய்கையில் குறிப்பிடப் பெறும் சொற்பொருள் என்பதே மொழி பயன்பாட்டின் மையப்பொருள் ஆகும். இதுவே அகராதி உருவாக்கத்திற்கான அடிப்படை கூறாகவும் கூறலாம். எனவே சொற்பொருள் பற்றியும் சொற்களுக்கு இடைப்பட்ட பொருளுணர்வு பற்றியும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது.

### 4.3 பொருட் கோட்பாடுகள் :

செய்திப் பரிமாற்றத்திற்கான மொழி சாலைக்குறிகள், சைகைகள், நாட்டிய அபிநயங்கள் போலன்றிப் பரந்துபட்டது. திறந்த முடிவாய் இருந்து பல்வேறு சொற்களும் பல்வேறு பொருட்களும் உருவாக அடிப்படையாவது மொழியின் மிக விரிவான பயன்பாடே ஆகும். சொல், தொடர், வாக்கியம் எனும் அனைத்து கூறுகளும் பொருள் பொதிந்தவை. இவற்றின் ஒவ்வொரு பயன்பாட்டுச் சூழலுக்கும் தனித்த பொருட் பயன்பாடு உண்டு. இடுகுறி காரணம், மரபு, ஆக்கம் எனப் பல்வேறு நிலையிலும் படைக்கப்படும் சொற்கள் குறிப்பிட்ட கருத்தை அடிப்படையாகக் கொண்டனவாய் உள்ளன. ஒவ்வொரு சொல்லும் கொண்டுள்ள பொருட்பயன்பாடு அந்தந்த மொழிமரபைச் சார்ந்ததாய் அமையும் சொற்பொருள் எது என்பதை விளக்குவதிலும் பலவிதமான சிந்தனைகள் உருவாகியுள்ளன.

மொழி கோட்பாட்டில் பொருள் என்பது மயக்கத்தையும் அச்சத்தையும் கருத்து வேறுபாட்டையும் தரக்கூடிய ஒரு சொல்லாய் உள்ளது (1997:166) எனக் குறிப்பிடும் ஸ்டீபன்-உல்மன் சமீப ஆண்டுகளில் சொற்பொருள் வரையறை பற்றி மிகுதியாய் எழுதப்பட்டிருந்தாலும் நாம் உரிய விடையை நெருங்கவில்லை. எந்த ஒரு வரையறுத்த விடையும் இல்லை எனவும் குறிப்பிடுகின்றார்(1997-166)

### 4.4 சூழற்பொருட் கொள்கை (operational (or) contextual theory)

“பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்

சொல்லி னாகு மென்மனார் புலவர்” —(தொ-சொ—158)

சொற்கள் தனியாக இருக்கும்பொழுது அவற்றுக்குப் பொருளை வெளிப்படுத்தும் ஆற்றல் முழுவதுமாக இல்லை. பல சூழ்நிலைகளிலும்,

கருத்துக்களிலும் பொதுவாக வரக்கூடிய சொற்கள் சந்தர்பத்தைப் பொறுத்தே பொருளை உணர்த்துவன. எனவே சொல் அமைப்பு, தொடர் அமைப்பு அவை காணப்படும் சூழ்நிலை என்பன பொருள் வெளிப்பாட்டுக்குக் காரணமாகின்றன எனலாம். சில சொற்களே சந்தர்ப்பம் நோக்கிப் பலவகைப்பட்ட பொருள் நுட்பங்களைப் புலப்படுத்துகின்றன. எனவே சூழ்நிலையே பொருளைத் தெளிவாக்குகிறது என்பதை அறிய முடிகிறது.

ஒரு சொல்லின் பொருளைத் தீர்மானிக்க, குறிப்பாகச் சொல்லின் பல பொருட்களை வரையறுக்க முழுமையான சூழல்களோடு கூடிய மொழிச் சான்றுகளையே அகராதிக் கலைஞர் நாட வேண்டியுள்ளது. கைகழுவு, தலைமுழுகு (தலையில்) மிளகாய் அரை வாயைப் பிடுங்கு, வயிற்றெரிச்சல், மண்ணை அள்ளிப்போடு, வழுக்கிவிழு எனப் பலவாறாய்ப் பெருகிவரும் கூட்டுச் சொற்கள் பயன்பாட்டாளர் மனநிலை, பயன்பாட்டுச் சூழல் என்பனவற்றிற்கு ஏற்ப பொருள் தர வல்லனவாய் உள்ளன. இவ்வாறே உடன்போக்கு, சிலம்புகழி நோன்பு, வெறியாட்டு, மடலேறுதல், களவு, கற்பு, ஆற்றுப்படை, காஞ்சித்திணை, இயன்மொழி வாழ்த்து, வல்லான் முல்லை, மூதின் முல்லை, பெருஞ்சோற்று நிலை என அகத்திணையிலும் புறத்திணையிலும் வரும் பலசொற்களும் கலைச்சொற்களே. இவற்றின் பொருளை அறியத் தமிழின் அக புறப் பண்பாட்டை விளங்கிக் கொள்ள வேண்டும். சொல்லிணைவு, சொற்பயன்பாட்டு நிலை, பேசுவோர் கேட்போர் மனநிலை, குறிப்பிட்ட மொழிச் சமூகப் பண்பாடு, பேச்சு நிகழும் இடம், நடைவேறுபாடு என்பன போன்ற பல்வேறு சூழல்களும் சொல்லின் பொருளைத் தீர்மானிக்க அடிப்படையாகின்றன. எனவே சொல்லின் பயன்பாட்டுச் சூழல் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியதாயுள்ளது.

விட்ஜென்ஸ்டீன் சொல்லின் பயன்பாட்டை உள்வாங்கிக் கொள்வதன் மூலம் அதன் பொருளை வரையறுக்கலாம் எனக் கூறாமல் சொல்லின் பயன்பாடே அதன் பொருள் என்கிறார். மொழியைக் கருவி எனக் குறிப்பிடும் இவர் மொழியின் சொற்களைக் கருவிப் பெட்டியில் உள்ள கருவிகளோடு ஒப்பிட்டுக் கூறுகிறார் என்ற போதிலும் சொற்களின் செயற்பாடு கருவிகளின் செயற்பாட்டினின்றும் வேறுபட்டது எனவும் குறிப்பிடுகின்றார். கான் உல்மன் (1962-64) வரையறுத்த பயன்பாட்டையும் செயற்பாட்டையும் உடைய கருவிகளைப் போலன்றி மொழிச் சொற்கள் மனித

எண்ணங்களின் வளர்ச்சிக்கு ஏற்ப பல்வேறு பயன்பாட்டுச் சூழல்களை பெறுகின்றன. இவற்றின் பயன்பாடுகள் நாளும் மொழியில் பெருகிவருகின்றன.

பழங்குடி மக்களின் மொழியை ஆராய்ந்த மாலினோஸ்கி சொற்களின் பயன்பாட்டுச் சூழல்களை வலியுறுத்தியுள்ளார். ஒரு மொழிச் சமூகத்தின் பண்பாட்டை விளங்கிக் கொள்வதன் மூலம் தான் அம்மொழியின் சமூகப் பயன்பாடுகளையும் அவற்றின் பொருட்களையும் அறிய இயலும் என்கிறார். பர்த் (1997:174) இவர் சூழ்நிலைகளைப் பலவாய் வகைப்படுத்தித் தந்துள்ளார். ஒலிச்சூழல், இலக்கணச் சூழல், பேச்சுச்சூழல், சொற்சூழல் என்பன. இப்பல்வேறு சூழ்நிலைகளை விளங்கிக் கொள்ளும்போது தான் சொல்லின் பொருளை விளங்கிக் கொள்ள இயலும்.

அகராதி உருவாக்கம் சொற்களின் உண்மைப் பயன்பாடுகளை அடிப்படையாய்க் கொண்டது. ஓவ்வொரு சொல்லின் பொருளும் அகராதியில் வரையறுத்துத் தரப்படும். இப்பொருள் வரையறைக்கு மேற்குறிப்பிட்ட பலவகைப் பொருட்சூழல்களும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

(எ.கா)

பச்சை, சிவப்பு, மஞ்சள் போன்ற வண்ணங்களை (நிறங்களை) எடுத்து கொள்வோமானால் இவை சூழலுக்குத் தகுந்தவாறு பொருளை உணர்த்துவதை நாம் அறிந்ததே. இயற்கையில் பச்சை, சிவப்பு, மஞ்சள் என்பது நிறத்தை உணர்த்தும். அதே நேரத்தில் பயணம் செய்யும்போது சிக்னல் point வளைவுகளில் பச்சை என்பதற்குப் போ, பயணம் செய், கடந்து செல் என்று பொருளை உணர்த்தி நிற்கிறது. இதேபோல சிவப்பு- என்ற குறியீடு நில், நிறுத்து, போன்ற செய்திகளை நமக்கு உணர்த்துகிறது. அதைப் போலவே மஞ்சள் நிறம் தயார்நிலையில் இரு என்பதைப் குறியீடு மூலம் உணர்த்தி வருகிறது. இங்குச் சூழலே பொருளை நிர்ணயிக்கக்கூடிய (factor) சக்தியாகத் திகழ்கிறது. இதே சூழல் அரசியல் கொடிகளை பார்க்கும்போது வேறொரு பொருளை உணர்த்துகிறது. அதாவது பச்சை என்பது முஸ்லீம்களின் அடயாளக் கொடியையும், சிவப்பு என்பது கம்யூனிஸ்ட் கட்சியின் கொடியையும், மஞ்சள் என்பது மங்களத்தையும், ஈழவ சமுதாயத்தைப் பிரதிபலிக்கக்கூடிய SNDP-Aila கொடியாகவும் காட்சியளிக்கிறது. இதே போன்று நிறங்களே இன்னும் பலவிதமான

பொருள்களில் சூழலுக்குத் தகுந்தவாறு பயன்பட்டு வருகின்றது என்பதை அவற்றின் பொருளை வைத்து உணரமுடியும்.

இவ்வாறு சூழற்பொருட்கொள்கையின் மூலம் தமிழ் மலையாள மொழிகளிலும் கூட இந்த ஒரு அடிப்படையில் பொருள் மாற்றம் நிகழ்ந்திருக்கலாம் என்று அனுமானிக்க முடியும்.

(எ.கா)

### 4.4.1. வண்ணம் (பெயர்) இடைச்சொல்

வண்ணம் என்பதற்குச் சமகால தமிழ்மொழியில் ‘நிறம்’ என்ற பொருளையே எல்லா இலக்கியங்களிலும் காணமுடிகின்றன. இங்கு வண்ணம் என்ற சொல் நேரடியாக எல்லா இடங்களிலும் பயன்படுத்துவதில்லை. இதற்கு இணையாகக் ‘கலர்’ என்ற ஆங்கில பொருளையே சொல்லாகவும் தமிழ் பேச்சு வழக்கில் பயன்படுத்திவருகின்றனர். சில இடங்களில் வண்ணம் என்பது மரத்தினுடையை தடிமனை (யூக்காளிஸ்) அடையாளப்படுத்துகின்றது.

(எ.கா) வண்ணமுள்ள மரமாகக் கருதப்படுகிறது.
இந்த மரம் வண்ணம் குறைவாக இருக்கிறது.

சங்க இலக்கியத்தில் வண்ணம் என்பது பல்வேறு இடங்களில் பயன்று வந்திருக்கிறது. அதாவது அகம் -30:15, 57:13, 69:3, ஐங்கு: 34:3, குறிஞ்சி: 31:33, நல்: 148:1 ப.ப: 50:17, பரி:10:95, புற :1:9, போன்ற இடங்களிலும் காலங்காலமாக நிறம் என்ற ஒரே பொருளையே தந்து வருகிறது.

“நல்லிசை நனந்தலை யிரிய வொன்னார்
உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்தபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற”

(ச.இ. ப.ப : 50:17)

வண்ணம் என்பதற்கு க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி இரண்டு பொருள்களை எடுத்துரைக்கிறது. அதாவது

வண்ணம்[1] (பெ). நிறம் 1. (வண்ணக் காகிதம், வண்ணக் குடை)
2. நிறம் தரும் பொருள் வர்ணம்
(எ.கா.) (வீட்டில் எல்லா வேலைகளும் முடிந்துவிட்டன. வண்ணப் பூச்சு வேலைதான் செய்யவேண்டும்)

வண்ணம்[2] (இ.சொ.) (உ.வ) 1: (பெயரெச்சத்தின் பின்)

1.'முறையில்' என்ற பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்

(எ.கா) பிறருக்குத் தெரியாத வண்ணம் அந்தக் காரியத்தைச் செய்துவிட்டார்

2. (இறந்தகாலப் பெயரெச்சத்தின் பின்) குறிப்பிட்ட செயல் தொடர்ந்து நிகழ்வதைக் காட்ட அல்லது நிலையின் மிகுதியைக் காட்டபபயன்படும் இடைச்சொல்

(எ.கா) வாழ்த்துத் தந்திகள் வந்தவண்ணம் இருக்கின்றன. (2008:1198) இந்த சொல்ச் பிறமொழியான மலையாளத்தில் குண்டான, பருமனான, தடியான என்ற பொருளையே மக்கள் தம் பேச்சு வழிக்கில் மக்கள் கையாளுகின்றனர். வண்ணம் என்பதற்கு மலையாள அகராதியான சப்ததாரவலியில் மூன்று பொருள்களை வரையறுக்கிறது.

வண்ணம்[1] (இ.சொ.), ப்ராகரம் (எ.கா) பரஞ்சவண்ணம் ஈவண்ணம்.

வண்ணம்[2] (பெ) 1.தடி 2. புஷ்டி 3. வடிவு

வண்ணம்[3] வர்ணம், நிறம், ராகம் 2. அழகு 3. நன்ம

போன்ற பொருள்களை வரையறுக்கின்றன.

வண்ணம் என்ற சொல் தமிழில் நிறத்தையும் இடுக்கி மாவட்டத்தில் உள்ள சில இடங்களில் மரத்தினுடைய தடிமனை (யூக்காலிஸ் மர வியாபாரிகள்) உணர்த்தப் பயன்படுத்தினர். இந்தச் சொல் மலையாள மொழிக்கு வரும்போது மனிதனுடைய உடம்பின் வளர்ச்சியைச் சுட்டுகின்றது.

(எ.கா) (1) அவன் ஒருபாடு வண்ணம் வச்சு

(2) அவன்டெ வண்ணம் கொறஞ்சு

(3) வலியவன்டை வல்லம் துறக்கும் போழேக்கும் எளியவன்டெ வண்ணம் குறயும் (நெய்யாட்டின்கர, திருவனந்தபுரம்)

### 4.4.2 பட்டி (பெயர்)

பட்டி என்ற சொல் சங்க இலக்கிய நூலான கலித்தொகையில் இரண்டு பாடல்களில் பயின்று வருகிறது. இரண்டு இடங்களிலும் காவலில்லாதவன் என்ற பொருளை எடுத்துக் கூறுவதை இங்குக் காணமுடிகிறது. இவ்வாறான பொருள் தமிழ் மொழியில், பேச்சு வழக்கில் இல்லாமல் எழுத்துவழக்கிலும் இலக்கிய வழக்கிலும் நிலைப்பெற்று இருக்கிறது. பட்டி என்பதற்கு க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி ஐந்து பொருள்களை விளக்குகிறது.

பட்டி[1] (பெ) (அ.வ) சிற்றூர் கிராமம்

பட்டி[2] (பெ) - 1. பிறர் நிலத்தில் பயிர்களை மேயும் ஆடு மாடு ஆகியவற்றை அடைத்துவைக்குமிடம்

2. (இலங்கை வழக்கு), கிடை (வயல்களில போடப்படும்)

பட்டி[3] (பெ.) (சட்டை, பாவாடை, முதலிய உடைகளில்) விளிம்பை மடித்து தைக்கும் பகுதி; மடிப்புத் தையல்

பட்டி[4] (பெ). மாத்திரைகளை அல்லது குழாய் மாத்திரைகளைப் பாதுகாப்பாக வைத்து மூடப் பயன்படுத்தும் பிளாஸ்டிக் கண்ணாடித் தாள் போன்றவற்றைக் கொண்ட அட்டை

பட்டி[5] (பெ) (சுவர் மரச்சாமான்கள் போன்றவற்றில் வர்ணம் பூசும் வேலையைத் துவக்குவதற்கு முன்) அதன் பரப்பைச் சமப்படுத்தும் பொருட்டு பயன்படுத்தும் மெழுகு போன்ற பொருள்.

## 4.5 தமிழ் மொழியில் இலக்கிய சொல்லாகவும் மலையாள மொழியில் பேச்சுவழக்காகவும் மாறுதல்.

### பட்டி (பெயர்)

‘பட்டி’ என்பதற்குச் சமகால தமிழ்மொழியில் வீட்டின் பின்புறம் சிற்றூர் போன்ற பொருள்களில் வழங்கி வருகின்றனர். அதே வேளையில் மலையாள மொழியில் பட்டி என்பதற்கு ‘நாய்’ என்னும் பொருளில் வழங்கி வருகின்றனர். அதிலும் குறிப்பாக வடக்கன் கேரளத்தில் ‘நாய்’

என்றால் ஆண் நாயையும், பட்டி என்றால் பெண் நாயையும் குறிக்கும் வழக்கம் இருக்கிறது. பொதுவாகக் கேரளத்தில் 'பட்டி' என்றால் நாய் என்ற அடிப்படையில் பயன்படுத்தி வருகின்றனர். ஒலியொற்றுமையுடைய சொல்லான பட்டி என்பது பொருள் மாற்ற நிலையையும் ஒரு மொழியில் இலக்கிய சொல்லாகவும் மற்றொரு மொழியில் பேச்சுவழக்காகவும் மாறுவதை ஆராய வேண்டிய சூழல் உருவாகிறது.

### 4.5.1 பட்டி என்ற சொல் தொல்காப்பியத்தில்:-

தொல்காப்பிய மரபியலில் பட்டி என்ற சொல்லிற்குச் சமமாகப் 'பாட்டி' என்ற சொல்லே பயின்று வந்திருக்கிறது. அதாவது 'ஆ'காரம் நீட்டி ஒலிக்கிறது அதுவே பிற்காலத்தில் பட்டியாக மாறியிருக்கலாம். காரணம் தொல்காப்பியத்தின் பொருளும் மலையாளத்தின் பொருளும் ஒத்திருக்கின்றன. அதாவது

''பாட்டி என்ப பன்றியும் நாயும்
நரியும் அற்றே நாடினர் கொளினே.''

அதாவது பாட்டி என்பது பன்றி நாய் இவற்றிற்கு உரிய பெண்பால் பெயர்களாகும். நரிக்கும் இப்பெயர் ஆராய்ந்து பார்க்குமிடத்து உரியதாகக் கொண்டனர்.(2015:139)

### 4.5.2 பட்டி என்ற சொல் சங்க இலக்கியத்தில்

''சுடர்தொடீ இ கேளாய் தெருவில் நாம் ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
(ச.இ. கலி: 51:4)

அறுபட்டி எதிலார் கையெம்மை எள்ளுபு நீ தொட்ட
-(ச.இ. கலி: 84,20)

இவ்வாறாக க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் பயின்று வந்துள்ள பொருள்களும், தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கிய பொருளும் வேறுபட்டு வருவதைப் பார்க்கும்போது பட்டி என்னும் சொல்லினுடைய பொருள் நாளுக்கு நாள் ஒரே பொருளை வழங்காமல் மாற்றமடைந்து கொண்டிருக்கிறது என்பதை உணர முடிகின்றது. அதேபோல மலையாள

மொழியில் பட்டி என்பதற்குச் சப்த தாராவலி என்ற அகராதி மூன்று பொருள்களை வழங்குகிறது.

பட்டி[1] (பெ) 1. ஒரு வீட்டுமிருகம், நாய் (தெக்கன் கேரளத்தில் ஆண்பட்டி பெண்பட்டி எந்நு லிங்கபேதம் காணிக்கான் வேர்திரிச்சு ப்ரயோகம். 'பட்டி' நாய் வர்க்கத்தில் பெண்ணினெ குறிக்கான் அதிகம் ப்ரயோகம்.
2. அன்யனே ஆஸ்ரயிச்சு கழியுந்நவன் பௌருஷமில்லாத்தவன், உபஜீவன மார்க்கமில்லாத்தவன்
3. மோசப்பட்டது, தரம்தாழ்ந்தது (எ.கா) பட்டிக்குதிரை, பட்டிமாடு

பட்டி[2] (பெ) 1.தொழுத்து, ஆல
2. ஜோலிஸ்தலம்,
3. சூலி
4. ஆல்பார்ப்பு குறைந்த கிராமம்

பட்டி[3] (பெ) 1. செமந்ந பாச்சோட்டி
2. நெற்றியில் அணியுந்ந ஒருதரம் ஆபரணம், பட்டம்

இவ்வாறு சொற்களில் பொருள் மாற்றம் நிகழ்வது சூழலை வைத்துதான் என்பது தெளிவாகிறது. காரணம் வண்ணம், பட்டி என்ற சொல் பலவிதமான சூழலுக்கு உள்ளாகித்தான் பொருள்மாற்றத்தை ஏற்படுத்துகிறது என்பதை எடுத்துக்காட்டு வழி விளக்க முடியும்.

"வண்ண வண்ண கோலங்கள்" -இங்குக் கலர் என்ற பொருளை உணர்த்தி நிற்கிறது. கோலம் என்பது கலர்பொடிகளால் அலங்கரிக்கப்பட்டுக் காட்சியளிக்கக்கூடியது என்பது இயற்கையாக அறிய முடியும். அதே போல் "எங்க தோட்டத்துல இருக்கிற மரம் வண்ணமா இருக்கு" இந்த வாக்கியத்தில் 'வண்ணம்' என்ற சொல் பருமன் அல்லது தடிமன் என்ற பொருளை உணர்த்துகிறது. ஒரு மரம் மட்டும் மற்ற மரங்களை விட பெரியதாக இருக்கிறது. எதனால், என்றால், வண்ணத்தால் அல்லது பருமனால் என்பது தெளிவாகும். இவ்வாறு ஒரு சொல் பலபொருட்களை தருவது போல இருந்தாலும் அவை சூழல்களை முன்னிறுத்தியே பொருள் மாற்றத்தை ஏற்படுத்துகிறது என்பது ஆய்வின் வழி உணர்த்த முடியும்.

இதே போல பட்டி என்ற சொல்லிற்கும் தமிழ் மலையாள மொழிகளில் ஏராளமான பொருள்கள் இருப்பதைப் பேச்சு வழக்கு மற்றும் அகராதிகள் வழி அறிய முடிகின்றன. இவை ஒவ்வொரு விதமான சூழல்களுக்கு உட்பட்டு பொருள் மாற்றத்தை வடிவமைக்கிறது என்பது அறிய முடியும்.

**பட்டி**

→ அவனைப் பார்த்தா பட்டிக்காட்டன்மாதிரி இருக்கான்

→ பட்டித் தொட்டியெல்லாம் ஓம் பேச்சுத்தே

→ ஆடு மாட்டை பொய் பட்டியிலெ அடெ

→ அக்கா சட்டைக்குப் பட்டி வச்சு தைட தைடி

இவ்வாறு இந்த மூன்று வாக்கியங்களும் மூன்றுவிதமான சூழல்களில் மூன்றுவிதமான பொருள்களைத் தருகிறது. முதல் வாக்கியத்தில் சிற்றூர் என்ற பொருளிலும் இரண்டாம் வாக்கியத்தில் ஆடு மாடுகளை அடைக்கக் கூடிய இடம் என்ற பொருளிலும் மூன்றாவது வாக்கியத்தில் சட்டையை விளிம்பு வைத்து என்ற பொருளையும் உணர்த்தி நிற்கிறது.

### 4.6 சொற்பொருட்கூறுகள் :

சொல் உணர்த்தும் பொருள் மூவகையாய்ப் பாகுப்படுத்தப் பெறுகின்றது. 1. அடிப்படைப் பொருள் அல்லது கருத்துப் பொருள் 2. குறிப்புப் பொருள் 3. பயன்பாட்டெல்லை எனும் மூன்றுமே சொற்பொருட் கூறுகள் - சகுஸ்தா (1971:27) எல்லாச் சொற்களுமே இம்மூன்று வகையான பொருட்கூறையும் உடையவனாய் இருப்பதில்லை. சில அடிப்படைப் பொருளோடு குறிப்புப் பொருளையும், சில பயன்பாட்டெல்லையும் உடையனவாய் இருக்கும். இந்த மூன்றில் அடிப்படைப் பொருளே முக்கியமானது. இப்பொருட் கூறுகள் மூன்றுமே சொற்பொருளின் அங்கங்கள் என்பதால் இவை மூன்றையும் பதிவின் பொருட்பகுதியில் குறிப்பிட வேண்டும்.

1. இறந்தான் என்பதைச் செத்தான், மாண்டான், மரித்தான், துஞ்சினான், உயிர்துறந்தான், இயற்கை எய்தினார், சோற்றை மறந்தான், வாயைப் பிளந்தான், மண்டையைப் போட்டான், சிவலோகப்பதவி அடைந்தான், வைகுண்டப்பதவி அடைந்தார், இறைவனடி சேர்ந்தார், அதேபோல உண்

என்பது தின், சாப்பிடு மிசை, அருந்து, அமுதுவம், அயில், ஆர், புசி, குடி எனும் இரண்டு சொற்றொகுதிகளும் குறிப்பிட்ட பொருளையே தரும். ஒரு பொருட் பலசொற்களை உடையவை. முதல் தொகுதியில் அடங்கும் அனைத்துச் சொற்களும் இறத்தல் எனும் ஒரே பொருளைத் தருவன. அதாவது உயிர் உடலைவிட்டுப் பிரிதல் எனும் பொருள் தரும். இவற்றுள் இறந்தான் என்பது மட்டும் எவ்விதக் கூடுதல் குறிப்பும் இன்றி மேற்குறித்த பொருளை உணர்த்துகின்றது. எனவே இறத்தல் உயிர் உடலைவிட்டுப் பிரிதல் என்பதே இச்சொற்கள் அனைத்தும் தரும் அடிப்படைப்பொருள். தொடர்புகள் எல்லாவற்றிற்கும் மேலாகத் தனித்தனிச் சொற்களுக்கும் உலகின் தனித்தனிப் பொருட்களுக்கும் இடையே நிலவும் மொழிபேசுவோரால் உணர்ந்து கொள்ளப்பட்ட தொடர்பையே அடிப்படைப்பொருள் எனும் சொல்லால் குறிப்பிடுகிறோம் என்கிறார். சுருஸ்தா (1997:180) உண், தின் முதலான சொற்கள் வேறுவேறு பொருட் குறிப்புகளைக் கொண்டிருந்தாலும் இச்சொற்களைச் சொன்னவுடன் அவரவர் மொழித்திறன் வேறுபாட்டிற்கு ஏற்பத் தோன்றும் பொருள் ‘உணவை உட்கொள்ளுதல்’ என்பதே ஆகும். இவ்வாறு ஒரு சொல்லைச் சொன்னவுடன் எவ்விதச் சிக்கலும் இன்றி ஒருவர் அறிந்து கொள்ளும் பொருளே அடிப்படைப் பொருள்.

பயன்பாட்டு எல்லை என்பதைத் தவிர அடிப்படைப் பொருள் அல்லாத எல்லாவற்றையும் குறிப்புப்பொருள் எனும் சொல் உட்ப்படுத்தியுள்ளது என்கிறார் சுகுஸ்தா (1997:180) உணர்வுப்பூர்வமான வெளிப்பாட்டுச் சூழல்கள் இத்தகுக் குறிப்புப்பொருள் இந்தக்குறிப்பொருள் உருவாகக் காரணமாகின்றன. பயன்பாட்டாளரின் வெவ்வேறு வகையான மனப்பாங்குகளுக்கும் ஏற்பச் சில சொற்கள் அடிப்படைப் பொருளோடு கூடுதலாய்ப் பெற்றுவரும் செய்தியே குறிப்புபொருள் எனப்படும். மேலே காட்டிய சான்றுகளில் இறந்தான் என்பது தவிர எஞ்சிய அனைத்துச் சொற்களும் குறிப்புப் பொருள் உடையனவே. இறந்தான் ஏனும்சொல் ‘உயிர் உடலைவிட்டுப் பிரிதல்’ எனும் அடிப்படைப் பொருளைத் தவிர வேறு எப்பொருட் கூறையும் கொண்டிருக்கவில்லை. யாரின் இறப்பையும் சுட்டப் பொதுநிலையில் இச்சொல்லைப் பயன்படுத்தலாம். செத்தான் என்பது பேச்சுவழக்கில் மிகுதியும் பயன்படவல்லதாய்ச் சில சூழல்களில் பேசுவோன் மனக்குறிப்பையும் கொண்டுள்ளது. மண்டையைப்போட்டான்,

வாயைப்பிளந்தான், சோற்றை மறந்தான் என்பன கொச்சை வழக்குகளாய் உள்ளன. மாண்டான், உயிர் துறந்தான், துஞ்சினான் என்பன இலக்கிய வழக்குச் சொற்களாய் உயர்வழக்கு எனும் குறிப்பை உடையன. சிவலோகப்பதவி அடைந்தார், வைகுண்டப்பதவி அடைந்தார் என்பன இறந்தவர் சைவர், வைணவர் எனும் குறிப்பைக் காட்டுகின்றன. உயிர் உடலைவிட்டுப் பிரிதல் எனும் பொருளோடு கூடுதலாய் அமைந்த இத்தகைய பொருட்கூறே குறிப்புப் பொருள் எனப்பெறுகின்றது.

நடைவேறுபாடு, வட்டார வழக்குகள், இழிவழக்கு, கொச்சைவழக்கு, உயர் வழக்கு, மங்கல வழக்கு, இடக்கரடக்கல், குழுஉக்குறி, புதுவழக்கு, பழஞ்சொல் என்பன போன்ற பலவகை வழக்குக் குறிப்புகளும் குறிபபுப்பொருளுள் அடங்குகின்றன. இவையே அகராதியில் வழக்குக் குறிப்பான் அமைக்கக் காரணமாகின்றன.

குறிப்பிட்ட சில சொற்களைப் பொதுநிலையில் பயன்படுத்த இயலாது. குறிப்பிட்ட ஒருவரின் நிலையைச் சுட்ட சிலவற்றைப் பயன்படுத்தலாம். சில சொற்கள் குறிப்பிட்ட சில சமூக நிலையினர் மட்டுமே பயன்படுத்தத் தக்கனவாய் உள்ளன. தொல்காப்பியத்தில் ஈ, தா, கொடு எனும் மூன்று சொற்களும் குறிப்பிட்ட வழக்கு வரையறையுடன் அக்கால மொழியில் பயன்படுத்தப்பட்ட நிலைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இம்மூன்று சொற்களும் பிறரிடம் பொருளைக் கேட்டல் எனும் பொருள் உடையன. இப்பொருட்சூழலில் இம்மூன்று சொற்களை அனைவரும் பயன்படுத்த இயலாது என்பதே வழக்கு வரையான பிறரிடமிருந்து பொருளைக் கேட்டுப்பெற நினைக்கும் ஒருவர் கொடுப்போரைவிடத் தாழ்ந்தவராய் இருக்கையில் ‘ஈ’ எனும் சொல்லையும் கொடுப்பவரோடு ஒத்தவராய் இருக்கையில் ‘தா’ எனும் சொல்லையும், கொடுப்பவரைவிட உயர்ந்தவராய் இருக்கையில் ‘கொடு’ எனும் சொல்லையும் பயன்படுத்தவேண்டும் என்பதே இவ்வழக்கு வரையறை. இவ்வாறு குறிப்பிட்டசொற்களைக் குறிப்பிட்ட சூழல்களில் பயன்படுத்த வேண்டும் என்பதே இவ்வழக்கு வரையறை. இவ்வாறு குறிப்பிட்ட சொற்களைக் குறிப்பிட்ட சூழல்களில் பயன்படுத்த வேண்டும். இலக்கியத்தில் 1. இது அனைவரின் சிறப்பையும் சுட்டும் சொல்லாய் அன்றி அரசரின் இறப்பை ‘துஞ்சுதல்’ எனும் சொல் ‘இறத்தல்’ எனும் பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. இது அனைவரின் சிறப்பையும் சுட்டும் சொல்லாய் அன்றி அரசரின் இறப்பைக் குறிப்பிட மட்டுமே

பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய பயன்பாட்டு எல்லை பற்றிய குறிப்புகளும் சொற்பொருள் வரையறையில் முக்கியமான ஒன்றாக உள்ளது.

## 4.7 சொற்பொருள் மாற்றம்

சொற்கள் பொதுவாகச் சூழ்நிலையை ஒட்டிப் பொருளுணர்த்துகின்றன. சில இடங்களில் ஒரு பொருளையும் வேறு சில இடங்களில் அப்பொருளோடு தொடர்புடைய இரண்டாவது பொருளையும் உணர்த்துகின்றன. இரண்டாவது பொருளுணர்த்தும் சூழ்நிலையில் சொற்கள் வரும்போது இரண்டாவது பொருளே முதற்பொருள் என்ற எண்ணம் சிலருக்கு ஏற்படும். அதே சூழ்நிலையில் அச்சொல் அதே பொருளையுணர்த்திப் பயின்று வழங்குமாயின் இரண்டாவது பொருளே முதற்பொருள் என்று கருதும் நிலை பொதுவாக ஏற்பட்டு விடுகிறது. இவ்வகையில் தோன்றும் பொருள் மாற்றங்களையே சிறப்புப் பொருட்பேறு, பொதுப் பொருட்பேறு, உயர் பொருட்பேறு, இழிபொருட்பேறு, நூண்பொருட்பேறு, பருப்பொருட்பேறு, என்றெல்லாம் வகைப்படுத்துவர்.

பொதுப் பொருளைக் குறித்த சொற்கள் சிறப்புப் பொருளைத் தந்தால் சிறப்புப் பொருட்பேறு எனலாம். அரண்மனை என்றால், காவல் அமைந்த வீடு எனப் பொருள்படும். காவல் அமைந்த வீடுகள் யாவும் அரண்மனைகளேயாயினும், அத்தொடர் அரசனுடைய வீட்டை மாத்திரம் குறிக்குமளவுக்குப் பொருள் சுருங்கிவிட்டது. இல்லான் என்ற சொல் கல்வி இல்லான், அறிவு இல்லான், புகழ் இல்லான், செல்வம் இல்லான் எனப் பலவற்றைக் குறிக்க வல்லதாயினும் செல்வம் இல்லாதவனைக் குறிக்கவே வழங்குகிறது. கல்லால் கட்டப்பட்ட அறையெல்லாம் கல்லறையென்ற பெயருக்குரியவையான போதும், இறந்தவரைப் புதைத்துக் கட்டப்பட்ட அறையையே அது குறிக்கிறது. திருத்தப்பட்ட பொருளெல்லாம் திருத்து என்ற பெயருக்கு உரியவையாயினும் இடைக்கால சாசனங்களில், திருத்து என்ற சொல் காடாக இருந்து வயலாகத் திருத்தி எடுக்கப்பட்ட நிலத்தையே குறிக்கிறது. பொன் என்பது முன்பு உலோகம். எல்லாவற்றுக்கும் பொதுப் பெயர். இன்று அது ஒரு வகை உலோகத்தையே உணர்த்துகிறது. இழவு, புல், நெய் பழையது என்னும் சொற்களும் இவ்வாறு சிறப்புப் பொருள் அமையப் பெற்றுள்ளன.

முன்பு ஒரு வகைப் பொருளுக்கு உரியதாக வழங்கிய பெயர், பின்பு அதனோடு ஒத்த பலவற்றுக்கும் பொதுப்பெயராக வழங்குதல் பொதுப்பொருட்பேறு எனலாம். ஓலை என்ற சொல் முதலில் தென்னை, பனை, முதலிய சிலவற்றின் இலையையே குறித்தது. எழுதுவதற்குப் பனையோலை பயன்பட்டதால், இடைக்காலத் தமிழில் திருமுகம், ஆவணம் என்பனவற்றை குறிக்கவும் இச்சொல் வழங்குகிறது. பழைய தமிழில் சந்திரனைக் குறிக்க வழங்கிய திங்கள் என்ற சொல், இடைக்கால தமிழில் மாதத்தைக் குறிக்கவும் வழங்குகிறது. சந்திரனைக் குறிக்கும் சொல் மாதத்தைக் குறிக்க வழங்குதல் வேறு மொழிகளிலும் உண்டு என்பர்.

முன்பு இழிந்த பொருளைக் குறித்து வந்த சொல் இப்போது உயர்ந்த பொருளில் வழங்குதல் உயர் பொருட்பேறு எனலாம். நீறு என்பது தூள் என்று பொருள்படும். நெருப்பினால் தூளாவன யாவும் நீறு எனலாம். ஆனால் காலப்போக்கில், திருநீற்றையே அது குறிக்கத்தொடங்கி விட்டது.

கள்ளுண்டு மகிழும் நிலையை உணர்த்திய களிப்பு, மகிழ்ச்சி என்ற சொற்கள், இன்று பொதுவான மனமகிழ்ச்சியைக் குறிக்கின்றன. பிள்ளை, பாப்பா, தொண்டர், கழகம் என்ற சொற்களும் உயிர்பொருள் பெற்று வழங்குகின்றன.

முன்பு உயர்ந்த பொருளில் வழங்கி வந்த சொல் இப்போது இழிந்த பொருளைக் குறித்தல் இழிப்பொருட்பேறெனப்படும். குவியலாக இருக்கும் ஒன்றைக்குறித்து வந்த குப்பை என்ற சொல் இன்று உதவாத பொருள்களின் குவியலையே குறிக்கிறது. வாசனையைப் பழந்தமிழில் உணர்த்தி நின்ற நாற்றம் என்ற சொல் இன்று துர்நாற்றத்தையே உணர்த்துகிறது. பலர் சேர்ந்திருக்குமிடம் சேரி என்று வழங்கியது. பார்ப்பனச் சேரி என்ற வழக்கும் இருந்தது. தாழ்த்தப்பட்டோர் என்போர் வாழும் பகுதியையே இச்சொல் இன்று குறிக்கிறது. காமம், அக்காள் என்ற சொற்களும் இழிபொருள் பெற்றுள்ளன.

பேச்சுமொழியில் ஒரு சொல் ஒரு பொருளையுணர்த்தும் இரு பொருளுணர்த்திவரின் அவற்றுள் ஒன்று நிற்க மற்றொன்று அழியும். இல்லையென்றால் அச்சொல் திரிபுற்று அல்லது அதையடுத்து இரண்டாம் பொருளையுணர்த்தும் கவலை என்ற சொல் பிரிந்து செல்லும் வழியிடத்தையும், மனக்கவலையையும் உணர்த்தியது. இன்று மனக்கவலையை மட்டும் உணர்த்துகிறது. போர் என்ற சொல் வைக்கோற்

போரையும் சண்டையையும் குறித்து வந்தது வைக்கோற்போரை, முன்பு போர்வு என்று சிறிது திரித்த வடிவம் வழங்க இப்போது வைக்கோல் போரென அதையடுத்த வடிவமே வழங்குகின்றன என (மு.வ. காட்டுவார்) (2016:214) (தமிழ்வரலாற்றிலக்கணம்) ஒரு பொருளை உணர்த்த இருசொல் வழங்கினால் ஒன்று நிற்கும் மற்றொன்று அழியும் அல்லது வேறு பொருளையுணர்த்தத் தொடங்கும் என்பர். குடக்கு, மேற்கு, என்ற இரு சொல்லும் ஒரே பொருளுணர்த்துவன. இன்று குடக்கு வழக்கற்று போய்விட்டது. நடை, நடைத்தல், நடக்கை என்பன ஒரே பொருளில் வழங்கியிருக்கக்கூடும். இன்று அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு பொருளில் வழங்குகின்றன.

சில சொற்கள் பொருளில் அடையும் மாற்றம், விரிவு, சுருங்கல், உயர்வு இழிவு முதலியனவின்றி, வெறும் மாற்றமாக இருக்கும். என்பதை சில பேச்சுமொழிச் சொற்களின் வழி பாக்கலாம்

| **சொல்** | **பழம்பொருள்** | **புதுபொருள்** |
|---|---|---|
| காவு | வீட்டின் மேல்புறம் (விறகு காய வைக்க) | உயிர்பலி |
| தை | தைப்பது | தமிழ் மாதம் |
| அம்பலம் | கோவில் | பொது இடம் |
| பட்டி | நாய் | சிற்றூர், வீட்டின் பின்புறம் |
| மடி | சோம்பேறி | தாயின்மடி, மடித்துக்கொடுப்பது |
| குடி | சமுதாயகுடி | மது அருந்துதல் |

சொற்களுக்குப் புதுப்பொருள் உண்டாதல் ஒருவகை. பொருளைக் குறிக்கப் புதுச்சொற்கள் அமைதல் இன்னொருவகை. பழைய சொற்கள் வழக்கு மிகுதியால் பல பொருளுக்கும் உரிமையாகிவிடுவதால் நுட்பமான கருத்துக்களை விளக்கப் புதுச்சொற்கள் தோன்றும். பழைய சொற்கள் வழக்கிழந்து போவதுமுண்டு. சொற்கள் நிலையானவையல்ல. அவ்வப்பொழுது தோன்றிக் கொண்டும் மறைந்து கொண்டும் வரும். புதிய சொற்கள் தோன்றுதல் மாத்திரமின்றிப் பழைய சொற்கள் புதிய வடிவோடு

விளங்குதலுமுண்டு. பொருள் என்பது போது எனவும் உருண்டை என்பது பேச்சுமொழியில் உண்டை எனவும் மாறியுள்ளன.

### 4.8 காலந்தோறும் சொற்பொருள் மாற்றம்

சொல்லாக்கம் மூலம் உருவாக்கப்படும் சொற்களின் பொருளானது நாளடைவில் மாற்றம் அடைகின்றது. புதியபுதிய சொற்களும் கூட சுருக்கமானதாகவும் எளிமையானதாகவும் தோற்றம் பெறுகின்றன. உலக மாற்றம் அறிவியல் கண்டுபிடிப்பு, சொற்பொருட் பரப்பு மாற்றம், மனித உணர்வு மனபாங்கு மாற்றம், சொற்கள் கடன்வாங்குதல் போன்றவை சொற்பொருள் மாற்றத்திற்குக்காரணமாக அமைகின்றன.

பொருண்மையியலாளர்கள் பொருளை முக்கியமானதாகக் கருதுபவர்கள் சொற்பொருள் மாற்றத்திற்குப் பின்வரும் காரணங்களைக் குறிப்பிடுவர் அதாவது

1. மொழியியல் காரணங்கள்
2. வரலாற்றுக் காரணங்கள்
3. சமூகக்காரணங்கள்
4. உளவியல் காரணங்கள்
5. அயல்நாட்டுச் செல்வாக்கு
6. புதுச்சொல்லாக்கத்தின் தேவை (2017:62)

#### 4.8.1 மொழியியல் காரணங்கள் :

பேச்சுவழக்கில் பிற சொற்களின் தொடர்பால் சொற்பொருள் மாற்றம் நிகழ்கின்றது. தமிழில் பால் என்ற சொல்லின் பொருள் பிரிவு என்பதாகும். பால் என்ற சொல் உணர்வு என்ற சொல்லுடன் இணையும்போது பாலுணர்வு என்று சொல்லாக்கம் பெறுகின்றது.

#### 4.8.2 வரலாற்றுக் காரணங்கள் :

சமணர்கள் தங்கியிருந்த இடம் பள்ளி என்று அழைக்கப்பட்டது. சமணர்கள் தமது பள்ளியில் எல்லோருக்கும் கல்வியைப் போதித்தனர். எனவே கல்வி கற்பிக்கப்பட்ட இடத்தினைப் பள்ளி என அழைக்கும் வழக்கம் ஏற்பட்டது. இன்று கல்விக்கூடங்கள் பள்ளி என்று

அமைக்கப்படுகின்றன. எனவே பள்ளி என்ற சொல்லானது சொற்பொருள் மாற்றமடைந்துள்ளன.

(எ.கா) குடி

**4.8.3 சமூகக் சாரணங்கள் :**

சமூக ஏற்றத்தாழ்வு, சாதி, பொருளாதார மேம்பாடு, சமூக மதிப்புகள் போன்றவை சொற்பொருள் மாற்றத்தினை ஏற்படுத்துகின்றன.

மறவன் - போர்வீரன் என்ற பொருளில் வழங்கப்பட்ட மறவன் இன்று ஒரு குறிப்பிட்ட சாதியினரைக் குறிக்கின்றனர். பறை என்னும் கருவியை முழக்குகிறவர்கள் பறையர்கள் என்று அறியப்பட்ட நிலையானது மாற்றமடைந்து இன்று ஒரு குறிப்பிட்ட சாதியினரைக் குறிப்பதாக உள்ளது. (எ.கா) தாத்தா

**4.8.4 உளவியல் காரணங்கள் :**

சொற்பொருள் மாற்றத்திற்கு உளவியலும் காரணமாக அமைகின்றது. விலக்கப்பட்ட சொல் வழக்குகள் பெருகிட அச்சமும் நம்பிக்கையும் அடிப்படையாக விளங்குகின்றன. தாலி அறுத்தலைத் ‘தாலி பெருகிற்று’ என்று அழைப்பார்கள். மான், தேன், கிளி, குயில், எனப் பெண்களையும், காளை, சிங்கம் என்று ஆண்களையும் உருவகப்படுத்துவது சொற்பொருள் மாற்றமாகும்.

**4.8.5 அயல்நாட்டுச் செல்வாக்கு:**

பிற மொழிகளில் வழங்கும் சொல்லினை அதே பொருளில் தமிழில் வழங்குதலுக்கு அயல்நாட்டுச் செல்வாக்கு காரணமாக விளங்குகின்றன, ஆங்கிலத்தில் star என்ற சொல் திரைப்பட நடிகரைக் குறிப்பது போலத் தமிழிலும் நட்சத்திரம் என்ற சொல் திரைப்பட நடிகரைக் குறிப்பதாக மாற்றமடைந்துள்ளது.

**4.8.6 புதுச் சொல்லாக்கம்:**

புதிய தேவைகள், சமூக நெருக்கடிகள், காரணமாகப் புதுச் சொல்லாக்கம் தொடர்ந்து நடைபெறுகின்றது. பிற மொழிகளிலிருந்து

சொல்லைக் கடன் பெறுதலும் பழைய சொல்லை மாற்றிப் புதுப்பித்தலும் இத்தகைய மாற்றத்தை ஏற்படுத்துகிறது.

ஏவுதல் என்ற சொல்லினின்று ஏவுகணை எனும் சொல் உருவாக்கப்படுகின்றது. உருண்டையாக இருப்பதனைக் குண்டு என்பதால் போரில் பயன்படுத்தப்படும் (Bomb) குண்டு என்று வழங்கப்படுகின்றது. (எ.கா.)வேல்-வேலை

17 -ஆம் நூற்றாண்டுவரை இலக்கியத்தமிழில் குறிப்பிடத்தக்க அளவிற்க்குச் சொற்பொருள் மாற்றங்கள் இல்லை. எனினும் மேலைநாட்டினரின் வருகைக்குப் பின்னர்த் தமிழ்மொழி வரலாற்றில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. இலக்கிய வரலாற்றில் மட்டுமன்றி மொழிவரலாற்றிலும் இம்மாற்றத்தை நன்கு உணர முடிந்தது. எனவேதான் தொல்காப்பியக் காலத்திலுள்ள சொற்பொருளுக்கும் தற்காலத் தமிழில் இடம்பெறும் சொற்பொருளுக்கும் ஏற்பட்டுள்ள பெரும் மாற்றத்தைச் சான்றுகளின் வழி விளக்க முடிகின்றன.

நெய் - எண்ணெய் (தொல்காப்பியம்)

- நெய், வெண்ணெய், வெண்ணெயை உருக்கி உண்டாக்கும் பொருள் (சங்க இலக்கியம்)
- (நெய்ய, நெய்து) - துணி, பாய் போன்றவை நெய்தல்- (தற்காலப் பொருள்)

அரசு - அரசாட்சி, அரசன் (தொல்)

- அரசன், அரசாட்சி (ச.இ)
- அரசாங்கம், அரசு (Government) (த .பொருள்)

## 4.9 கள ஆய்வில் தேர்வு செய்யப்பட்ட சொல்லும் இலக்கியத்தில் பொருள் மாற்றமும்

**காதல்:- (தமிழ்)**

சான்றாகத் தமிழில் காதல் என்ற சொல் காலந்தோறும் என்னென்ன பொருளில் பயின்று வந்திருக்கிறது என்றும், அவை எந்தெந்த இலக்கியத்தில் பயின்று வந்திருக்கிறது என்றும் தமிழ்ப் பேரகராதி தரும் விளக்கம் வரையறுக்கப்படுகிறது.

| வ.எண் | பொருள் | இலக்கியம் | இலக்கியச் சான்று |
|---|---|---|---|
| 1. | அன்பு | அகநானூறு -55 | காதல் வேண்டியெற்றுறந்து போதல் செல்லா என்னுயிர் |
| 2. | வேட்கை | சீவகசிந்தாமணி -189 | காதலார் காமபூமிக் கதிரொளியவரு மொத்தார் |
| 3. | மகள் | கம்பராமாயணம்- யுத்தகாண்டம் பிரம்மாத்திரபடலம்-164 | காலம் ஈதெனக் கருதிய இராவணன் காதல் |
| 4. | பத்தி | திவ்யபிரபந்தம் திருமாலை 26 | காதலா நெஞ்சமன்பு கலந்திலேன் |
| 5. | கொல்லுகை | சூடாமணி நிகண்டு | |
| 6. | தாக்குகை | மருதூரந்தாதி | காலனென்மேற் காதலை மாற்று |

**தற்கால பொருள்**

1. ஆவல்
2. தறிக்கை
3. ஆந்தை முதலியவற்றின் ஒலி
4. எதிர்ப்பு
5. இனக்கவர்ச்சி அடிப்படையில் ஆண், பெண் இருவரிடையே ஏற்படும் அன்பு, நேசம்
6. ஒன்றின் மேல் ஆழ்ந்த பற்று, பிடிப்பு விருப்பம்

**காதல்:- (மலையாளம்)**

சான்றாக மலையாளத்தில் காதல் என்ற சொல் காலந்தோறும் என்னென்ன பொருளில் பயின்று வந்திருக்கிறது என்றும், அவை எந்தெந்த இலக்கியத்தில் பயின்று வந்திருக்கிறது என்றும் மலையாளப் பேரகராதி தரும் விளக்கம் வரையறுக்கப்படுகிறது.

| பொருள் | இலக்கியம் | இலக்கியச்சான்று |
|---|---|---|
| கொட்டை தனிக்குழு, உள்ளகம் | வடக்கன் பாட்டுகள் | புளிங்காதல் கொண்டுள்ள வாதிலாணெ – (ப - 130) |
| சாராம்சம் | கிருஷ்ணகாதை-446 | ஆதரிச்சீடணம் பாராதெ செந்நுநீ வேதத்தின் காதலாம் தேவன்தன்னெ-(ப-446) |
| தங்குமிடம் | கிருஷ்ணகாதை | காருண்ய காதலே கைதொழுனே (-ப - 19) |
| உள்ளே | கிருஷ்ணகாதை | மனக்காதல் மயக்கிநீ களிக்கும் நல்களிடம் கண்மான் கொதிக்கிந்நு (-ப - 60) |
| வலிமை | கண்ணசராமாயணம் (voL-VIII) | செருபோர் காதல் கெடும் வண்ணம் பொரும் வீரனே- (ப - 346) |
| காதல்[2] அன்பு | ராமகதை – volume-1(12–ம் நூற்) | மனகாதல் தொல்லையே, மரணமடத்தி நக்காரும் மில்லையே -(ப - 361) |
| பயபக்தி விருப்பம் | நிரணம் | காதலோடை விஷயங்களையஞ்சும் கருதிய விந்திரியத்தின் பின்போம் சேத அழிப்பதும்-(ப - 2.32) |

காதல் என்பதற்குத் தமிழ் மலையாள மொழிகளில் பல பொருட்கள், காலந்தோறும் வழங்கி வந்திருக்கின்றன என்பதை இலக்கியம் மற்றும் அகராதிகள் வாயிலாக உணர முடிகின்றன. தற்காலத்தில் ‘காதல்’ என்பதற்குத் தமிழில் 1-வது பொருளான அன்பு என்பதைத்தான் முதற் பொருளாகப் பயன்படுத்துகின்றனர். மலையாளத்தில் 4-வது பொருளான உள்ளே என்ற பொருளையே பயன்படுத்தி வருகின்றனர் என்பதை ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

(எ.கா.) ஓ மேலே ரொம்ப அன்பு வச்சிருக்கே (தமிழ்)
வாழயுடை உள்ளில் காதலுண்டு (மலையாளம்)

### 4.9.1 கழிவு (தமிழ்)

கழிவு என்னும் சொல் ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பொருள்களைத் தந்திருக்கிறது என்பதைத் தமிழ்த் பேரகராதி தரும் இலக்கியச் சான்றின் வழி அறிய முடிகிறது.

| **பொருள்** | **இலக்கியம்** | **இலக்கியச் சான்று** |
|---|---|---|
| நிகழ் காலம் | திவ்யபிரபந்தம் பெரிய திருமொழி (4,3,2) | இறப்பெதிர்காலக் கழிவு மானானை |
| இறந்த காலம் | நன்னூல் 145 | கழிவும் கவ்வோடு எதிர்வம் மின் ஏவல் |
| சாவு | சூடாமணி நிகண்டு | |
| மிகுதி | திவாகர நிகண்டு | |
| அழிவு | பிரபுலிங்கலீலை 9 | கழிவிலாத வாகாயம் |
| பிராயச்சித்தம் | காஞ்சிப்புராணம் கமிலா -30 | பெரும்பாவக் கழிவு |

**தற்காலப் பொருள்**

1. கழிந்து போகை
2. கழிகடை
3. தள்ளுபடி
4. பாரிசேம்
5. குப்பைக்கூளம்
6. தரத்தில் குறைந்தது என்று நீக்கப்பட்டது
7. உரமாகப் பயன்படும் கழிக்கப்பட்ட இயற்கைப்பொருள்

**கழிவு:- (மலையாளம்)**

கழிவு என்னும் சொல் ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பொருள்களை தந்திருக்கிறது என்பதை மலையாளப் பேரகராதி தரும் இலக்கியச் சான்றின் வழி அறிய முடிகிறது.

| பொருள் | இலக்கியம் | இலக்கியச் சான்று |
|---|---|---|
| திறமை | சீலாவதி சரிதம் (துள்ளல்) | தெல்லும் நமுக்கு கழிவில்லெந்நு வந்நு காந்தனல்லும் பகலும் கழிவில்லாத வலயுந்நு-289 |
| சாத்தியம் | ராமசரிதம் 1 | அதினெந்து கழிவினையிலங்க மன்னனு நீயொரு தூதனொடு சொன்னான்- (ப-147) |
| தீர்வு | மகாபாரதம் | சந்ததியுண்டாவான் எந்தொரு கழிவுப்போல் -(ப.88) |
| வாழ்வாதாரம் | வடக்கன் பாட்டு S.T. ரெட்டியார் | கழிவினு கரச்சலும் வந்நுபோயால் புத்தூரம் வீட்டுக்கு வற்றுகோளு-(439) |
| கூலி | வர்த்தமானபுஸ்தகம் | ஆயதிணு யொகம் கல்பிக்குந்நதிந்ந தக்கவண்ணம் கழிவு செய்வான் பாதிரிமாடு ஆஸ்தமாயிரிக்கணெ –(ப-12) |
| முடிவு | Travancore Archeology serious –(1922-23) (volume-III) | இம்முதலில் பட்டவிருத்தி ஓணச்செலவினு அஞ்ஞொன்றில் கழிவது –(ப- 62) |

கழிவு என்னும் சொல் தமிழ் மலையாள மொழிகளில் காலந்தோறும் ஒவ்வொரு பொருளில் பயின்று வந்திருக்கிறது என்பதை அகராதிகள் வழி அறிய முடிகிறது. மேலும் தற்காலத் தமிழில் கழிவு என்பதற்குக் ‘குப்பை’ மற்றும் ‘தள்ளுபடி’ என்ற பொருளிலும் மலையாளத்தில் ‘திறமை’ என்ற பொருளிலும் பயன்பட்டு வருகிறது என்பதை அறிய முடிகிறது.

(எ.கா.) கழிவுப் பொருள் அதிகமா சேந்திருச்சு (தமிழ்ப் பேச்சுவழக்கு)

நல்ல கழிவுள்ள வெக்தியா-(மலையாளப் பேச்சுவழக்கு)

### 4.9.2 பட்டி:-

பட்டி எனும் சொல் காலங்காலமாகப் பல்வேறு பொருள்களில் பயின்று வந்திருக்கிறது என்பதைத் தமிழ்ப் பேரகராதியின் வழி அறியமுடிகிறது.

| **பொருள்** | **இலக்கியம்** | **இலக்கியச் சான்று** |
|---|---|---|
| காவலில்லாதவன் | கலித்தொகை.51 | நோதக்க செய்யுளு சிறுபட்டி |
| மகன் | அகராதி நிகண்டு | |
| களவு | திவாகர நிகண்டு | |
| பசுக்கொட்டில் | பிங்கல நிகண்டு | |
| இடம் | பிங்கல நிகண்டு | |
| நாய் | பிங்கல நிகண்டு | |
| சீலை | பிங்கல நிகண்டு | |
| சிற்றூர் | நாமதீய நிகண்டு(ப. 486) | |
| விபச்சாரி | விறலிவிடுதூது | பட்டிமகன் மோகினி மந்திரி முழுதுமறிவான் |
| பட்டிமாடு | தாயுமான சுவாமிகளின் பாடல் பெரியநாயகி1 | புலப்பட்டியும் அணுகாமல் |
| பூச்செடி வகை | புட்ப பலன் 65 | பட்டி வெண்பூவை ஈசன் பனிமலர் தாளிற சாத்தல் |

**தற்காலப் பொருள்:**

1. ஆட்டுக் கிடை
2. கொண்டித் தொழு
3. தெப்பம்
4. கணைக்காலிலிருந்து முழங்கால் வரை சுற்றிக் கட்டிக்கொள்ளு கிழிப்பட்டை
5. மடிப்புத்தையல்
6. விக்கிரமாதித்தன் மந்திரி
7. அட்டவனை
8. பாக்கு வெற்றிலைச் சுருள்

9. (கிராமத்தில்) பிறர் நிலத்தில் பயிர்களை மேயும் ஆடு மாடு
10. ஆகியவற்றை உரிமையாளர் வந்து மீட்டுசெல்லும் வரை அடைத்து வைக்கும் இடம்
11. (சட்டை, பாவாடை, முதலிய உடைகளில்) விளிம்பை மடித்துத் தைக்கும் பகுதி; மடிப்புத் தையல்.
12. சிற்றூர், கிராமம்.

**பட்டி:-**

பட்டி எனும் சொல் காலங்காலமாகப் பல்வேறு பொருள்களில் பயின்று வந்திருக்கிறது என்பதை மலையாளப் பேரகராதியின் வழி அறியமுடிகிறது.

| பொருள் | இலக்கியம் | இலக்கியச் சான்று |
|---|---|---|
| பட்டி[1]<br>நாய் | கவிதை-சுள்ளிக்காடு<br>(20-ம் நூற்றாண்டு இறுதி) | பட்டி நக்கிய பிண்டம் போலே<br>பாழாவுந்நச்சா நித்யவும் ஜன்ம்-(ப-13) |
| பெண்நாய் | ரதிரகஸ்யம்<br>(தாபத்திகசாஸ்த்ரம்) | பட்டியும் நாயயும் சேர்ந்ந போலேயுள்ளது சௌநவும்-ப-77 |
| வேசி, வேட்டை, புலி, மோசமான நபர் | முடக்குமுதல் (நாடகம்)<br>N. கிருஷ்ணப்பிள்ளை | பக்ஷேஇனியும் பர்த்தாவாயிட்டு- ஞான் அத்ர பட்டியாயிட்டிள்ள-(ப-78) |
| பட்டி[2]<br>தொழுத்து-(தொழுவு) | கௌடலியம் அரத்தசாஸ்த்ரம் (பழைய மலையாளம் பாஷா வியாக்யானம்)<br>(13-ம் நூற்றாண்டு) | அவுமேய்க்கும் நிலமும் அவுகிடத்தும் கிடத்தும் பட்டியும் திக்பாகவும் அவற்றினுடைய வர்ணத்துக்கு தக்கவாறு ஆக்குவிது |
| பட்டி[3]<br>ஆபரணம் | ஆயுர்வேதிய ஔஷதி நிகண்டு | சேமந்ந பாச்சோட்டி |

பட்டி என்னும் சொல் காலங்காலமாகப் பயன்பாட்டில் இருந்தாலும் அவை நிலையான ஒரே பொருளைத் தரவில்லை என்பதைத் தமிழ் மலையாள பேரகராதி வழி அறிய முடிகிறது. தற்காலத்தில் பட்டி என்பதற்குத் தமிழில் ‘வீட்டின் பின்புறம்’ ‘சிற்றூர்’ ‘ஆடு மாடு அடைக்கும் தொழுவு’ போன்றவற்றைக் குறிக்கிறது. மலையாளத்தில் பட்டி என்றால் நாயைக் குறிக்கிறது. குறிப்பாக வடக்கன் கேரளத்தில் பட்டி என்றால் பெண் நாயையும் தெக்கன் கேரளத்தில் இரண்டு வகையான (ஆண், பெண்) நாய்களையும் குறிக்கிறது என்பதைக் பயன்பாட்டின் மூலம் அறிய முடிகிறது.

## 4.10 சொற்களின் வகைப்பாடு

தமிழ் மலையாள பேச்சுமொழியில் ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. காணப்படக்கூடிய எல்லா சொற்களும் தமிழ் மலையாள பேச்சுமொழிச் சொற்கள் என்று கூறிவிட முடியாது. காரணம் மொழி என்பது சூழலுக்கு ஏற்றாற் போல் பொருள் மாற்றத்தை தரவல்லது. அறிஞர்கள் கருத்துப்படி 24 வகையான மொழிச் சொற்கள் தமிழில் கலந்துள்ளன என்பர். கள ஆய்வு வழியாகச் சொற்களைத் தேர்வு செய்தபோது இந்த உண்மைத் தன்மையை அறிய முடிந்தது.

அதே போல சொற்களின் வகைபாட்டில் தொழிற் சொற்கள், உறவுச்சொற்கள், இலக்கிய சொற்கள், ஜாதி, மத, சடங்கு முறைச் சொற்கள் எனப் பல்வேறு வகையான சொற்கள் மொழியில் கலந்து வருகின்றன. கள ஆய்வின்போது தேர்வு செய்யப்பட்ட சொற்களைப் பின்வரும் வகைப்பாட்டில் வகைப்படுத்தலாம்.

### 4.10.1 வடமொழிச் சொற்கள்:

**1. பத்தி**

பத்தி என்பது வடமொழிச் சொல் அதாவது தமிழில் இல்லாத வடமொழிக்கே உரிய எழுத்துக்களையுடைய வடசொற்கள் தமிழில் வந்து வழங்குவதனால் இதனைத் தற்பவம் என்றும் கூறுவர். இச்சொல் தமிழ் மலையாள இருமொழிகளிலும் சொல் ஒன்றுபட்டும் பொருள் வேறுபட்டும் காணப்படுகிறது.

பத்தி - பூஜைக்குப் பயன்படும் பொருள் (தமிழ்)

சான்று : தெய்வத்திற்குப் பத்தி கொளுத்தி வை (தமிழ்)

சான்று ஓரோ பத்தியாயிட்டு வாய்க்கு (மலையாளம்)

2. **சம்சாரம்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் சம்சாரம் என்றால் மனைவி என்று பொருள்படுகிறது |
| சான்று | : | டேய்[1] , ஓ சம்சாரம் எங்கே |
| மலையாளம் | : | மலையாளத்தில் சம்சாரம் என்றால் பேசுதல் எனப் பொருள் கொள்கிறார்கள் |
| சான்று | : | அவன்டெ சம்சாரம் அத்ற இஷ்டபெடுந்நில்ல. |

3. **புருஷன்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் புருஷன் என்றால் கணவன் என்று பொருள் கொள்கிறார்கள் |
| சான்று | : | புருஷன் நல்லா இருக்கான்! |
| மலையாளம் | : | ஆண்மகனைக் குறிக்க அதாவது திருமணமாகாத இளைஞர்களையும் புருஷன் என்கிறார்கள். |
| சான்று | : | வீட்டில் எத்ற புருஷன் உண்டு. |

4. **பத்ரம்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | பத்ரம் என்றால் முத்திரைத்தாள் என்பர் |
| சான்று | : | சொத்தைப் பத்ரத்திலே எழுது |
| மலையாளம் | : | பத்ரம் என்றால் செய்திகள்(newspaper) என்று பொருள் கொள்கிறார்கள். |
| சான்று | : | இன்று பத்ரம் வாயிச்சோ? |

5. **அம்பலம்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் அம்பலம் என்றால் பொது இடம் என்று கூறுகிறார்கள். |
| சான்று | : | ஓ,மகனே மந்தயிலே அம்பலப்படுத்துறாங்கே? |
| மலையாளம் | : | அம்பலம் என்றால் கோவில் |
| சான்று | : | இந்நு அம்பலத்திலேக்கு போகாம் |

6. **கேசரி:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் கசரி என்பது இனிப்புச் சுவையுடைய பலகாரம் அதாவது உணவு பொருள் |
| சான்று | : | கல்யாணத்துலெ கேசரி நல்லா இருந்துச்சு |

| | | |
|---|---|---|
| மலையாளம் | : | மலையாளத்தில் கேசரி என்பதற்குச் சிம்ஹம் என்ற பொருளைப் பயன்படுத்துகிறார்கள். கேசரி என்பது அருகிய வழக்கு. |

**7. பரிதி :**

| | | |
|---|---|---|
| தமிழில் | : | பரிதி என்பது வடமொழி சொல். சூரியன் என்ற பொருளில் வருகிறது. இது மிகவும் அரிய வழக்காக இருக்கிறது. |
| சான்று | : | பரிதிமார் கலைஞர் காலமானார். |
| மலையாளத்தில் | : | மலையாளத்தில் பரிதி என்பது அளவு என்றப் பொருளில் வருகிறது. |
| சான்று | : | நீ பறயுந்நதில் ஒரு பரிதி உண்டு. |

**4.10.2 கன்னடச் சொற்கள்:**

கன்னடச் சொற்கள் தமிழ் மலையாள மொழிகளில் தாய்மொழிச் சொற்களைப் போல மிகுதியாகப் பயன்பட்டு வருகின்றன:

**1. கத்து:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் கத்து என்பதற்குச் சப்தம், என்று பொருள். |
| சான்று | : | சத்தமா கத்து காக்கா போயிரும். |
| மலையாளம் | : | மலையாளத்தில் கத்து என்பது கடிதம் என்ற பொருளாகப் பயன்படுகிறது. |
| சான்று | : | கத்து கிட்டியோ? |

**2. தாத்தா:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தாத்தா என்பதற்கு அப்பாவின் அப்பா வயதானவர் கிழவன் என்ற பொருள்களில் தமிழில் பயன்படுகிறது. |
| சான்று | : | உங்க தாத்தா எங்கே? |
| மலையாளம் | : | தாத்தா என்பதற்கு வயதான பெண் என்றப் பொருளில் மலையாளத்தில் (இஸ்லாம் மதத்தில் பயன்படுத்தி வருகின்றனர். |
| சான்று | : | (கதீஜதாத்தா) - மரியாதைச் செய்யும் போது பெண்களின் பெயர்களோடு சேர்த்து அழைப்பது. |

### 4.10.3 தொழிற்சொற்கள் :

தொழிற்சொற்கள் என்பது ஏதாவது ஒரு செயலைக் குறிப்பதாக அமையும்.

**தூக்கம்**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தூக்கம் என்பது உறக்கத்தைக் குறிக்கிறது. |
| சான்று | : | தூக்கம் தூக்கமா வருது |
| மலையாளம் | : | மலையாளத்தில் இச்சொல் weight எடையைக் குறிக்கிறது. |
| சான்று | : | அவன்டெ தூக்கம் கூடி |

**தடவு**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தடவு என்றால் பூசுதல் என்று அர்த்தம் |
| சான்று | : | என் உடம்பை நல்லா தடவிக் குடு |
| மலையாளம் | : | தடவு என்றால் குற்றவாளி என்று பொருள்படும். |
| சான்று | : | அயாலுக்கு தடவு சிக்ஷ கிட்டி. |

**பேசி:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் பேசி என்றால் பேசுதல் என்று பொருள். |
| சான்று | : | பேசியே நேரம் போச்சு. |
| மலையாளம் | : | மலையாளத்தில் பேசி என்றால் தோல் என்று பொருள். |
| சான்று | : | நின்டெ பேசி மெல்லிசாயிட்டு உண்டு |

**சரடு கெட்டு :**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | தமிழில் சரடுகெட்டு என்றால் ‘கட்டுதல்’ என்று பொருள். |
| சான்று | : | சாக்கு பையை சரடுகெட்டித்தூக்கு தூக்கு |
| மலையாளம் | : | மலையாளத்தில் இச்சொல் சிறுவருக்கான சடங்கு என்று அர்த்தம். |
| சான்று | : | மோள்டெ சரடுகெட்டு (function) உண்டு வரணே. |

### 4.9.4 உறவுச் சொற்கள் (மற்றும்) மதச் சொற்கள்

தமிழ் மலையாள மொழிகளில் உறவினர்களை அழைக்க ஏராளமான சொற்களைப் பயன்படுத்துகின்றனர். சொற்கள் குடும்ப அளவிலும், சமுதாய அளவிலும், மத அடிப்படையிலும் பல்வேறு வகையான உறவுச்சொற்கள் இவ்விரு மொழிகளில் இருக்கின்றன.

**சம்சாரம்:**

| | | |
|---|---|---|
| தமிழில் | : | சம்சாரம் என்பது மனைவியைக் குறிக்கிறது. |
| சான்று | : | ஓ சம்சாரம் பேரு என்ன? |
| மலையாளம் | : | சம்சாரம் என்பது பேசுதல் என்று பொருள் |
| சான்று | : | நின்டெ சம்சாரம் கேட்டு மடுத்து. |

**மக்கள்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | மக்கள் என்பது கூட்டமாக வாழக்கூடிய மக்களைக் கூறுகிறது. |
| சான்று | : | உங்க ஊருலே மக்கள் தொகை எவ்வளவு? |
| மலையாளம் | : | மக்கள் என்றகள் குழந்தகையைக் குறிக்கிறது. |
| சான்று | : | நினிக்கு எத்ற மக்கள் உண்டு. |

**மாப்பிள்ளை:**

தமிழில் மாப்பிளை என்பது அக்காவின் தம்பி, மனைவியின் தம்பி போன்றவர்களை அழைக்கப் பயன்படுகிறது. மேலும் புதியதாகத் திருமணம் செய்ய இருப்பவரை மாப்பிளை என்று அழைப்பது வழக்கம்.

| | | |
|---|---|---|
| சான்று | : | மாப்பிளைய வரச்சொல்லு நேரமாச்சு |
| மலையாளம் | : | இச்சொல் முஸ்லீம் சமுதாயத்தில் ஒரு பிரிவினரைக் குறிக்கிறது. (வடக்கன் கேரளம்) |
| சான்று | : | ஆ ப்ரதேசம் மொத்தம் மாப்ளேமார் |

**மாமன்:**

தமிழில் மாமன் என்றால் ‘‘தாய்மாமன்’’ என்று அர்த்தம். அதாவது அம்மாவின் உடன்பிறந்த அண்ணன் சகோதரர்களைக் குறிக்கப் பயன்படுகிறது.

| | | |
|---|---|---|
| சான்று | : | தாய்மாமன் சீர் கொண்டு வா |
| மலையாளம் | : | மாமன் என்றால் வயதானவர்களைக் குறிக்கவும் ஆண்களைச் சிறுகுழந்தைகள் மாமன் என்று அழைப்பது பொதுசொல்லாகவும் இருக்கிறது. |
| சான்று | : | ஆ மாமனெ விளிக்கு |

**குரு :**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | குரு என்றால் ஆசிரியர்களைக் குறிக்க பயன்படுகிறது. |
| சான்று | : | காந்தியோட குரு கோபாலகிருஷ்ண கோகலே |
| மலையாளம் | : | குரு என்றால் பருவு எனப் பொருள்படும். |
| சான்று | : | குருனெ பொட்டிச்சி கல. |

**உம்மா:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | உம்மா என்றால் முத்தம் என்று பொருள் |
| சான்று | : | உம்மா தா பாப்பா |
| மலையாளம் | : | உம்மா என்றால் குறிப்பிட்ட சமுதாயத்தில் (இஸ்லாம்) அம்மாவினுடைய அம்மாவை உம்மாவாக அழைக்கின்றனர். அதாவது பேருக்குப் பின்னால் உம்மாவைச் சேர்த்து வழங்குகின்றனர். |
| சான்று | : | ஆயிச உம்மாவினெ விளிக்கு. |

**அச்சன்:**

| | | |
|---|---|---|
| தமிழ் | : | அச்சன் என்பது ஆண் பாதிரியார்களை (கிறிஸ்து) அழைப்பது. இலக்கியத்தில் தந்தையாகப் பொருள்படுகிறது என |

| | | |
|---|---|---|
| | | மு.வ கூறுகிறார்(அச்சன் திசைச் சொல்) (2017:113) |
| சான்று | : | அச்சன் எப்போ பள்ளிக்கு வருவாரு? |
| மலையாளம் | : | அச்சன் என்பது அப்பாவைக் குறிக்கப் பயன்படுகிறது. |
| சான்று | : | என்டெ அச்சன் நாட்டிலேக்குப் போயி. |

## 4.11 பேச்சுமொழி அகராதியின் தேவை

தமிழில் உள்ள பல்வேறு விதமான பேச்சுமொழிச் சொற்களை ஒரு குடையின்கீழ் வரிசைப் படுத்தும் பணியே அகராதி பணி. பரந்து விரிந்த இந்நிலப்பரப்பில் மக்கள் பல்வேறுவிதமான மொழிகளைப் பேசுகின்றனர். இம்மொழிகள் எல்லாம் வருங்காலத் தலைமுறைக்குச் சேர்த்துவைக்கக் கூடிய மிகப்பெரிய சொத்து சொற்கள் எனலாம். சொற்களே ஒரு மொழியை உயிருடைய மொழியாக வடிவமைக்கிறது. ஒரு குறிப்பிட்ட வட்டார அல்லது சமூகக் கிளைமொழியில் காணப்படும் அனைத்துச் சொற்கூறுகளையும் கொண்டதாக சமூக ஆய்வுகள் சில தற்போது நடைபெற்று வருகின்றன. எந்த வொரு கிளைமொழி(or) பேச்சுமொழி அகராதியும் முழுமையானதாகத் தொடுக்கப்படவில்லை. முடிந்தவரை சொற்களைத் தொகுத்து வரிசைப் படுத்தப்பட்ட கிளைமொழி அகராதிகளாகவே அவை விளங்குகின்றன. எனவே பரந்த தமிழின் பல்வேறு கிளைமொழிகளின் ஆய்வும் அதைத்தொடர்ந்து கிளைமொழி அகராதியாக்கமும் நமக்குத் தற்போது அவசியமான தேவை என்றே கூறமுடியும்.

### 4.11.1 பேச்சுமொழி அகராதியின் பயன்கள்

1. குறிப்பிட்டதொரு வட்டாரத்தின் கலாச்சாரப் பண்பாட்டைச் சொற்களின் வாயிலாகப் பாதுகாப்பதற்குப் பயன்படுகிறது.
2. பல்வேறு வட்டார வழக்குகளிடையே இருக்கும் வடிவங்களையும் வேறுபாட்டையும் அறியவும்,
3. ஒருமொழியில் பல்வேறு காலநிலைகளில் ஏற்பட்ட வரலாற்று மாற்றங்களை ஆய்வதற்கும் மிகுந்த பயனுடையதாகவும் விளங்குகின்றன

தமிழ் மொழியில் கிளைமொழி அகராதிகள் மிக குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன. பேச்சுமொழிக் கூறுகளின் பெட்டகமாகத் திகழக் கூடிய பல்வேறு வட்டாரங்களை ஆய்வு செய்வதன் மூலம் பல்வேறு விதமான கலாச்சார பண்பாடு சொற்கூறுகளை வெளிக் கொண்டு வரமுடியும்.

பேச்சுவழக்குக் கூறு என்பது மிகவும் தாழ்வானதாகக் கருதப்படுவதால் அவை அகராதிகளில் இடம்பெறுவது மிகவும் அரிது. பேச்சுவழக்கிலும் தமிழ் மொழியின் களஞ்சியமாக விளங்கக்கூடிய பல சொற்கள் காணப்படுகின்றன. கிளைமொழியில் பேச்சுவழக்கிற்குரிய சொற்கூறுகள் உயர்ந்த மதிப்பிற் குரியனவாகக் கருதப்பட வேண்டிய நிலையில் இன்றைய மொழியியல் பார்த்து மாறியுள்ளது. முற்பால இலக்கியங்கள் பல இத்தைகைய பேச்சுவழக்கையே பெரும் ஆதாரமாகக் கொண்டு படைக்கப்படுகின்றன. பேச்சு வழக்கையோ, கிளைமொழி வடிவத்தையோ, கொண்டு படைக்கப்படும் புதினங்களோ சிறுகதைகளோ இன்றைய காலத்தில் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன.

ஒரு வட்டாரத்தில் வழங்கப்படும் மொழிக் கூறுகளின் உண்மையான பயன்பாட்டைப் பொருளை அறிந்து கொள்வதற்குப் பேச்சுமொழி அகராதிகள் மிகவும் பயனுள்ளதாக விளங்கும். அறிவியல் தொழில் நுட்பங்களில் புதிய தமிழ்ச் சொற்களை உருவாக்குவதில் பேச்சுமொழிக்கூறுகள் பெரும்பங்காற்றுகிறது. தமிழக கேரள எல்லையில் ஒரு மூலையில் வாழும் மக்கள் பயன்படுத்தப்படும் சொற்கள் கூட புதிய சொற்களின் உருவாக்கத்திற்கு ஒரு காரணமாக அமைகின்றன.

## 4.12 அகராதி உருவாக்கலும் பேச்சுமொழிச் சொற்களும்

மொழியைக் கற்றுக்கொள்வதற்குத் துணை நிற்பன நோக்கு நூல்கள். நோக்கு நூல்களில் நிகண்டுகளும் அகராதிகளும் முதலிடம் பெறுகின்றன. தமிழ் அகராதியின் தோற்றத்திற்குரிய விதைகள் தொல்காப்பியத்தில் விதைக்கப்பட்டுள்ளன என்பது யாவருக்கும் தெரிந்த ஒன்றே. தொல்காப்பிய உவமையியல் அணியிலக்கண வளர்ச்சிக்கு அடித்தளமாய் அமைந்ததைப் போன்று சொற்பொருள் கூறும் துறைக்கு உரியியலே அடித்தளமாய் அமைந்தது எனலாம்.

காலந்தோறும் மொழியின் வளர்ச்சியில் அதன் இயல்புகளுக்கேற்ப பல புதிய சொற்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. பல சொற்கள்

பயன்பாடு குறைந்து வழக்கிலிருந்து மறைந்தன. சில சொற்கள் புதிய அர்த்தங்களைப் பெற்று விளங்கின. இந்தச் சொற்களுக்கான பல பொருட்களைத் தொகுத்துக் கூறும் போது அகராதிகளின் தோற்றம் உருவாகின்றது. உலக அளவில் எத்தனையோ மொழிகள் பேச்சளவில் மட்டும் நிலைக்கொண்டிருக்கின்றன. அவையெல்லாம் எழுத்து வடிவம் பெறாமல் அழிந்து போகவும் வாய்ப்புகள் ஏராளமாக உள்ளன. சான்றாகத் தோடர்மொழி, கோத்தர் மொழி, லம்பாடி மொழி, நரிக்குறவர் மொழி, போன்றவற்றைக் கூறலாம். இந்த இழப்பு உருவாகாமல் இருப்பதற்குப் பயன்பாட்டிலுள்ள பேச்சுமொழிச் சொற்களை மொழி அறிஞர்கள் அகராதிகளாக உருவாக்குகின்றனர். அறிவியல் வளர்ச்சியினால் நாள்தோறும் பல புதிய கலைச் சொற்கள் உருவாவதின் காரணமாக மொழி அழியும் சூழல் ஏற்படுகிறது. இத்தகையச் சூழலை நிவர்த்திச் செய்ய அகராதி என்பது பேருதவியாக இருக்கும்.

### 4.13 பேச்சுமொழியும் பிறமொழிச்சொற்களும்

பிறமொழிச் சொற்களின் கலப்பு என்பது எந்தவொரு மொழிக்கும் இயல்பானதே. அவற்றைச் சங்க இலக்கியத்தின் வாயிலாக உணரமுடியும். குறிப்பாகச் சங்க இலக்கியத்தில் கலித்தொகையிலும், பரிபாடலிலும் வடமொழிச் சொற்கள் மிகுதியாக உள்ளன. என்பது தமிழறிஞர்களின் கருத்து. இதைப்போல கீழ்க்கணக்கு நூல்களிலும் மற்றும் தேவாரம் முதலிய அருளிச் செயல்களிலும் வடமொழிச் சொற்கள் கலந்துள்ளன என்பதைக் காணமுடியும்.

“ சுராதிப திமாலய நுமாலொரு சலாமிடு
சுவாமிமலை வாழும் பெருமானே”

என்ற பாடலில் “சலாமிடு” என்ற அரபுச்சொல் இயல்பாகக் கலந்துள்ளது என்பதை அருணகிரிநாதர் எழுதிய திருப்புகழ் வாயிலாக அறிய முடியும். இதைப் போல் ஏரானமான பிறமொழிச் சொற்கள் தமிழ்ப் பேச்சுமொழி சொற்களிலும் கலந்து உறவாடி வருகின்றன..

**சான்றாக :**

**அரபுச்சொற்கள்**

வாரிசு

புகார்

ஜாமின்

கைதி

**வடமொழிச் சொற்கள்**

புண்ணியம்

துக்கம்

வேதம்

ஆரோக்கியம்

**தெலுங்குச் சொற்கள்**

ஓயில்

தண்டு

பாக்கு - போன்ற சொற்களை ‘விறலிவிடு’ தூது என்ற இலக்கியத்தில் காணமுடிகின்றது.

**கன்னடச் சொற்கள்**

அட்டிகை

கத்து

சிக்கு

தாத்தா - இது போன்ற மலையாளம் உருது, சீனம், கிரேக்கம், துருக்கி, சிங்களம், டச்சு, போன்ற பிறமொழிச் சொற்கள் கலந்துள்ளதை அறியலாம்.

**4.13.1 அகராதியின் அமைப்பு:-**

அகராதியின் அமைப்பைப் பொருத்தவரையில் காலந்தோறும் சிற்சில மாற்றங்கள் நடந்துக் கொண்டே இருக்கின்றன என்பதைத் தற்கால அகராதியை நோக்கும்போது அறிய முடிகின்றது. கடினச் சொற்களுக்குப் பொருள்கூறும் வழக்கம் இழந்து எளிமையான சொற்களையும் கூட படம் வரைந்தும், ஜாதி, மத, சமூக அடிப்படையில் விளக்கும் அளவிற்கு அகராதி அமைப்பு முறையில் மாற்றம் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றது. சில முக்கியமான அடிப்படையில் பின்வரும் முறையில் பேச்சுமொழிச் சொற்களை அகராதியில் உட்படுத்த வேண்டும் அவை பின் வருமாறு.

பெரும்பான்மை அடிப்படையில் சொற்கள் அகராதியில் இடம்பெறும் ‘அல்லோலம் கல்லோலம்’ (பெருங்குழப்பம்) (பெயர்) (பேச்சுவழக்கு)

குழந்தையைக் காணோம் என்றதும் வீட்டில் ஒரே அல்லோலம் கல்லோலமாக இருக்கிறது-(2008-66)

அரைடிக்கட் (சிறுவன் அல்லது சிறுமி) – (பெயர்) (பே.வ)
கல்யாணவீட்டில் அரைடிக்கட்டுகளின் லூட்டி தாங்க முடியவில்லை. (2008-63)

இவ்வாறு ஒரு குறிப்பிட்ட பகுதியில் புழக்கத்தில் இருந்து பொதுத் தன்மை பெரும் சொற்கள் அகராதியில் இடம் பெறுகின்றன. குழப்பம் தரும் சொற்களைத் தெளிவுபடுத்திக் கொடுத்தல். பேச்சுமொழியில் குழப்பம் தரக்கூடிய சொற்கள் ஏராளமாகப் புழக்கத்தில் உள்ளன. அவை சிறந்த விளக்கத்துடன் பதிவு பெற்று இருக்கும். சான்றாக இடுப்புச்சரடு அர்ணாகயறு, ஆரஞான், இவற்றிற்கு மனிதனுடைய படம் வரைந்து இடுப்புசரடு அமையும் இடத்தைச் சுட்டிக்காட்ட வேண்டும். இதைப்போல அரை –மாவாக்குதல், அரை-(இலங்கை வழக்கு) மெதுவாக நகர்தல், அரை 1-ன் பகுதி $1/_2$ (ஒன்றின் பகுதி அரை), அரை - இடுப்பு (அருகிய வழக்கு), இவ்வாறு அகராதி அமைப்பில் வரும்போது விளக்க வேண்டும்.

பொதுப் பொருளையும், சிறப்புப் பொருளையும் சூழலுக்குதக்க விளக்கிக்காட்டுதல் அனைவராலும் பயன்படுத்தி வருவதைப் பொதுப்பொருளாகவும், சில குறிப்பிட்ட பகுதியில் மட்டும் வேறொரு பெயரிலும் வழங்கி வருவதைச் சிறப்புப்பொருளாகவும் கூறமுடியும்.

ரோஜா (பெயர்) பூவின் ஓர் இனம் (பொதுப் பொருள்) (1992-887)
ரோஜா (பெயர்) வெளை ரோஜா (சிறப்புப் பொருள்)
குண்டு (பெயர்) வெடிப்பொருள்- (பொது பொருள்) (1992:32)
குண்டு (பெயர்) விளையாட்டுப் பொருள் - (சிறப்புப் பொருள்)

சொற்களுக்கு முன் பின் உள்ள சொற்களைக் கொண்டு விளக்குதல் சூழலுக்குத் தகுந்தவாறு சொற்கள் முன் பின் அமைந்து வேறு பொருளைக் கொடுக்கும்.

**சான்றாக:**

தூரம் (பெயர்) - கூப்பிடும் தூரம் - (பே.இவ) குறைந்த தொலைவு (2008-757)
கூப்பு (வினை) - கைகூப்பு, வணங்கு (2008:470)
கொள்ள (இடைச்சொல்) - (பே.வ.) ஊரில் பேசிக்கொள்ள ஒருவரும் இல்லை

உச்சரிப்பு - குளி (பெயர்) (பே,வ) குளியல் - குழி என்று உச்சரிக்கக்கூடாது (1992-336)

பழம் (பெயர்) - (பயம், என்று, உச்சரிக்கக்கூடாது (1992:694)

இலக்கணவிளக்கம் அகராதியின் ஒரு முக்கியமான அம்சம் இலக்கண வகையைக் குறிப்பது அதாவது பெயர், வினை, பெயரடை, வினையடை, இடைச்சொல் போன்றவற்றை விளக்க வேண்டும். அக்காள் பெயர், உலுக்கு –விளை, ஏ-இடைச்சொல், ஏனை-பெயரடை, ஏனோ வினையடை (குறிப்பிட்டுக் கூறமுடியாத காரணத்தால்)

பேச்சுமொழிச்சொற்கள் அகராதிக்கு மாற்றி நிறுத்த முடியாத ஒன்று. சொற்களின் வளர்ச்சியே அகராதியை வழி நடத்திச் செல்கிறது. காரணம் பிறமொழிச் சொற்கள் ஏராளமாகத் தமிழில் கலந்து இலக்கியமாகவும், சொற்பொழிவாகவும், கட்டுரையாகவும் காட்சியளிக்கின்றன. அகராதியின் அமைப்பு முறை என்பது எவ்வளவு முக்கியமான ஒன்று என்பதை இதன் மூலம் உணரமுடியும். க்ரியாவின் தற்கால தமிழ் அகராதியில் முதல் பதிப்பை விட, அதிகமாக இரண்டாம் பதிப்பில் பொதுத்தமிழில் ஏற்றுக் கொள்ளக்கூடிய பேச்சுத்தமிழ்ச் சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன என்பதைப் பயன்படுத்துபவர்களுக்குப் புலனாகும்.

### 4.14 ஒலியொற்றுமையுடைய சொற்களின் ஒற்றுமையும் வேற்றுமையும்

தமிழ் மற்றும் மலையாள மொழிகளில் வழங்கக் கூடிய ஒலியொற்றுமையுடைய சொற்களின் அடிப்படைத் தன்மையிலிருந்து ஆராயும் போது ஒரு சிலவற்றை உணர முடிகிறது.

- அதிகபடியான சொற்கள் தமிழ் சொற்களாக இருப்பதை காணமுடிகிறது.
- மலையாள மொழியில் திணை, பால், எண், இடம் உணர்த்தும் விகுதிகள் இருந்து பின்னர் கைவிடப்பட்டன என்பது தற்காலத்தில் விளங்குகிறது.

  (எ.கா.) வந்தான், வந்நு
- தமிழ் மலையாள மொழிகளில், சொற்களை ஆராயும்போது ஒரு மொழியில் உயர்ந்தபொருளையும், ஒரு மொழியில் இழிவுப் பொருளையும் தருகிறது.

(எ.கா.) கழிவு குப்பை(தமிழ்)

அறிவு(மலையாளம்)

- இரு மொழிகளிலும் (தமிழ், மலையாளம்) சொற்கள் காரணத்துடனும் காரணமில்லாமலும் பொருள் மாற்றம் ஏற்படுகின்றன.
- பிறமொழிச் சொற்கள் தமிழில் குறைவாகவும், மலையாளத்தில் அதிகமாகவும் இடம் பெறுகின்றன.
- இருமொழியிலும் (தமிழ், மலையாளம்) சூழலைப் பொருத்து பொருள் மாறுகின்றன.
- தமிழில் ஒரு சொல்லின் இறுதியில் நீண்டு ஒலிக்கக் கூறுவது மலையாளத்தில் குறுகி ஒலிக்கிறது.

| | **தமிழ்** | **மலையாளம்** |
|---|---|---|
| (எ.கா.) | கேரளா | – கேரள |
| | தாத்தா | – தாத்த |

- தமிழ் மொழியில் பொதுச் சொல்லாக வருவது, மலையாளத்தில் சிறப்புச் சொல்லாக வருகிறது. (எ.கா.)தாத்தா
- தமிழில் உறவுச் சொல்லாக வருவது மலையாளத்தில் பொதுச்சொல்லாக வருகிறது. (எ.கா.) புருஷன்
- தற்சமச் சொற்களை தமிழில் தற்பவமாக மாற்ற முடிகிறது மலையாளத்தில் மாற்றமின்றி அப்படியே பயன்பட்டு வருகிறது.

பக்தி – பத்தி

கிருஷ்ணன் - கிருட்டிணன்(தமிழ்) (வடமொழி, மலையாளம்)

**தொகுப்புரை:**

இவ்வியலில் ஒலியொற்றுமையுடைய சொற்களில் சொற்பொருள் மாற்றம் எவ்வாறு நிகழ்ந்திருக்கிறது என்றும் சொற்பொருள் விளக்கம், தொல்காப்பிய முறையில் சொற்பொருள் சிந்தனைகள் போன்றவற்றை விளக்கிச் சூழற்பொருள் கொள்கையின் அடிப்படையில் பொருள் மாற்றம் நிகழ்ந்திருக்கிறது என்பதை இவ்வியல் எடுத்துக்காட்டுகிறது. மேலும் ஒலியொற்றுமையுடைய சொற்களில் சில தமிழில் இலக்கியச் சொல்லாகவும் மலையாள மொழியில் பேச்சுமொழி சொல்லாகவும் இருப்பதை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகிறது. அகராதி உருவாக்குதல் மற்றும் அகராதிக்கு எப்படி பேச்சுமொழி சொற்களை வழக்குச்சொல் அகராதி உருவாக்கத்திற்கு எவ்வாறு தேர்வு செய்வது என்றும் இவ்வியலில்

வரையறுக்கப்பட்டுள்ளன. சொற்களை வகைபடுத்தியும், அவற்றில் காலந்தோறும் சொற்பொருள் மாற்றம் எவ்வாறு ஏற்பட்டுள்ளது என்பதையும் எடுத்துக்காட்டு வழி விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது. தமிழ் மலையாள ஒலியொற்றுமையுடைய சொற்களின் ஒற்றுமையையும், வேற்றுமையும் ஒலியொற்றுமையுடைய சொற்களைக் குறித்து ஆராய வேண்டிய தேவையையும் அதன் பயன்களையும் விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

# முடிவுரை

கருத்துப் பரிமாற்றக் கருவியாக விளங்கும் மொழி தனிமனிதன், வட்டாரம், துறை, காலம், இடம் எனும் அடிப்படைகளில் வேறுபடுவதைப் போலவே சமுதாய வளர்ச்சி காரணமாகப், பிறமொழி தாக்கம் காரணமாகப் புதுவகைச் சொற்களைப் பெற்றுத் தொடர்ந்து, வளர்ந்தும், மாறியும் வரும் இயல்பினது. இந்தக் காரணங்களால் குறிப்பிட்ட காலம் சார்ந்த மொழி பிறிதொரு காலம் சார்ந்தவருக்கும் குறிப்பிட்ட வட்டாரம் சார்ந்தவருக்கும் பொதுமக்களும் புரியாதச் சொற்றொகுதிகளைக் கொண்டதாக அமைந்துவிடுவது இயல்பு. தனி மனித மொழி காலந்தோறும் மாறியும் வளர்ந்தும் வருகையில் இது பிறிதொரு தனிமனிதன் மொழியிலிருந்து வேறுபட்டதாகவும், மாறுபட்டதாகவும் பயன்பாட்டு நெறிமுறைகளில் தனித்தன்மை வாய்ந்ததாகவும் அமைகின்றன என்பதை இவ்வாய்வால் கண்டறியப்பட்டது.

மொழி மனித சமுதாயத்தை இணைக்கும் ஓர் ஒழுங்கான அமைப்பாகும். அந்த அமைப்பு ஒலிக்குறியீடுகளை அடிப்படையாகக் கொண்டது. ஒலி மற்றும் குறியீடுகளை நாம் சொற்களாக்கிக் கொண்டோம். சொல்லுக்கும் அது உணர்த்தும் பொருளுக்கும் தொடர்பு இல்லை. ஆனால் சொற்களுக்குப் பொருள்களைக் கற்பித்துக் கொண்டோம். மொழியைப் பேசுகின்ற மனிதன் பழக்கத்தால் சொல்லின் பொருளை அறிந்து கொள்கிறான். எனவே எந்தவொரு மொழியும் ஒலியால்தான் உருவாகின்றது, சிறப்படைகின்றது. ஒலியின் வடிவமே பேச்சுமொழியாகவும் பேச்சுமொழியின் அடையாளமே எழுத்துமொழியாகவும் காட்சியளிக்கின்றது என்பதை இவ்வாய்வு விளக்கியுள்ளது.

- உலகின் பல்வேறு இடங்களில் பல்வேறு மொழிகள் பேசப்படுகின்றன. அவை அமைப்பில் வேறுபடுகின்றன. ஒரே மொழி பேசும் மக்களிடையேயும் பலவாறான வேறுபாடுகள் இருக்கின்றன. ஒரேமொழியே இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் மக்கள் பிரிவிற்குப் பிரிவு வேறுபடுகின்றன. ஒரே இடத்தில் வாழ்ந்து ஒரேமொழி பேசும் வேறுபட்ட மக்களிடையேயும் கூட பலவாறான வேறுபாடுகள் காணப்படுகின்றன.
- தமிழ் மலையாளமாகிய இருமொழிக்கும் பொதுவான பேச்சுமொழிப் பொதுச் சொற்கள் இன்றும் காணப்படுகின்றன. அவற்றை ஐம்பூதங்கள் வழியாகவும், விலங்குப் பொதுப்பெயர்கள் மற்றும் உணவுப்

பொதுச்சொற்கள் என்னும் வகைப்பாட்டில் தமிழ் மலையாள ஒற்றுமையை ஆராய்கிறது.

- தமிழ் மலையாள பேச்சுவழக்கில் பலசொற்கள் ஒலி வடிவத்திலும், சொல்வடிவத்திலும், பொருளிலும் ஒன்றுபட்டதாகவும், வேறுபட்டதாகவும் காணப்படுகின்றன.
- பழங்காலத்தில் சேரநாடாக இருந்து மொழிவாரியாகப் பிரிக்கப்பட்டபோது கேரளா தனி மாநிலமாக மாறியது. இந்த மாநிலத்தில் மலையாளம் பேசுபவர்களே முதன்மையாக இருக்கின்றனர். இங்கு வாழக்கூடிய தமிழர்களில் பெரும்பான்மையும், பழங்காலந்தொட்டு வாழ்ந்து வந்தவர்கள். குறைவான மக்கள் மட்டுமே பொருளாதாரத்திற்காக இடம் பெயர்ந்தவர்களாக இருக்கின்றனர் என்பது இவ்வாய்வில் கண்டறியப்பட்டிருக்கிறது.
- கேரளத்தில் வாழக்கூடிய தமிழ் மக்கள் மற்றும் எல்லையோர மாவட்டங்களின் புவியியல் அமைப்பை மாவட்ட வாரியாகப் பிரித்து அவர்கள் உற்பத்திச் செய்யும் உற்பத்திப் பொருள்களை அட்டவணை மூலம் விளக்கப்பட்டுள்ளன.
- எல்லையோர மாவட்டங்களில் வாழக்கூடிய தமிழ் மக்களுள் சிலர் இரட்டைக் குடியுரிமைப் பெற்றவர்களாக இருப்பதை ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டது. மேலும் கலாச்சாரம் பண்பாட்டுச்செயல் முறைகள் இன்றும் தமிழ்நாட்டோடு நெருங்கிய தொடர்பு இருப்பதையும் இதன் மூலம் அறியலாம்.
- கேரளத்திற்கு இடம்பெயர்ந்தவர்கள் எல்லாம் தமிழ்நாட்டில் உள்ள சில குறிப்பிட்ட மாவட்டங்களைச் சார்ந்தவராக இருப்பதை (தேனி, திருநெல்வேலி, தென்காசி, கன்னியாகுமரி) அதாவது தமிழ்நாட்டில் உள்ள தென்மாவட்டங்களில் இருந்து இடம்பெயர்ந்தவர்களாக இருக்கின்றனர். இதனடிப்படையில் இருமொழிச்சூழல், மொழிப்பற்று, எல்லைகள் வரையறை, கல்விச்சூழல், மற்றும் அரசியல் பின்புலம் போன்றவற்றைக் கண்டறியப்பட்டுள்ளன.
- சேரநாட்டின் தொடர்ச்சியாக இன்றும் மலையாள மொழியில் அதிகமான தமிழ்சொற்கள் மற்றும் ஊர்ப்பெயர்கள் தமிழிலேயே அமைந்திருப்பதை அறியமுடிகிறது. இருமொழியிலும் வட்டார வழக்கு மற்றம் பேச்சுவழக்குப் பயன்பாடு குறைவதற்குக் காரணம்

செய்தித்தாள் மற்றும் ஊடகங்களின் பொதுத்தன்மைப் பெருகியதனால்தான் என்பது இவ்வாய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

- தமிழ் மலையாளமொழிகளில் பொதுச்சொற்கள் என்பதைத் தவிர்க்க முடியாத ஒன்றாக இருக்கிறது. தமிழ், வடமொழிச் சொற்களைக் குறைவாகவும், மலையாள மொழி வடமொழிச் சொற்களை அதிகமாகவும் கடன்பெற்று இருக்கிறது என்பதைப் பயன்பாட்டின் அடிப்படையில் எடுத்துரைக்கிறது.
- தமிழ் மலையாள மொழிகளின் வேர்ச்சொல் இருமொழியிலும் ஒன்றுபட்டு இருக்கிறது.
- தமிழில் நகரத்தை முதலாகக் கொண்ட சொல்லும், மலையாளத்தில் ஞகாரமாக கொண்ட சொல்லும் 'யான்' என்ற சொல்லிலிருந்து ஒலிக்கிறது.
- தமிழ் மலையாளத்தில் காணப்படும் சில பொதுச்சொற்கள் முதல் எழுத்து திரிந்து ஒரே பொருளைத் தருவதை எடுத்துரைக்கிறது (ஆப்பம்/அப்பம்) (பிட்டு/புட்டு).
- தமிழில் வழக்கிழந்த பொதுச்சொல் மலையாளத்தில் முதன்மை பொருளாக இருப்பதை இவ்வாய்வால் அறியலாம்.
- தமிழில் பெயர்ச்சொல்லின் இறுதியில் நெடிலாக வருவது மலையாளத்தில் குறிலாக வருகிறது.
- தமிழில் பால்காட்டும் விகுதிகள் இருக்கின்றன. மலையாளத்தில் பால்காட்டும் விகுதிகள் இல்லை.
- மலையாளத்தில் கொல்லம் ஆண்டையும் (கி.பி.823) தமிழில் கடைப்பிடிப்பதால் மாதங்களின் வரிசைமுறை வேறுபாடு உடையதாகக் காணப்படுகின்றது என்பது ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளது.
- தமிழில் பெயராகவும், வினையாகவும் வரக்கூடிய ஒலியொற்றுமையுடைய சொல் மலையாளத்தில் பெயராக மட்டும் வருவது அறியப்படுகின்றது.
- தமிழில் இலக்கியப் பொருளாக இருப்பது, மலையாளத்தில் முதன்மைப்பேச்சுவழக்காக இருக்கின்றது. (மடி-சோம்பேறி)
- ஒற்றுமையுடைய சொற்களில் சில இருமொழியிலும் எதிர்மறையான பொருளை உணர்த்துகின்றது. (தாத்தா)

- மொழி என்பது இடத்திற்கு இடம், வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபடக்கூடியது என்பதை இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மாவட்டங்களின் தனித்தன்மையான சொற்களை வைத்து அறிய முடிகின்றன. மேலும் இச்சொற்கள் பயன்பாட்டுக் காலத்தையும், பயன்பட்ட இடத்தையும் இவ்வாய்வின் வழி நிலைநாட்ட முடிகின்றது.
- மொழி மாற்றத்திற்கான காரணங்களாக ஜாதி, மதம், ஆண், பெண் பாகுபாடு, தொழில், வயது, நிலவியல் பின்னணி, தனி மனித மாறுபாடு போன்றவை விளங்குகின்றன.
- இலக்கண அறிவு பேச்சுமொழியிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகச் கண்டறியப்பட்டுள்ளன.
- மொழியியல் அடிப்படையில் தமிழ் மலையாளப் பேச்சு மொழிச் சொற்கள் மாற்றமடைகின்றன என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.
- மலையாளத்தில் முதன்மைச் சொல்லாக வருவது தமிழில் திசைச்சொல்லாக வந்து பேச்சுவழக்கில் பயன்படுகிறது.
- பன்மையைக் குறிக்கும் சொற்கள் பேச்சுவழக்கில் ஒருமையாகவே பயன்படுகின்றன.
- எல்லாச் சொற்களும் பொருள் குறித்தாலும், சில சொற்கள் காரணத்துடனும், சில சொற்கள் காரணமில்லாமலும் பொருள் வரையறுக்கிறது என்பது இவ்வாய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளது.
- சூழற் பொருட்கொள்கைக்கு முதன்முதலில் அடிக்கல் நாட்டியவர் தொல்காப்பியர் என்பதைத் தொல்.சொ.சூ.158ன் வழி அறிய முடிகின்றது.
- எல்லா சொற்களும், பொருள் உணர்த்துவது என்பது சூழலை அடிப்படையாகக் கொண்டுதான் என்பது ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளன.
- தமிழ் பேச்சுவழக்கில் பொதுவாகப் பயன்படுத்தக்கூடியச் சொல்லின் பொருள் மலையாளத்தில் வடக்கன் கேரளம், தக்கன் கேரளம் எனப் பிரிக்கப்பட்டு இரு வேறு பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

- பாட்டி என்பதே பட்டி என மாற்றம் பெற்றிருக்கிறது என்பதைப் பட்டியின் பொருளை வைத்தும், தொல்காப்பியத்தை வைத்தும் அறியமுடிகிறது.
- குறிப்பிட்ட சொற்கள் மட்டுமே நிலையான பொருளை உணர்த்துகின்றன. பெரும்பான்மையான சொற்கள் காலத்திற்கேற்பவும், சூழலுக்கேற்பவும் பொருளை மாற்றிக்கொண்டே இருக்கின்றன என்பதை இவ்வாய்வு எடுத்துரைக்கிறது.
- சொற்பொருள் மாற்றத்திற்கான காரணங்களாக மொழியியல் காரணங்கள், வரலாற்றுக் காரணங்கள், சமூகக் காரணங்கள், உளவியல் காரணங்கள், அயல்நாட்டுச் செல்வாக்கு, போன்றவை காரணமாக அமைகின்றன.
- வடமொழிச் சொற்கள் தமிழ், மலையாள மொழிகளில் ஒன்றுபட்டாலும் இருவேறு பொருள்களை உணர்த்துகின்றன.
- தற்சமச்சொற்களை அதாவது வடமொழிச் சொற்களைத் தற்பவமாக மாற்ற முடிகின்றன. மலையாளத்தில் மாற்றமின்றி அப்படியே பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்பதை இவ்வாய்வால் அறியலாம்.

# மேலாய்வுக்களன்கள்

- தமிழ் மலையாள ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்களின் அகராதி உருவாக்குதல்.
- எல்லையோர மக்களின் சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளை ஆராய்தல்.
- காலந்தோறும் தமிழ் மலையாள மொழிகளில் ஏற்படும் பொருள் மாற்றத்தை ஆராய்தல்.
- எல்லையோர மக்களின் பேச்சுமொழியில் காணலாகும் திராவிட மொழிகளின் கூறுகளை ஆராய்தல்.

# பின்னிணைப்பு - 1

## 1. கள ஆய்வில் சேகரிக்கப்பட்டு அகரவரிசைப் படுத்தப்பட்ட சொற்கள்

| வ.எண் | சொல் | தமிழ்ப் பொருள் | மலையாளப் பொருள் |
|---|---|---|---|
| 1 | அச்சன் | 1. கிறிஸ்தவ பாதிரியார் | Pithavu |
| 2 | அசல் | 1. போலி அல்லாதது<br>2. உண்மையானது<br>3. மூலம்<br>4. இயல்பாக ஒன்றுக்குரிய எல்லா தன்மையும் கொண்டது<br>5. கலப்படமற்றது,<br>6. சுத்தமானது. | |
| 3 | அஞ்சலி | 1. இறைவனுக்குச் செலுத்தும் மரியாதை<br>2. இறந்தவர்களுக்குச் செலுத்தும் மரியாதை | Thozhukai, Kooppukai,<br><br>Erupathinaalu angulam neelamulla aashari muzhakkolinte peru |
| 4 | அட்டி | 1. மறுப்பு, தடை | Adukk, Kootam, Nira, Murukk |
| 5. | அடை | 1. பெறுதல், சேர்தல், எட்டுதல், மறைதல், ஓரிடத்தில் தங்குதல், கடன் பாக்கி தீர்தல்<br>2. பிடித்து வைத்தல், நிரப்புதல், திணித்தல்,சாத்துதல்<br>3. ஒரு நிலைக்கு உள்ளாதல் போன்ற பொருளில் அவற்றை வினையாக்கும் வினை<br>4. குஞ்சி பொரிப்பதற்காக வைத்திருக்கும் | Thenadakal, Eedu, Panayam, Abhayam<br><br>Aasrayam, Oruthaalam |

| | | | |
|---|---|---|---|
| | | முட்டைகளின் தொகுப்பு.<br>5. கார சுவையுடைய ஒரு வகை தோசை.<br>6. ஆடைப்புக்குறி | |
| 6. | அண்ணி | 1. அண்ணனுடைய மனைவி | Kavilthdathinakam, Annaan, Jeshtapathni |
| 7. | அணில் | 1. மென்மையான மயிர் அடர்ந்த வாலையும் முதுகில் 3 அல்லது 5 கோடுகளையும் கொண்ட மரங்களில் வாழும் ஒரு சிறுபிராணி<br>2. சுமார் அரை மீட்டர் நீளத்தில் சதைப்பற்றோடு சாம்பல் நிறத்திலிருக்கும் கடல்மீன் | |
| 8 | அதே | 1. குறிப்பிடப்பட்ட அந்த | Aprakaaram Thanne, Uvvu |
| 9 | அபராதம் | 1. பணம் செலுத்த வேண்டும் என்ற தண்டனை | Pizha, Kuttam, Dhooshyam,Thettu |
| 10 | அரி | 1. சிறு சிறு துண்டாக நறுக்குதல்<br>2. வெட்டுதல், அரித்தல்<br>3. புழு, கரையான் போன்றவை கடித்ததுக் குடைந்து சேதப்படுத்துதல்.<br>4. அறுத்துப்போடப்பட்ட நெற்கதிர்களின் தொகுதி.<br>5. சொறியத்தூண்டும் உணர்வு. | Nellinte mani, Vithu, Shathru, Vaatharogam, Chakram |
| 11 | அலக்கு | 1. துறட்டி | Vasthrangal Kazhukuka, Thalluka, Adikkuka |
| 12 | அம்சம் | 1. பல பகுதிகளாக அல்லது பல முகமாக உள்ளவற்றில் குறிப்பிட்ட ஒருபகுதி<br>2. எடுத்துக் கூறும்படியாக இருக்கும் கூறு அல்லது தன்மை<br>3. லட்சணம், கச்சிதம் | |
| 13 | அம்பலம் | 1. பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் நடைபெறும் | Kshethram |

| | | | |
|---|---|---|---|
| | | ஊர் பொது இடம்<br>2. ரகசியமாக இருக்க வேண்டியது | |
| 14 | அரிப்பு | 1. அரிக்கப்படுவதால் ஏற்படும் சேதம், சிதைவு<br>2. தொல்லை, நமைச்சல் | Arikkanulla Upakaranam |
| 15 | அரை | 1. மாவாக்குதல் அல்லது கூழாக்குதல்<br>2. அசைந்து மெதுவாக நகர்தல்<br>3. அரை, முழுமையாக இல்லாதது<br>4. இடுப்பு | Pakuthi, Kaalukal, Udalinod Cherunna Pradhesham |
| 16 | அல்பம் | 1. கேவலம், கீழ்த்தரம்<br>2. மட்டம்<br>3. சாதாரணம், முக்கியத்துவமற்றது<br>4. குறைவு, கொஞ்சம் | Sookshmayath, Thadukkapedunnathu, Enno, Shabdhartham |
| 17 | அல்லா | 1. ஆண்டவன், இறைவன் | Nishedhavaaku |
| 18 | அல்லி | 1. நீரில் வளரும் ஒருவகைத் தாவரம்<br>2. பூவின் இதழ் | Pookkalkkakameyulla Kesaram, Thaamarai, Aambal, Pookkalude Dhalam |
| 19 | அலட்டு | 1. வருத்திக் கொள்ளுதல்<br>2. கவலைப்படுதல் | Buthimuttu, Prayaasam, Upadravam |
| 20 | அவகாசம் | 1. நேரம்<br>2. ஓய்வு நேரம் | Adhikaaram, Anubhavam, Sangathi, Idam, Sthalam. |
| 21 | அவதி | 1. துன்பம், அவஸ்தை<br>2. பதற்றம் | Athirthi, Mada, Nischayicha Samayam, Avasanam, balam. |
| 22 | அழி | 1. இயல்பாக இருப்பது இல்லாமல் போதல்<br>2. குறைதல்<br>3. நாசமாதல்<br>4. உருவம் இழத்தல் | Janalinte Kambi, Chilav, Naasham, Kadalum Kayalum Chernnu kidakkunna Bhagam |

| | | | |
|---|---|---|---|
| | | 5. ஒன்றின் இயல்பைக் குறைத்தல்<br>6. உருச்சிதைத்தல் | |
| 23 | ஆடி | 1. 4-ம் தமிழ் மாதம்<br>2. ஒளியைப் பிரதிபலிக்கும் கண்ணாடி<br>3. உருவத்தைப் பெரிதாக்கிக் காட்டும் வட்ட வடிவப் பொருள் | Karkkida Masam, Aadunnavan, Thaaravu, Oru Malsyam |
| 24 | ஆண்டு | 1. 12 மாதங்கள் கொண்ட கால அளவு<br>2. வருடம்<br>3. சிறப்பு வாய்ந்த ஒருவரை தொடக்கமாகக் கொண்டு கணக்கிடப்படும் முறை | Varsham |
| 25 | ஆமா | 1. சரி | Oru Jeevi, Paakam Cheyyatha, Paakam Varaatha. |
| 26 | ஆலா | 1. கடற்கரைப் பகுதிகளில் வாழும் ஒருவகைக் கழுகு<br>2. கூட்டமாக வந்து ஆறு, குளங்களில் மீன்களைப் பிடித்துத் தின்னும் ஒருவகைப் பறவை<br>3. பருந்து | Kollante Panippura, Choola, Kalappura. |
| 27 | ஆறு | 1. ஒரு எண்<br>2. நீர்ப்பெருக்கு ஓடும் பரப்பு<br>3. ‘படி’ என்ற பொருளில் ஒரு பெயரெச்சத்தின் பின் சேர்ந்த வினையடையை உருவாக்கும் இடைச்சொல் | Oru Sanghya, Nadhi, Puzhai |
| 28 | இடை | 1. பெண்ணின் இடுப்பை ஒட்டிய பகுதி<br>2. இடையே என்ற பொருளின் பெயர்ச்சொல்லோடு இணைக்கப்படும் | Madhya Bhagam, Akalam, Samayam, Alpaneram, Idavela |

| | | | |
|---|---|---|---|
| | | இடைச்சொல் | |
| 29 | ஈ | 1. கொடுத்தல், தருதல்<br>2. வீடுகளில் பறந்து திரிந்து பொருள்கள் மேல் மொய்க்கும் ஒரு சிறிய கருப்பு நிறப்பூச்சியினம் | Kamadevan, Lakshmi, Dhugham, Kopam, Vedhana, Ithu, |
| 30 | உண்டு | 1. திணை, பால், வேறுபாடு இல்லாமல் பயன்படுத்தப்படுவது<br>2. 'இரு' என்னும் வினையின் 'ஓரிடத்தில் வந்தமைதல்' 'உடையதாக இருத்தல்' என்னும் பொருளில் வருவதுமாகிய வினைமுற்று<br>3. 'அது' என்னும் விகுதியை அடுத்து வரும் வினைமுற்று | Bhavikkunnu |
| 31 | உண்ணி | 1. இரத்தத்தை உறிஞ்சி உயிர்வாழும் மிகச்சிறிய உயிரினம்<br>2. உணவாகக் கொள்ளும் உயிரினம் | Cheriya Paithal, Muttayude Manjakkuru, Kannu Kaaliyude Shareerathile Vattan |
| 32 | உத்தரம் | 1. இரும்புக்கிராதி<br>2. சிமெண்டால் ஆன இணைப்பு<br>3. 27 நட்சத்திரங்களில் 12வது நட்சத்திரம் | Panthrandaamathe Nakshthram, Utharam |
| 33 | ஊசி | 1. தைக்கப் பயன்படும் மெல்லிய சிறியகம்பி<br>2. உடம்பில் குத்தி மருந்து செலுத்த பயன்படும் கருவி<br>3. ஊசியின் மூலம் செலுத்தப்படும் மருந்து. | Soochi, Parihasam |
| 34 | ஊர்ஜிதம் | 1. ஒன்று நடந்திருக்கும் என உறுதி, நிச்சயம் | Ojassu, Unmesham, Shakthi, Prabhavam |
| 35 | எச்சம் | 1. கழிவு பறவைகளுடையது | Janthukkalude malam |

| | | | |
|---|---|---|---|
| | | 2. மீதம், எஞ்சியிருப்பது<br>3. கழிவு தானிய மணிகளுடையது<br>4. முற்று வடிவமில்லாதது | |
| 36 | எட்டு | 1. அடைதல், சென்றடைதல், வந்து சேர்தல்<br>2. எடுக்க இயலுதல்<br>3. 8 கால்களுக்கிடையில் உள்ள தூரம் அடி<br>4. 7க்கு அடுத்த எண் | Oru Poorna Sanghya |
| 37 | எண்ணம் | 1. நினைப்பு, சிந்தனை<br>2. ஆலோசனை, திட்டம்<br>3. கருத்து, மதிப்பு | Sanghya, Thuka, Kanakk, Vicharam, Vishwasam |
| 38 | எத்தி | 1. உதைத்தல் | Vannu Chernnu |
| 39 | எழுப்பம் | 1. கர்வம் | Vegam, Pettennu |
| 40 | ஏறு | 1. உயரமான ஓரிடத்தை அடையும்பொருட்டு செல்லுதல்<br>2. மட்டம் கூடுதல், உயர்தல்<br>3. பொருளின் மதிப்பு விலை உயர்தல்<br>4. ஆட்சியில் அமர்தல் நுழைதல், பிடித்தல், கீழே கிடப்பதன் மேல் செல்லுதல், பரவுதல், படிதல், பிடித்தல், அதிகரித்தல், அதிகமாகச் சேருதல், சதை விழுதல், சதை போடுதல் | Chaattu, Dhosham, Kettam, Vardhana |
| 41 | ஐயம் | 1. சந்தேகம் | Dharmam, Samshayam, Dhugham |
| 42 | ஒடுக்கம் | 1. ஒரு வேதிவினையில் குறிப்பிட்ட பொருளின் நீக்கம்<br>2. குறுகல்<br>3. உடம்போடு சேர்த்துக் | Avasaanam, Antham |

| | | | |
|---|---|---|---|
| | | குறுக்கிக்கொள்ளும் விதம் | |
| 43 | ஒத்து | 1. ஒரு குடில் கருவி<br>2. இணைந்து, ஒருமித்து | Thullyamaay |
| 44 | ஒப்பம் | 1. அலுவலக ஆவணங்களில் இடும் கையொப்பம் | Thulyatha, Samanatha, Nirapp, Sameepath |
| 45 | ஒப்பு | 1. இணங்குதல்<br>2. இணை, பொருத்தம், சமம் | Ezhuthil vaykkunna Adayalam Thulyath |
| 46 | ஒழி | 1. இல்லாமல் போதல், எங்காவது போதல்<br>2. தொலைதல்<br>3. முடிவுக்கு வருதல்<br>4. ஓய்வு நேரம் கிடைத்தல்<br>5. காலியாக இருத்தல், அழித்தல் | Vittupokunna, Maarunna, Thenga, Idunna Thavana. |
| 47 | ஒளி | 1. கண்ணில் படாதவாறு இருத்தல், மறைதல்<br>2. மறைத்தல் | Maravu, Rahasyam, Olisthalam, Kaanthi, Prakasham, Shobha. |
| 48 | க்ரியா | 1. பெயர் | Pravruthi, Cheshta, Mathaparamaaya |
| 49 | கக்கா | 1. கழிவுப்பொருள் | Chadangu, Ganitha Kriyakal Prayaschitham, Oru jala Jeevi |
| 50 | கக்கு | 1. வெளித்தள்ளுதல்<br>2. உமிழ்தல்<br>3. அதிக அளவில் வெளியேற்றுதல்<br>4. வெளியிடுதல் | Shardhi, Orinam Valli, Pinch, Pakshikalude vayar |
| 52 | கட்சி | 1. அரசியலில் பங்கு பெறும் அமைப்பு<br>2. ஒருவரைச் சார்ந்திருக்கும் அணி | Oru pakshathulla Aal, Bhagam, Apakadam, Vadhi Adhava Prathi |
| 53 | கட்டி | 1. வலியை உண்டாக்கும் கெட்டியான புடைப்பு | Kanam, Urappu, Bharam |

| | | | |
|---|---|---|---|
| | | 2. இறுகிக் கெட்டப்பட்டிருக்கும் நிலை<br>3. சற்று உறைந்த நிலை<br>4. வார்த்தெடுக்கப்பட்ட துண்டு | |
| 54 | கட்டு | 1. அமைத்தல், பொருத்துதல், எழுதுதல்<br>2. சேர்த்தல், கெட்டியாகச் சுற்றுதல்<br>3. குறிப்பிட்ட முறையில் உடுத்துதல்<br>4. அணிதல், மறைத்தல், அணிவித்து முடிச்சிடுதல்<br>5. பூட்டுதல், தொடுத்தல், சூட்டுதல், சுருட்டுதல்<br>6. திருமணம் செய்து தருதல்<br>7. நீரைத் தேக்குதல், நீர் தேங்குதல்<br>8. போதுமானதாக இருத்தல், செலுத்துதல்<br>9. கட்டுபடியாதல், பணம் செலுத்துதல்<br>10. பூணுதல், தரித்தல்<br>11. முறித்தல், இறுகச் செய்தல்<br>12. காயத்தின் மேல் இறுக்கமாகக் கட்டுதல்<br>13. அறை அல்லது வெளி<br>14. மருந்துப்பொருள், கட்டி | Moshtichu |
| 55 | கடகம் | 1. நண்டைக் குறியீட்டு வடிவமாக உடைய 4வது ராசி<br>2. பனை ஓலையால் பின்னப்பட்ட பெரிய பெட்டி | Ponvala, Nagaram, Malanaadu, Ragyam, Sainyam, Vattam Chuttal |
| 56 | கடம் | 1. மண்பானையால் ஆன தாளக் கருவி | Paathyatha, Kadappaad, Kadamaa, Kadankatha, Paai, Pul Paai, Saarappullu, Vaikkol, Unakkappullu, Ampu, Anaiyude, Kavil, Arakkettu, Orutharam Choothukaali, Chavam, |

| | | | |
|---|---|---|---|
| | | | Smasaanam, Savamaankam. |
| 57 | கடை | 1. கோல் ஒன்றை மாறி மாறிச் சுழற்றுதல்<br>2. முடிவு, இறுதி<br>3. கடைசல் எந்திரம் மூலம் தேவையான வடிவம் அமைத்தல் | Vayppa, Pulppaya, Vaikkol, Unakkappullu, Ambu |
| 58 | கண்டம் | 1. கழுத்தின் முன்பகுதி, தொண்டை<br>2. நிலப்பரப்பின் பெரும் பிரிவுகளில் ஒன்று<br>3. மீன் அல்லது இறைச்சித் துண்டு<br>4. சில உயிரினங்களின் தனித்த உள் மற்றும் வெளி உறுப்புக்களைக் கொண்டு பகுதி பகுதியாக இருப்பது.<br>5. உயிருக்கு நேரக்கூடிய ஆபத்து | Vayal, Kashanam<br>Kurukk, Vishukkani, Anu-Paramaanu |
| 59 | கணி | 1. மதிப்பிடுதல், நிர்ணயித்தல், நிகழப்போவதை முன்கூட்டியே சொல்லுதல்<br>2. கணக்கிடுதல், ஜாதகம் எழுதுதல் | Thulli |
| 60 | கத்தி | 1. பட்டையான உலோகத்தகடால் ஆன நறுக்குவதற்குப் பயன்படும் சிறு சாதனம்<br>2. வாள் | Oru Aayudham, Kadhakaliyile ori vesham, Murikkanum mattum Upayogikkunna oru Upakaranam |
| 61 | கத்து | 1. அலறுதல், பெரும்குரல் எழுப்புதல், உரக்க ஒலி எழுப்புதல், உரத்த குரலில் பேசுதல் அல்லது திட்டுதல். | Ezhuthappetta Sandhesham, Cheettu kaliyile Cheettu, Adhikramam. |

| | | | |
|---|---|---|---|
| 62 | கரம் | 1. கை<br>2. பெயர்ச்சொற்களோடு சேர்க்கப்படுவதும் ‘அளிப்பது’ அல்லது ‘செய்வது’ என்ற பொருள்படுவதும் ஒரு பெயர்ச் சொல்லில் இருந்து மற்றொரு பெயர்ச்சொல்லை உருவாக்கப் பயன்படும் இடைச்சொல்<br>3. உயிரெழுத்திலும், உயிர்மெய் எழுத்திலும் குறில் எழுத்துகளோடு சேர்க்க பயன்படும் இடைச்சொல் | Kai, Rashmi, Thumbikkai, Nikuthi, Oru kol Alav |
| 64 | கரடு | 1. சிறுகுன்று | Thari, Kathinteyum Pramaanathinteyum Athyam Ezhuthunna Pakarppu. |
| 64 | கரியாக்கு | 1. வீணாக்குதல் | Karutha, Parukkanaaya, Karumaram, |
| 65 | கரு | 1. வளர்ச்சியின் ஆரம்ப நிலையிலிருக்கும் உயிர்<br>2. மூலக்கருத்து | Garbhathile Bheejam, Santhaanam |
| 66 | கருங்காலி | 1. கருப்பு நிறத்திலிருக்கும் உறுதியான முள்மரம்<br>2. ரகசியமாக உடந்தையாய் இருப்பவர். | Karutha, Kaathalulla oru Vriksham |
| 67 | கருத்து | 1. எண்ணம், அபிப்ராயம்<br>2. தெரிவிக்கப்படும் பொருள்<br>3. நோக்கம், அக்கறை<br>4. கவனத்தில் கொள்ளுதல்<br>5. அறிவுத்திறன் | Shareera Balam, Shakthi, Saamrajyam Nischayam, Valakkooru |
| 68 | கரை | 1. கலத்தல், ஒலி எழுப்புதல், | Vilapikkum |

| | | | |
|---|---|---|---|
| | | நீரைத்தேக்கி வைக்கும் ஏரி, கால்வாயின் மண்மேடு. | |
| 69 | கம்பம் | 1. மரம், உலோகம், முதலியவற்றாலான தூண் | Thoonu, Vedikkettu, Balameriya |
| 70 | கலம் | 1. 12 மரக்கால் கொண்ட ஓர் அளவு<br>2. கும்பா போன்ற பாத்திரம்<br>3. உயிரணு, செல் | Kayaru, Virayal, Kulukkam, Oru Paathram, Maruthu, Oru Alaavu Kappal. |
| 71 | கலி | 1. 4 வகை செய்யுள்களில் ஒன்று | Kadal, Oru Purana Kadhaapathram, Oru Choothu Kuru, Thaanni Maram. |
| 72 | கழி | 1. செல்லுதல், கடத்தல்<br>2. பேதியாதல்<br>3. செலவழித்தல் அல்லது போக்குதல்<br>4. பொருள் வேண்டாமென ஒதுக்குதல்<br>5. தடியான கம்பு | Sheshi, Jeevikkal, Thayyalinulla Noolchorul, Kayaru, Saaksha vaavi Upavogikkunna Thdi |
| 73 | கழிவு | 1. குப்பைக் கூளம்<br>2. ரசாயன கலப்புடைய பொருள்<br>3. மனிதர்கள் மற்றும் விலங்குகளின் ஆசனவாய் வழியாக வெளியேறுவது<br>4. கழிக்கப்பட்ட இயற்கைப் பொருள்<br>5. விலைக்குறைப்பு, தள்ளுபடி | Sheshi, Thrani, Jeevitha margam, Avasanam |
| 74 | கழுவு | 1. சுத்தம் செய்தல்<br>2. உருவம் தெரிவதற்காக வேதியியல் கலவையில் அலசுதல் | Kaalu Kazhuvuthal |

| | | | |
|---|---|---|---|
| | | 3. துவைத்தல்<br>4. காலில் குத்தக்கூடிய முள் | |
| 75 | களி | 1. இன்பமடைதல், மகிழ்தல்<br>2. உணவு<br>3. முகப்பூச்சு, தலைச்சாயம் ஆகியவற்றை குறிக்கும் சொல் | Vinodham, Thamasha Parayal, Aahladham, Cheli, Madyam |
| 76 | களை | 1. தேவையற்ற செடி மற்றும் புல்லை நீக்குதல்<br>2. சோர்வடைதல், களைப்பு<br>3. பிரித்தெடுத்தல், நீக்குதல், போக்குதல்<br>4. குறிப்பிட்ட தன்மையைக் காட்டும் வெளிப்பாடு<br>5. ஒரு தாளத்திலிருக்கும் அட்சரங்களின் எண்ணிக்கை | Paazhchedi, Imbamulla, Shabdhikkunna, Udekshikkuka |
| 77 | கறி | 1. இரத்த சிவப்புடன் காணப்படும் சதை<br>2. இறைச்சி | Koottan, Kavil, Erivu |
| 78 | கறை | 1. அழகைக் கெடுக்கும் அழுக்கு<br>2. எளிதில் நீக்க முடியாத மாசு<br>3. திரவம் பட்டு உண்டாகும் படிவு<br>4. களங்கம் | Sasyangalude Murivil ninnu urunna dravakam, Adayalam, Arthava Raktham Visham |
| 79 | கஷணம் | 1. கணம் | Thundu, Nurukk, Amsham, Urasal, |
| 80 | காதல் | 1. இருவரிடையே ஏற்படும் அன்பு<br>2. ஆழ்ந்த பற்று, பிடிப்பு, விருப்பம் | Adayalappeduthal Thadiyile Vilanjathum Kaduppamulla, Thumaaya Ulbhagam, Sath, Ullu |
| 81 | கார்ப்பு | 1. உறைப்பு சுவை | Ahara Sadhanangal Kuthiyeduthu Thinnunnathinulla |

| | | | |
|---|---|---|---|
| | | | Upakaranam |
| 82 | காரம் | 1. உறைப்பு<br>2. உறைப்பு சுவையுடைய தின்பண்டம்<br>3. உப்பை உண்டாக்கும் வழுவழுப்புத் தன்மை கொண்ட வேதிப்பொருள்<br>4. சக்தி வாய்ந்த மருந்து<br>5. இடைச்சொல் | Aksharam, Shabdham,<br>Alakku karam<br>Oru Alankaram, Swarnam |
| 83 | காடி | 1. புளித்தநீர்<br>2. மரம் உலோக பொருள்களில் மற்றொன்றைப் பொருத்த ஏற்படுத்தப்படும் சற்று பள்ளமான வெட்டுப்பாதை<br>3. மாட்டுக்கொட்டில் | Ari Kazhukiyalulla Vellam |
| 84 | காவு | 1. தூக்குதல்<br>2. எடுத்துச் செல்லுதல் | Cheriya kaadu,<br>Sarddakkavu,<br>Rithumathyavaatha<br>Brahmana Kanyana,<br>Vaalinte Pidi |
| 85 | கிண்டி | 1. பால், நீர் முதலியவற்றை கொடுப்பதற்குப் பயன்படும் சற்று நீண்ட குழல் போன்ற மூக்கைக் கொண்ட குவளை | Oru Lohappathram,<br>Vaalthala, Vrushana<br>Veekkam |
| 86 | கிழி | 1. ஓரிடத்தில் பிரிதல் அல்லது துண்டாதல்<br>2. பெரிதாக ஓட்டை விழுமாறு செய்தல்<br>3. கூரான பொருள் தோலில் உரசிக் காயம் ஏற்படுத்துதல்<br>4. ஊடுருவுதல், உரசுதல், இழுத்தல், சாதித்தல் | Thuniyil Pothinja<br>Vasthukkalude cheriya<br>Kettu.<br>(eg..Panakkizhi),Thuniyil<br>Pothinju Kettiya<br>Oushadham. |
| 87 | கிளை | 1. தாவரத்தின் தண்டிலிருந்து பக்கவாட்டைப் பிரிக்கும் | Shakha, Mottu, Kootam, |

| | | | |
|---|---|---|---|
| | | பகுதி<br>2. பல பிரிவுகள் ஏற்படுதல், கப்பு விடுதல்<br>3. தலைமையின் கீழ் வேறிடத்தில் இயங்கும் பிரிவு<br>4. சிறுவர் | Kayyala, Nilam Thoomba Kondo matto vetti ilakki marickal |
| 88 | கீரி | 1. நீண்ட உடலையும் வாலையும், கூரிய பற்களையும் கொண்ட விலங்கு | Oru Jeevi |
| 89 | குட்டி | 1. இளம் உயிர்<br>2. சிறுமி<br>3. குழந்தைகளைப் பிரியத்துடன் அழைக்கும் சொல்<br>4. குறைந்த வயதுடைய, இனம்<br>5. நேரம் குறைவான<br>6. சிக்கல் இல்லாத சிறிய, மிகத் தீவிரமாக இல்லாத | Cheriya, Prayam Kuranja Santhanam, Vidyarthi |
| 90 | குட்டை | 1. உயரத்தில் குறைவு<br>2. குறைந்த அளவில் நீர் தேங்கிக் கிடக்குமிடம்<br>3. ஆழமற்ற குளம் | Penpanni, Oru Alav, Kurukkan, Vasthram, Neelam Kuranja Pottikkunna |
| 91 | குடி | 1. குடிமகன், பிரஜை<br>2. குடும்பம், குடித்தனம் | Madyapanam, Vaasasthalam, Vamsham, Oru adhikarathin keezhil Jeevikkunna Aal |
| 92 | குடை | 1. துளைத்து ஊடுருவுதல், துளைத்தல்<br>2. செதுக்குதல்<br>3. கிண்டுதல், தோண்டுதல்<br>4. துளைப்பது போன்ற உணர்வு ஏற்படுதல்<br>5. எப்போதும் எதையாவது | Veyilum mazhayum elkkathirikkan Thalaykku Mukalil pidikkunna upakaranam, Rajya Chinangalil onnu |

| | | | |
|---|---|---|---|
| | | பார்த்தல்<br>6. விசாரித்தல்<br>7. மழை தன்மேல் விழாமல் பிடித்துக்கொள்ளும் சாதனம்<br>8. வண்ண துணிகளால் அமைக்கப்பட்ட அலங்கார அமைப்பு | |
| 93 | குண்டு | 1. இரும்பு உருண்டை<br>2. வெடிக்கும் உலோக ஆயுதம்<br>3. தோட்டா, குப்பி, ரவை<br>4. உலோக உருண்டை<br>5. கோலி குண்டு | Urunda vasthu, Thookku katta, Vediyunda, Manikkay, Peerankiyunda |
| 94 | குணம் | 1. இயல்பு, பண்பு<br>2. இயற்கையாகவே அமைந்திருக்கும் சிறப்பான இயல்பு<br>3. நோய்தீர்க்கும் அல்லது குறிப்பிட்ட விளைவை ஏற்படுத்தும் தன்மை<br>4. சுகம், நலம்பெறுதல்<br>5. அறிகுறி | Dharmam, Nanma, Onninte savishe shatha, Villinte njan, Veenayude Thanthri |
| 95 | குரு | 1. ஆசான்<br>2. முன்னுதாரணமாக இருப்பவர்<br>3. ஆயரால் அபிஷேகம் செய்யப்பட்டவர்<br>4. மக்கட்பேறு, சொத்து, ஞானம் | Vardichca, Sreshtamaya, Randu mathrayulla, Adhyadakan, Achan, Acharyan |
| 96 | கூட்டு | 1. ஒன்று சேர்த்து அகற்றுதல், பெருக்குதல்<br>2. ஒன்று சேர்த்தல்,திரட்டுதல்<br>3. வருவித்துக் கூட்டம் நடத்துதல்<br>4. திரண்டு வரச் செய்தல், பலரைஓரிடத்திற்கு வரச் செய்தல் | Rando adhiladhikamo sadhanangal koodichernna vasthu, Karikkulla Arappu, Bandham, Changatham chercha, Kalarppu. |

| | | | |
|---|---|---|---|
| | | 5. கலத்தல், கலந்து தயாரித்தல்<br>6. தொகையைக் கணக்கிடுதல்<br>7. அதிகப்படுத்துதல்<br>8. சிறிது நீர்விட்டு மிளகாயை அரைத்து உருட்டி வைத்தல் | |
| 97 | கூப்பு | 1. உள்ளங்கை ஒன்றோடொன்று தொடும்படி மார்புக்கு நேராக வைத்தல்<br>2. குத்தகைக்கு விடப்படும் மரங்களின் தொகுப்பு | Vanangal, Uchathilulla samsaram, Duramathil,Reservu, Vanathinullil Marangal Murichedukkan Prathyekam Thirichittulla Sthalam |
| 98 | கூம்பா | | Vayaru, Orutharam paathram |
| 99 | கூம்பு | 1. ஒன்றாக இணைதல், குவிதல்<br>2. அடிப்பாகம் வட்டமாகவும் மேல்பாகம் கூராகவும் உள்ள வடிவம் | Naambu, Pathrankuram, Poomoottu hrudayam |
| 100 | கூறு | 1. பேச்சு அல்லது எழுத்து மூலமாக பிறரறியச் செய்தல்<br>2. அம்சம்<br>3. குறிப்பிட்ட அளவில் பிரித்து வைக்கப்பட்ட குவியல் | Dank, Bhagam, Avakasam, Ohari, Sneham, Ishtam, Kakshi |
| 101 | கெட்டி | 1. நெருக்கமாக அடைத்தல்<br>2. கணம், திண்மை, நீர்த்தன்மை குறைவாகவும் சற்று நெகிழ்வாகவும் உள்ள நிலை<br>3. குறியாக இருக்கும் நபர்,திறமைசாலி | Ketuka Ennathinte Bhootha kaala Roopam |
| 102 | கேரு | 1. முட்டை போடும் நேரங்களில் கோழி | |

| | | | |
|---|---|---|---|
| | | ஒருவிதமான ஒலி எழுப்புதல் | |
| 103 | கேசரி | 1. இனிப்பு வகையில் ஒன்று | Simham, Sreshtan, Kuthira, Hanumante Pithaavaaya Vaanaran |
| 104 | கேவலம் | 1. அவமானம், இழிவு, கீழ்த்தரம், மட்டம், மோசம்<br>2. மோசமான நிலை<br>3. மோசமான நிலையை வெளிப்படுத்தும் சொல் | Ottaykk, Parasahayam Koodathe, Mikkavarum, Muzhuvanum |
| 105 | கேள்வி | 1. ஏன், எதற்கு, யார் போன்ற வார்த்தைகளைக் கொண்ட வாக்கியம்<br>2. தேர்வில் திறமையைக் கணிக்க கேட்கப்படும் வினா<br>3. அநீதியைக் கண்டித்து எழுப்பும் குரல்<br>4. கேள்விப்பட்டது என்பதைக் குறிப்பிடப் பயன்படுத்தும் சொல்<br>5. சந்தேகம், குறிப்பிட்ட தொகைக்குச் சீட்டு எடுக்கும் விருப்பம்<br>6. கேள்வி அறிவித்தல், ஒப்பந்தப்புள்ளி கோரும் அறிவிப்பு | Kelkkal, Ariv, Bodhya Ppedal, Ariyippu, Prasidhi |
| 106 | கொட்டா | 1. தடித்த கனமான ஓட்டினை உடைய உருண்டை வடிவ விதை<br>2. உத்திராட்சம்<br>3. பெரிய உருண்டை வடிவம் | Kutta, vellam Koran upayogikkunnapathram, Varanda, Cheriya oru kaattu vriksham |
| 107 | கொதி | 1. வெப்பத்தால் சூடாகி ஆவியாகும் நிலைக்கு வருதல்<br>2. வெப்பநிலை சராசரியை விட அதிகமாக இருத்தல் | Aagraham |

| | | | |
|---|---|---|---|
| | | 3. மிகுந்த கோபமடைதல் | |
| 108 | கொள்ளு | 1. தட்டையான வெளிர் பழுப்பு நிற தானியம்<br>2. அந்தத் தானியத்தை தரும் செடி | Varambu, Kayyala, Manchumaru, Moola, Muthira |
| 109 | கொள்ளை | 1. பொருள் அல்லது பணம் அபகரிக்கும் செயல்<br>2. மிகுந்த | Kavarcha, Aadhikyam,Orinam devadharu vriksham |
| 110 | கோட்டம் | 1. நிர்வாக வசதிக்காகப் பிரித்திருக்கும் பிரிவு<br>2. வருவாய் நிர்வாகப் பிரிவு<br>3. நினைவாலயம் | Valavu, Cherivu, Prashnam, Ksheenam, Tholvi, Thadavara |
| 111 | கோலம் | 1. புள்ளி வைத்துக் கோடு இழுத்து உருவாக்கும் அலங்கார வடிவம் | Akruthi, Roopam, Vesham, Kovilakam |
| 112 | கோழி | 1. முட்டைக்காகவும் இறைச்சிக்காகவும் வளர்க்கப்படும் கொண்டை அற்ற பெண் இனம் | Orinam Pakshi, Vidan, Vishaya lambadan |
| 113 | சக்கை | 1. சாறு, சதைப்பகுதி போன்றவற்றை எடுத்தபிறகு எஞ்சியிருப்பது<br>2. பலாப்பழத்தில் களையை நீக்கியபின் எஞ்சியிருப்பது<br>3. வெடிமருந்து நிரப்பப்பட்ட குழாய் | Plavinte Kaaya, Vilakuranjath, Nindha soochakamaya oru Padham |
| 114 | சங்கல்பம் | 1. ஒருவர் மேற்கொள்ளும் தீர்மானம்<br>2. முடிவு<br>3. உறுதி | Manassilo Hrudayathilo Roopam kollunna Vasthutha, Kalppana, Icha, Abhilasham, Niyathamaaya, Udhesham |
| 115 | சங்கு | 1. மெல்லுடலி இனத்தைச் சார்ந்த கடல்வாழ் உயிரினத்தின் ஓடு<br>2. பாலாடை<br>3. நீண்ட உரத்த ஒலியை | Shangu, Kazhuthinte munbaagam, Hrudhayam |

| | | | |
|---|---|---|---|
| | | எழுப்பும் மின்சாதனம்,<br>கழுத்து | |
| 116 | சத்து | 1. ஊட்டம் தரும் பொருள்<br>2. பொருள் செறிவு<br>3. திடம், வலிமை | Maranam |
| 117 | சந்தி | 1. குறிப்பிட்ட இடத்தில் திட்டமிட்டபடி பார்த்துப் பேசுதல்<br>2. நேருக்கு நேர் பார்த்தல், எதிர் கொள்ளுதல், எதிர்கொண்டு செயல்படுதல்<br>3. அனுபவிக்க, பெற, பார்க்க நேர்தல், சேர்தல்<br>4. சாலைகள் கூடுமிடம்<br>5. அந்தி மாலைப்பொழுது | Aasanam, Prushdam |
| 118 | சப்பி | 1. பதர் | Chappuka Ennathinte Bhoothakaala Roopam |
| 119 | சப்பு | 1. வாய்க்குள் வைத்து அழுத்தி உறிஞ்சுதல்<br>2. வடிதல், குறைத்து அமுங்குதல்<br>3. குதப்புதல் | Cheetha, Swadhillatha, Kariyila, Theyilayude kilunth, Kaadu |
| 120 | சம்சாரம் | 1. குடும்பம்<br>2. குடும்பத்துடன் நடத்தும் வாழ்க்கை<br>3. மனைவி | Loukika Jeevitha kramam, Lokam, Maaya, Sambhashanam |
| 121 | சம்சாரி | 1. குடும்பத்தை உடையவர்,குடும்பஸ்தன்<br>2. நிலத்தில் பயிரிடுபவர், விவசாயி | Samsaarathdoou, Bhandhappetta, Loukikamaya |
| 122 | சமயம் | 1. ஒரு மதம்<br>2. மதத்தின் உட்பிரிவு | Kaalam, Muhoortham, Aana, Shadadham, Udambadi, Kalppana |
| 123 | சமையல் | 1. உணவு தயாரித்தல்<br>2. உணவு | Aniyippu, Aabharanam, |

பொதுச்சொற்கள் என்னும் வகைப்பாட்டில் தமிழ் மலையாள ஒற்றுமையை ஆராய்கிறது.

- தமிழ் மலையாள பேச்சுவழக்கில் பலசொற்கள் ஒலி வடிவத்திலும், சொல்வடிவத்திலும், பொருளிலும் ஒன்றுபட்டதாகவும், வேறுபட்டதாகவும் காணப்படுகின்றன.
- பழங்காலத்தில் சேரநாடாக இருந்து மொழிவாரியாகப் பிரிக்கப்பட்டபோது கேரளா தனி மாநிலமாக மாறியது. இந்த மாநிலத்தில் மலையாளம் பேசுபவர்களே முதன்மையாக இருக்கின்றனர். இங்கு வாழக்கூடிய தமிழர்களில் பெரும்பான்மையும், பழங்காலந்தொட்டு வாழ்ந்து வந்தவர்கள். குறைவான மக்கள் மட்டுமே பொருளாதாரத்திற்காக இடம் பெயர்ந்தவர்களாக இருக்கின்றனர் என்பது இவ்வாய்வில் கண்டறியப்பட்டிருக்கிறது.
- கேரளத்தில் வாழக்கூடிய தமிழ் மக்கள் மற்றும் எல்லையோர மாவட்டங்களின் புவியியல் அமைப்பை மாவட்ட வாரியாகப் பிரித்து அவர்கள் உற்பத்திச் செய்யும் உற்பத்திப் பொருள்களை அட்டவணை மூலம் விளக்கப்பட்டுள்ளன.
- எல்லையோர மாவட்டங்களில் வாழக்கூடிய தமிழ் மக்களுள் சிலர் இரட்டைக் குடியுரிமைப் பெற்றவர்களாக இருப்பதை ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டது. மேலும் கலாச்சாரம் பண்பாட்டுச்செயல் முறைகள் இன்றும் தமிழ்நாட்டோடு நெருங்கிய தொடர்பு இருப்பதையும் இதன் மூலம் அறியலாம்.
- கேரளத்திற்கு இடம்பெயர்ந்தவர்கள் எல்லாம் தமிழ்நாட்டில் உள்ள சில குறிப்பிட்ட மாவட்டங்களைச் சார்ந்தவராக இருப்பதை (தேனி, திருநெல்வேலி, தென்காசி, கன்னியாகுமரி) அதாவது தமிழ்நாட்டில் உள்ள தென்மாவட்டங்களில் இருந்து இடம்பெயர்ந்தவர்களாக இருக்கின்றனர். இதனடிப்படையில் இருமொழிச்சூழல், மொழிப்பற்று, எல்லைகள் வரையறை, கல்விச்சூழல், மற்றும் அரசியல் பின்புலம் போன்றவற்றைக் கண்டறியப்பட்டுள்ளன.
- சேரநாட்டின் தொடர்ச்சியாக இன்றும் மலையாள மொழியில் அதிகமான தமிழ்சொற்கள் மற்றும் ஊர்ப்பெயர்கள் தமிழிலேயே அமைந்திருப்பதை அறியமுடிகிறது. இருமொழியிலும் வட்டார வழக்கு மற்றம் பேச்சுவழக்குப் பயன்பாடு குறைவதற்குக் காரணம்

செய்தித்தாள் மற்றும் ஊடகங்களின் பொதுத்தன்மைப் பெருகியதனால்தான் என்பது இவ்வாய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

- தமிழ் மலையாளமொழிகளில் பொதுச்சொற்கள் என்பதைத் தவிர்க்க முடியாத ஒன்றாக இருக்கிறது. தமிழ், வடமொழிச் சொற்களைக் குறைவாகவும், மலையாள மொழி வடமொழிச் சொற்களை அதிகமாகவும் கடன்பெற்று இருக்கிறது என்பதைப் பயன்பாட்டின் அடிப்படையில் எடுத்துரைக்கிறது.
- தமிழ் மலையாள மொழிகளின் வேர்ச்சொல் இருமொழியிலும் ஒன்றுபட்டு இருக்கிறது.
- தமிழில் நகரத்தை முதலாகக் கொண்ட சொல்லும், மலையாளத்தில் ஞகாரமாக கொண்ட சொல்லும் 'யான்' என்ற சொல்லிலிருந்து ஒலிக்கிறது.
- தமிழ் மலையாளத்தில் காணப்படும் சில பொதுச்சொற்கள் முதல் எழுத்து திரிந்து ஒரே பொருளைத் தருவதை எடுத்துரைக்கிறது (ஆப்பம்/அப்பம்) (பிட்டு/புட்டு).
- தமிழில் வழக்கிழந்த பொதுச்சொல் மலையாளத்தில் முதன்மை பொருளாக இருப்பதை இவ்வாய்வால் அறியலாம்.
- தமிழில் பெயர்ச்சொல்லின் இறுதியில் நெடிலாக வருவது மலையாளத்தில் குறிலாக வருகிறது.
- தமிழில் பால்காட்டும் விகுதிகள் இருக்கின்றன. மலையாளத்தில் பால்காட்டும் விகுதிகள் இல்லை.
- மலையாளத்தில் கொல்லம் ஆண்டையும் (கி.பி.823) தமிழில் கடைப்பிடிப்பதால் மாதங்களின் வரிசைமுறை வேறுபாடு உடையதாகக் காணப்படுகின்றது என்பது ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளது.
- தமிழில் பெயராகவும், வினையாகவும் வரக்கூடிய ஒலியொற்றுமையுடைய சொல் மலையாளத்தில் பெயராக மட்டும் வருவது அறியப்படுகின்றது.
- தமிழில் இலக்கியப் பொருளாக இருப்பது, மலையாளத்தில் முதன்மைப்பேச்சுவழக்காக இருக்கின்றது. (மடி-சோம்பேறி)
- ஒற்றுமையுடைய சொற்களில் சில இருமொழியிலும் எதிர்மறையான பொருளை உணர்த்துகின்றது. (தாத்தா)

- மொழி என்பது இடத்திற்கு இடம், வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபடக்கூடியது என்பதை இடுக்கி, பாலக்காடு, திருவனந்தபுரம் போன்ற மாவட்டங்களின் தனித்தன்மையான சொற்களை வைத்து அறிய முடிகின்றன. மேலும் இச்சொற்கள் பயன்பாட்டுக் காலத்தையும், பயன்பட்ட இடத்தையும் இவ்வாய்வின் வழி நிலைநாட்ட முடிகின்றது.
- மொழி மாற்றத்திற்கான காரணங்களாக ஜாதி, மதம், ஆண், பெண் பாகுபாடு, தொழில், வயது, நிலவியல் பின்னணி, தனி மனித மாறுபாடு போன்றவை விளங்குகின்றன.
- இலக்கண அறிவு பேச்சுமொழியிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகச் கண்டறியப்பட்டுள்ளன.
- மொழியியல் அடிப்படையில் தமிழ் மலையாளப் பேச்சு மொழிச் சொற்கள் மாற்றமடைகின்றன என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.
- மலையாளத்தில் முதன்மைச் சொல்லாக வருவது தமிழில் திசைச்சொல்லாக வந்து பேச்சுவழக்கில் பயன்படுகிறது.
- பன்மையைக் குறிக்கும் சொற்கள் பேச்சுவழக்கில் ஒருமையாகவே பயன்படுகின்றன.
- எல்லாச் சொற்களும் பொருள் குறித்தாலும், சில சொற்கள் காரணத்துடனும், சில சொற்கள் காரணமில்லாமலும் பொருள் வரையறுக்கிறது என்பது இவ்வாய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளது.
- சூழற் பொருட்கொள்கைக்கு முதன்முதலில் அடிக்கல் நாட்டியவர் தொல்காப்பியர் என்பதைத் தொல்.சொ.சூ.158ன் வழி அறிய முடிகின்றது.
- எல்லா சொற்களும், பொருள் உணர்த்துவது என்பது சூழலை அடிப்படையாகக் கொண்டுதான் என்பது ஆய்வின் வழிக் கண்டறியப்பட்டுள்ளன.
- தமிழ் பேச்சுவழக்கில் பொதுவாகப் பயன்படுத்தக்கூடியச் சொல்லின் பொருள் மலையாளத்தில் வடக்கன் கேரளம், தக்கன் கேரளம் எனப் பிரிக்கப்பட்டு இரு வேறு பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

- பாட்டி என்பதே பட்டி என மாற்றம் பெற்றிருக்கிறது என்பதைப் பட்டியின் பொருளை வைத்தும், தொல்காப்பியத்தை வைத்தும் அறியமுடிகிறது.
- குறிப்பிட்ட சொற்கள் மட்டுமே நிலையான பொருளை உணர்த்துகின்றன. பெரும்பான்மையான சொற்கள் காலத்திற்கேற்பவும், சூழலுக்கேற்பவும் பொருளை மாற்றிக்கொண்டே இருக்கின்றன என்பதை இவ்வாய்வு எடுத்துரைக்கிறது.
- சொற்பொருள் மாற்றத்திற்கான காரணங்களாக மொழியியல் காரணங்கள், வரலாற்றுக் காரணங்கள், சமூகக் காரணங்கள், உளவியல் காரணங்கள், அயல்நாட்டுச் செல்வாக்கு, போன்றவை காரணமாக அமைகின்றன.
- வடமொழிச் சொற்கள் தமிழ், மலையாள மொழிகளில் ஒன்றுபட்டாலும் இருவேறு பொருள்களை உணர்த்துகின்றன.
- தற்சமச்சொற்களை அதாவது வடமொழிச் சொற்களைத் தற்பவமாக மாற்ற முடிகின்றன. மலையாளத்தில் மாற்றமின்றி அப்படியே பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்பதை இவ்வாய்வால் அறியலாம்.

# மேலாய்வுக்களன்கள்

- தமிழ் மலையாள ஒலியொற்றுமைப் பொருள் வேற்றுமையுடைய சொற்களின் அகராதி உருவாக்குதல்.

- எல்லையோர மக்களின் சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளை ஆராய்தல்.

- காலந்தோறும் தமிழ் மலையாள மொழிகளில் ஏற்படும் பொருள் மாற்றத்தை ஆராய்தல்.

- எல்லையோர மக்களின் பேச்சுமொழியில் காணலாகும் திராவிட மொழிகளின் கூறுகளை ஆராய்தல்.